

# ஓஹோ, உன் பணத்தை ஒளித்து வைத்திருக்கும் இடம் அதுதானா!

ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவிலே உங்கள் குழந்தைக்கு ஸேவிங்ஸ் பாங்க் கணக்கு ஒன்றைத் துவக்கி, 'திடமான பாதுகாப்புள்ள வாழ்க்கைக்கு ஆரம்பம் அளியுங்கள். செக் வசதியமைந்த, வயதுவராதோர் (மைனர்) சேமிப்பு பாங்குக் கணக்கைக் கீழ்க்கண்டவாறு துவக்கலாம்:-

(அ) வயதடையும் வரை (மேஜராகும் வரை) அக் குழந்தையின் சொந்தப் பாதுகாப்பாளரோ, நீதிமன்றத்தினால் நியமனம் பெற்ற பாதுகாப்பாளரோ அவனுடைய அக்கவுண்டை நிர்வகிப்பர்; வயதுவரும் போது தானாகவே அவன் அக் கணக்கை மேற்கொள்ளத்துவங்குவான்.

(ஆ) 14 வயதோ, அதற்கு மேற்பட்டோ உள்ள சிறுவர்கள் தாமாகவே 'பணம் போடவும் எடுப்பதற்குமான ஏற்பாடு.

## சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்

*LPE-Aiyars. S.1997 T*

# கல்கி பொருளடக்கம்



தாயாருடைய கடாக்ஷம் குழந்தைகளிடத்தில் விழும். பிரபஞ்சத்தில் இருக்கும் எல்லாப் பிராணிகளும் குழந்தைகள். எல்லாவற்றிற்கும் தாயாக இருப்பவள் ஜகன்மாதாதான். புல் பூண்டு முதற்கொண்டு எல்லாம் தேவியின் குழந்தைகளே. பிரபஞ்சத்துக்கு எல்லை யில்லை. அவள் கடாக்ஷத்துக்கும் எல்லை இல்லை.

— ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள்
காஞ்சி காமகோடி பீடம்

விசுவாவசு புரட்டாசி 10–செப்டம்பர் 26



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

உன் சுதந்திரம்
ஆபத்தான நிலையிலிருக்கிறது

பாக்
ஆக்கிர
மிப்பு

காங்கிரஸ்
ஆட்சி
ஆதிக்கம்

மக்கள்

PK





மலர் 25 ★ இதழ் 9

# ராஜநீதியிலும் தீரம் காட்டுவோம்

ராஜாஜி

மதிப்புக்குகந்த ஹாமர்ஷீல்டு அவர்களை அடுத்து, ஐ. நா. பிரதம காரியதரிசி பதவி வகிக்கும் மதிப்புக்குரிய ஊ தாண்ட் அவர்கள் வெறுங்கையுடன் நியூயார்க் திரும்ப நேர்ந்து விட்டது.

'எதிராளி இணங்கினால் தானும் இப்போதே போரை நிறுத்தத் தயார்; தற்போது படைகளுள்ள இடத்திலிருந்து முன்னேறுவதில்லை' என்று இந்திய சர்க்கார் கூறியதற்கு மகிழ்ச்சியடைய வேண்டும். நாம் இவ்வாறு செய்தால், ஊடுருவல் குற்றம் செய்து, அதன் மீது ஆக்கிரமிப்புத் திட்டங்களை வகுத்துக் கொண்டுள்ள பாகிஸ்தான், சர்வதேசப் போர் நிறுத்தக் கோட்டை துராக்கிரகமாகத் தாண்டித் தற்போது வசப்படுத்திக் கொண்டுள்ள இடங்களில் தனது கட்டுப்பாட்டை இழக்கும். பாகிஸ்தானின் குற்றத்துக்கு இது ஒரு சரியான தண்டனையாய் அமைந்திருக்கும். தற்போது படை நிலைகள் உள்ள ஸ்தானங்களிலேயே போர் நிறுத்தம் செய்வதோடு, போர் நிறுத்தக் கோட்டை மீறிய பாகிஸ்தான் அதனால் ஏற்பட்ட விளைவுகளுக்கு நஷ்டஈடும் தரவேண்டுமென்பது என் கருத்து.

ஆயினும் நாம் உடனடி போர் நிறுத்தத்துக்கு இணங்குவதோடு நின்றிருக்கக் கூடாது. போர்முனையில் வீரம் காட்டி நாம் பெற்று வரும் வெற்றிக்கு நிகராக ராஜநீதியிலும் தீரம் காட்டியிருந்தால் விளைவுகள் வேறாக இருந்திருக்கும். எதிராளியை எதிர்பாராமல், ஒருதலைப்பட்சமாக நடவடிக்கை எடுப்பதற்குத் தீரம் வேண்டும். இந்தியா இந்தத் தீரத்தைக் காட்டியிருக்குமாயின் பாகிஸ்தானும் அதனைப் பின்பற்றும்படி தருமம் அதனைக் கட்டுப்படுத்தியிருக்கும். இப்போது இந்தியாவுக்கு உதவ விருப்பமில்லாத நாடுகள் யாவும் இந்த நெருக்கடி நிலைமையில் நம் தரப்புக்கு வந்திருக்கும். பாகிஸ்தானின் முறையின்மைக்குத் தக்க தண்டனையை அது பெற வேண்டும் என்று நான் கூறிய போதிலும், இதனாலேயே நாம் உண்மையான பிரச்னையை இம்மியேனும் தீர்த்ததாகப் பிரமை கொள்ளக் கூடாது. ஆக்கிரமிப்பை நாம் வெற்றிகரமாக எதிர்த்து நிற்பது உண்மை. இப்போது இந்திய ராணுவம் காட்டும் வீரத்தினால், 1962-ம் ஆண்டு இறுதியில் சீனப் படையெடுப்பின் போது குலைந்துபோன மக்களின் நம்பிக்கையை ஒழுங்காக உருவாக்கி நிலைப்படுத்தியிருப்பதும் உண்மை. ஆனாலும் முக்கியமான பிரச்னை மாறுமலே, தீராமலே இருக்கிறது. ஒரு மக்கட் சமுதாயத்தின் சம்மதத்தின் பேரிலேயே நாம் ஆட்சி நடத்தி வருகிறோம் என்பதை உலக நாடுகளுக்கு வெளிப்படையாகப் புலப்படுத்தாமல் நமது ஆதிக்கத்தை நீடிக்க முடியும் என்று நினைப்பது அறிவுடைமையாகாது. காச்மீரத்தைப் பற்றிய எந்த முடிவும் அம்மக்களின் சுய நிர்ணய உரிமையின் மீதே எடுக்கப்படுவதோடு, அவ்வாறுதான் முடிவெடுக்கப்படுகிறது என்பதை வெளி உலகுக்கும் நிச்சயமாகத் தெரியப்படுத்த வேண்டியதே நீதியும் அரசியலுமாகும்.



தமிழ்த்திரு நாடுதன்னைப்
பெற்ற
தாயென்று கும்பிடடி —
பாப்பா
— பாரதியார்

''சரித்திரத்தின் ஓர் அசாதாரணமான சூழ்நிலை காச்மீரத்தை இந்தியாவுக்குத் தந்தது. காச்மீரிகளில் பெரும்பான்மையோர் முஸ்லிம்கள். ஆனால் அவர்களின் அரசர்கள் பரம்பரையாக ஹிந்துக்களாகவே இருந்தனர். சண்டை ஏற்பட்டபோது 1947ல் காச்மீரத்தின் ஹிந்து மன்னர் இந்தியாவோடு இணைந்தார். அதன் பின்னும் உண்மைச் சமாதானம் ஏற்படவில்லை. இந்தியா இன்னும் பொதுஜன வாக்கெடுப்பு நடத்த மறுக்கிறது. காச்மீர மக்களுக்கு வாய்ப்புக் கிட்டுமாயின் அவர்கள் பாகிஸ்தானைத் தேர்ந்தெடுப்பதே பெரும்பாலும் சாத்தியம். சகோதர முஸ்லிம்கள் வாழும் பாகிஸ்தானுடன் சேர விரும்பும் ஒரு முஸ்லிம் சமுதாயத்தை ஆயுத பலத்தினால் இந்தியா சிறைப்படுத்தி வைத்துள்ளது என்பதே பாகிஸ்தானின் கருத்து.''

இவ்வாறு U. S. News and World Report என்ற அமெரிக்கப் பத்திரிகையின் செப்டம்பர் 13ந் தேதி இதழ் பலமான, தெளிவான வார்த்தைகளில் கூறியுள்ளது. பதின்மூன்றரை லட்சம் பிரதிகளுக்கு மேல் செலாவணியுள்ள ஒரு முக்கியமான பத்திரிகை இது. சுய விருப்பு — வெறுப்பு கலவாத கருத்து இது என்று கூற முடியாது. ஆயினும் உலகில் இப்படி அபிப்பிராயம் இருப்பதைக் கவனிக்க வேண்டும். இங்கிலாந்தின் பிரபல பத்திரிகையான 'கார்டியனி'ல் எழுதியுள்ள கிரிக் என்ற பிரபல நிருபர், 'இந்தியா ஜனநாயகப் பண்புக்கேற்பவும், மதச் சார்பு இல்லாமலும் பிரச்னையை அணுகுகிறது. பாகிஸ்தானோ மத உணர்வின் மீதே காச்மீர ஆட்சி உரிமையைக் கோருகிறது' என்று கூறி பாகிஸ்தானைக் கண்டனம் செய்திருக்கிறார். எனினும் குறிப்பிட்ட மக்கட் தொகையில் பெரும்பான்மையோர் ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்தவர்கள் என்பது, அவர்கள் எத்தகைய சர்க்காரைத் தேர்ந்தெடுக்க விரும்புகிறார்களோ அது பற்றிக் கருத்துத் தெரிவிப்பதற்குத் தடையாகாது. மதம் என்ற ஒரு காரணம் மட்டுமின்றி வேறு வேறு காரணங்களுக்காகவும் ஒரு முஸ்லிம் சமுதாயம் வேறொரு முஸ்லிம் நாட்டுடன் இணையுமானால் அதை அனுமதிக்கத்தான் வேண்டும் என்று கருதுவோரும் இருக்கிறார்கள். மொத்தத்தில் அமெரிக்கர்களும் வேறு ஏராளமான மக்களும், காச்மீர மக்களுக்கு வாய்ப்புக் கிடைத்தால் அவர்கள் பாகிஸ்தானுடன் சேருவதே முக்காலும் சாத்தியம் எனவும் அவர்கள் ஆயுத பலத்தினால் அடக்கப்பட்டிருக்கின்றனர் எனவும் நம்புகின்றனர். இத்தகைய ஓர் ஐயத்தை அழுத்தமான முறையில் நாம் அகற்றவேண்டாமா என்பதே கேள்வி. உலக அபிப்பிராயத்தை இப்படியே விட்டு வைத்திருப்பது எந்த நோக்கிலிருந்து பார்த்தாலும் சாதுரியமாகாது. இந்தத் திசையில் நாம் எதிராளியை எதிர்பாராமல் தீரத்துடன் ஒரு தலைப்பட்ச நடவடிக்கை எடுத்து அதன் விளைவாக சர்வ தேசக் கருத்தைச் சாதகமாக்கிக் கொண்டால், அது நம்முடைய கௌரவத்தை விட்டுக் கொடுத்ததாகாது.

ஆக்கிரமிப்பை வெற்றிகரமாக முறியடிப்பதாலோ, பிரச்னை குறித்து மௌனம் சாதிப்பதாலோ, கொள்கைகளை ஊறப் போடுவதாலோ, ஐ.நா.வில் மற்ற நாடுகளின் சாதகமான வோட்டைப் பெறப் பிரசாரம் செய்வதாலோ, காலத்தின் போக்கினாலோ இந்தப் பிரச்னை தீராது. தீர்வு காணுவதற்கு ஃபிலிப் ஸ்ப்ராட் அவர்கள் ஆகஸ்ட் 28-ந் தேதி 'ஸ்வராஜ்யா'வில் உபாயம் சொல்லியிருக்கிறார். அவர் கூறுவதாவது:

> பாகிஸ்தானுடன் இடைவிடாது நடைபெற்று வரும் பூசல் தீர, ஓர் எளிய, நிச்சயமான வழி உண்டு. காச்மீரத்தில் பொதுஜன வாக்கெடுப்பு நடத்துவதாக நேரு அவர்கள் திரும்பத் திரும்ப அளித்த வாக்குறுதியை மதிப்பதே அது. பாகிஸ்தானுடன் கூட்டாகவோ அல்லது இரு நாடுகளும் ஏற்கின்ற நடுநிலைமை நாடுகளின் மேற்பார்வையிலோ வாக்கெடுப்பு நடத்தலாம். இது சாத்தியமல்ல எனத் தோன்றினால் இந்தியாவின் வசமுள்ள காச்மீரப் பகுதியில், பாகிஸ்தானும் ஏனைய உலக நாடுகளும் மதிப்பு வைத்துள்ள ஓர் ஆணைக் குழுவின் கீழ் வாக்கெடுப்பு நடத்துவது பயன் அளிக்கக் கூடும். விநோபாபாவே அவர்களோ, விரைவில் இந்தியா வரவிருக்கும் அப்துல் கஃபார் கான் அவர்களோ மேற்பார்வையிடலாம்; ஃபிலிப்பைன்ஸ் போல் இந்தியா-பாகிஸ்தான் இரண்டிடமும் நட்புக் கொண்டுள்ள ஓர் ஆசிய நாட்டினரை வாக்கெடுப்புக் குழுத் தலைவராகக் கொள்ளலாம். காச்மீரத்தில் மூன்று முக்கியமான கோஷ்டிகள் இருக்கின்றன — இந்தியாவுடன் நீடிக்க விரும்புகிறவர்கள், பாகிஸ்தானுடன் சேர விரும்புகிறவர்கள், சுதந்திரமாக இருந்து இரு நாடுகளிடமிருந்தும் உதவி பெற விரும்புகிறவர்கள். வாக்கெடுப்பில் மூன்று வாய்ப்புக்களும் அளிக்கப்பட வேண்டும். ஜம்மு, காச்மீரம் இரண்டின் முக்கியமான பகுதிகளிலும் உள்ள மக்களின் கருத்தை அறிந்து அவர்களிடம் பொருத்த மன வித்தியாசம் இருப்பின் பிரிவினை பற்றியும் ஆலோசிப்பதற்கு இவ்வாக்கெடுப்பு உதவ வேண்டும்.
>
> இந்த யோசனைக்கு எத்தனையோ ஆட்சேபங்கள் உண்டு என்பது யாவருக்கும் தெரியும். ஆனால் வேறு வழிதான் என்ன? மக்களின் சம்மதத்தின் பேரிலேயே ஆட்சி நடக்க வேண்டுமேயன்றி பலாத்காரத்தின் மூலமல்ல என்பதையும், **இது இவ்வாறே உலகின் கண்களுக்குத் தெரிய வேண்டும்** என்பதையும், ஆபத்தை முன்கூட்டியே தடுக்க வேண்டும் என்பதையும் கருத்தில் கொண்டால், மேற்சொன்ன யோசனை தவிர வேறு வழிதான் என்ன?

ஸ்ப்ராட் அவர்கள் குறிப்பிடும் பெருமக்களைப் போலவே பட்சபாதமற்றவர்களாக வேறு யாரேனும் திடமாகக் கருதப்பட்டால் அவர்களைக் கொண்டு வாக்கெடுப்புக் குழு நிறுவலாம். இந்தியாவுடனோ பாகிஸ்தானுடனோ சேர விரும்புகிறார்களா, ஐ. நா— இந்தியா — பாகிஸ்தான் இவற்றின் காப்பில்

தனிச் சுதந்திர நாடாக இருக்க விரும்புகிறார்களா என்பது குறித்துக் காச்மீர மக்களின் கருத்தை அறிவதே நமது வெற்றிகளை அடுத்துச் செய்ய வேண்டிய முக்கியமான காரியம்.

இன்றைய இந்தியா—பாகிஸ்தான் நிலைமையைத் தங்களுக்கு அநுகூலமாக முற்றிலும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதில் செஞ்சீனமும் இந்தோனேஷியாவும் முனைந்துவிட்டன. இதில் ஐயமில்லை. ஓரளவுக்கோ பூரணமாகவோ அவை பாகிஸ்தானுக்கு உடந்தையாக இருக்கக் கூடும். போர் நீடிக்க வேண்டும் என்பது அவற்றின் ஆசை. சீனாவின் குறிப்பை மறுத்துப் பாரதப் பிரதமர் கூறிய பதில் மிகவும் யுக்தமானது.




இந்தக் கட்டுரையில் கூறியுள்ள யோசனைப்படி நாம் திரமாக அடியெடுத்து வைத்தால் கம்யூனிஸ்டுச் சீனத்தின் திட்டம் முறியடிக்கப்படும். சிலர் தவருக வியாக்கியானம் செய்யக் கூடுமெனினும், வாஸ்தவத்தில் இங்கு சொல்லியுள்ள யோசனை காச்மீரத்தைப் பாகிஸ்தானுக்கு விட்டுக் கொடுக்குமாறு கூறவில்லை. காச்மீர மக்கள் மூன்று வழிகளில் ஏதேனுமொன்றைச் சுதந்திரமாகத் தேர்ந்தெடுக்க உதவ வேண்டும் என்பதே இங்கு கண்டுள்ள யோசனை. இந்த நெருக்கடியில் இந்தியாவை அச்சுறுத்திவிடச் சீனம் முயன்றால் அது தன்னை மிஞ்சிய காரியத்தில் ஈடுபட்டதாகவே ஆகும். சீனத்தின் செயலால், கம்யூனிஸ்ட் சீனத்தின் ஏகாதிபத்தியப் பரவுதலை விரும்பாத எல்லா நாடுகளும் அரசாங்கங்களும் தங்களிடையே பரஸ்பர உதவியை நன்கு பலப்படுத்திக் கொள்ளும். வெளியிலிருந்து கிடைக்கக் கூடிய எல்லா உதவிகளைக் கொண்டும், தனது படைபலத்தைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டும் சீனத்தின் படையெடுப்பை இந்தியா தடுத்து நிறுத்த வேண்டும்.

# அடுத்தபடி என்ன?

இவ்விதம் அச்சுவாகனம் ஏறுகிற தருணத்தில் ''அடுத்தபடியாக என்ன நடக்கும்?'' என்று உலக நாடுகள் அனைத்தும் கவனிக்கும் இரு முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்துள்ளன.

ஸிக்கிம் — திபேத் எல்லையில் உள்ள இந்திய ராணுவ அமைப்புக்களை அகற்றுவிடில் சீனு தீவிரமான எதிர்ப்பு நடவடிக்கை எடுக்குமென மிரட்டல் வெளியாகியுள்ளது. இந்த மிரட்டலுக்குப் பாரதப் பிரதமர் மிகவும் சரியான முறையில் பதில் அளித்திருக்கிறார். சீனப் பகுதியில் இந்திய ராணுவக் கட்டுமானம் எதுவுமே கிடையாது என்றும், எனினும் இப்பகுதியில் இரு நாடுகளும் கூட்டுத் தணிக்கை செய்யலாம் என்றும் அவர் கூறியிருப்பதைத் தரும நியாயமறிந்த எந்த நாடும் ஒப்புக்கொண்டாக வேண்டும். ஆனால் சீனுவிடம் இந்தத் தரும நியாயத்தை எதிர்பார்க்க முடியுமா என்பது சந்தேகமே. இந்த நிலையில் அது போர் நடவடிக்கை மேற்கொண்டு பாகிஸ்தானின் கையைப் பலப்படுத்துமாயின் அதற்கு இந்தியா அஞ்சாது முகம் கொடுக்கும் என்றும் பிரதமர் கூறியிருப்பதை நாடு முழுதும் ஆமோதிக்கிறது.

மற்றொரு முக்கியமான நடப்பு, ஐ. நா. வில் பிரதம காரியதரிசி ஊ தாண்ட் அவர்கள் பிரேரித்துள்ள தீர்மானம். இதில் முக்கியமான அம்சம், உடனடியாக இந்தியாவும் பாகிஸ்தானும் போர்நிறுத்தம் செய்ய வேண்டும் என்பதாகும். இதற்கு ஏற்கனவே இந்தியா ஒப்புக்கொண்டுள்ளது. ஆனால் பாகிஸ்தான் முன்—நிபந்தனைகள் விதித்தது. எனவே இப்போது உலக அரங்கில் யார் சமாதானத்தை உண்மையாகவே விரும்புகிறார்கள் என்பது வெளியாகி நமது மதிப்பு உயரும். ஐ. நா. பாதுகாப்புச் சபை இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றினால் அதன் தார்மீகக் கட்டுப்பாட்டுக்கு இரு நாடுகளும் எந்த அளவில் உடன்படும் என்பதைப் பொறுத்தே உலக நாடுகளின் அநுதாபம் அமையும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

கருமேகத்தைச் சுற்றியும் வெள்ளி விளிம்பு காணப்படுவதுண்டு. இந்தியா—பாகிஸ்தான் போரினாலும் சில நல்ல விளைவுகள் ஏற்பட்டுள்ளன. மூன்றாண்டுகளுக்குமுன் சீனா படையெடுத்தபோது சிதிலமான நம் ராணுவத்தின் கௌரவம் இப்போது அரிய முறையில் நிலைநாட்டப்பட்டுள்ளது. ஜெனரல் அயூப்கானின் தீர்க்காலோசனையற்ற படையெடுப்பின் காரணமாக இந்திய ராணுவத்தின் சிறப்பான தலைமையும், தீரமும், மனோதிடமும் வெளியாகியுள்ளன. நான்காம் திட்டத்தைப் பற்றி மாற்றங்கள் செய்யும் அதிகாரம் பிரதம மந்திரிக்கு அளிக்கப்பட்டிருப்பதால் அந்தத் திட்டம் கைவிடப்படக் கூடும். இதுவும் ஒரு நல்ல விளைவு.

எது எப்படியாயினும் வரிகள் மட்டும் அப்படியேதான் உள்ளன. திட்டம் போனாலும் வரிகள் போகா. பொருளாதார அறிஞர்கள் கூறுகிறபடி விலைவாசிகள் உயர்ந்து கொண்டே இருக்கும். விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவது ராஜ்ய சர்க்கார்களின் பொறுப்பு என்று மத்திய நிதிமந்திரி கூறிவிட்டார். அதாவது விலை உயர்வுக்கு வேண்டியவதையெல்லாம் செய்வது தம் கடமை என்றும், ராஜ்ய முதன்மந்திரிகள் வியாபாரிகளையும் உற்பத்தியாளர்களையும் கொடுமைப்படுத்தி விலைகளைக் குறைக்க வேண்டுமென்றும் நிதிமந்திரி நினைக்கிறார் போலும்!

* * *

நம்முடைய விருப்பத்துக்கு மாறாக யுத்தம் விஸ்தரித்தாலும், நாம் அதற்கு முகம் கொடுக்கத்தான் வேண்டும். இவ்வாறே நமது ராணுவம் செய்து வருவது பாராட்டுக்குரியது. தீரமிக்க நமது போர் வீரர்கள் செய்து வரும் சாதனைகளை ஏனைய மக்கள் புரிந்து கொண்டு புகழ்வதும் நன்றி தெரிவிப்பதும் மகிழ்ச்சிக்குரியது. யுத்த முயற்சிகளுக்கு ஊக்கமளிப்பது அவசியம். எனினும், இதில் முனிவர்கள், புத்தர், காந்தி, தாகூர் முதலியவர்களின் பெயரை இழுக்க வேண்டிய அவசியமில்லை. நாம் சமாதானப் பிரியர்களுடன் போராடவில்லை. நமது பொது மக்களின் கருத்தும் யுத்தத்துக்கு விரோதமாக இல்லை. எனவே, மகான்களின் பெயரைச் சொல்லி ஆதரவு பெற வேண்டிய அவசியம் ஏதும் இல்லை.

யுத்தம் என்பது பெரும்பாலும் தாற்காலிகமான பிரச்னைகளைப் பொறுத்தது. சாஸ்திரங்களும், மகான்களின் போதனைகளும் எக்காலத்துக்கும் பொதுவான நிரந்தர சத்தியங்களைப் பற்றியவை. பாகிஸ்தானுடன் நாம் நடத்தும் போர் உலக சரித்திரத்தில் ஒரு சிறிய துணுக்கு. ஆனால் பாபம், சபலம் முதலியவற்றை எதிர்த்து மனித குலம் நிரந்தரமாகப் போராட வேண்டும். நிரந்தரமான அகப்போரைக் குறித்த விஷயங்களை ராணுவப் போரில் இழுத்து ஆதரவு தேட வேண்டியதில்லை.

என்றேனும் ஒரு நாள் இந்தியாவும் பாகிஸ்தானும் சண்டையின்றிச் சமாதானத்தில் நெருங்கி வாழத்தான் வேண்டும். தற்கொலை செய்து கொண்டு செஞ்சீனத்துக்கு உணவாக வேண்டுமென விரும்பினாலன்றி நாமோ பாகிஸ்தானோ போரை விஸ்தரித்துக் கொண்டே இருப்பதற்கில்லை. பிரிவினைக்கு அப்புறம் இரு நாடுகளும் சமாதானமாக வாழும் என காங்கிரஸும் முஸ்லிம் லீகும் வாக்களித்தபின்தான் பிரிட்டன் தன் ஆட்சியை விட்டது. இவ்விரு நாடுகளும் சண்டையிட்டால் மூன்றாவது நாடு ஒன்றின் ஆதிக்கம் பரவும் என பிரிட்டன் உணர்ந்திருந்தது. 1947ல் காங்கிரஸும் முஸ்லிம் லீகும் செய்து கொண்ட இணக்கமான ஏற்பாடு இப்போது தாற்காலிகமாக ரத்தாகியுள்ளது. இருநாடுகளும் தொடர்ந்து சண்டையிட்டால் 'அதிகார சூனிய இடம்' ஒன்று தோன்றி அதில் வேறு நாடு புகுந்து காலூன்றி விடும்.

**ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்**
**வாடி இருக்குமாம் கொக்கு**

என்று 'வாக்குண்டாம்' கூறுவது போல், அத்தகைய ஒரு சந்தர்ப்பத்துக்கே சீனம் காத்துக் கொண்டிருக்கிறது.

* * *

"தலைக்கு மேல் ஜலம் போனவனுக்குச் சளியேது, நடுக்கமேது?" என்பது ஒரு தெலுங்குப் பழமொழி. அயூப்கானின் ஊடுருவலும் அதன் விளைவுகளும் காங்கிரஸ் சர்க்காரை எல்லாப் பொருளாதாரச் சிக்கல்களிலிருந்தும் காப்பாற்றி விட்டது! பண வீக்கம், விலையேற்றம் எல்லாவற்றுக்கும் இனிமேல் போரின் மேல் பழி போட்டு விடலாம்.

* * *

எல். ஐ. ஸி.யின் உபரி நிதிகளில் ஒரு பங்கைச் சர்க்கார் எடுத்துக் கொள்ளப் போகிறது. பொதுச் சொத்துக்களை நிர்வகிக்கும் 'டிரஸ்ட்' வேலை முறைகள் பற்றி மனச்சாட்சிப்படி சத்தியமான கருத்துக் கொண்டவர்கள் இது தவறு என்று கருதுகிறார்கள். ஆனால் ஆயுள் இன்ஷுரன்ஸைப் பொதுத் துறைக்குக் கொண்டு வந்தபின் வேறென்ன எதிர்பார்க்க முடியும்? பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் அரசாங்கம் பல பழைய நல்ல மரபுகளைக் கைவிடாமல் அவற்றுக்கு மதிப்பளித்து வந்தது. அவர்கள் சோஷலிஸ்டுகளாக இல்லாததால் இத்தகைய மரபுகளுக்கு மதிப்புத் தந்தார்கள். ரயில்வே வருமானத்தைச் சர்க்கார் ரெவினியூவுடன் சேர்க்காமல் வெகு நுணுக்கமாகத் தனிக்கணக்கு வைத்திருந்தார்கள். ஆனால் அதெல்லாம் இப்போது மறந்து போன கதையாகிவிட்டது. 'எல்லாம் சர்க்கார் ஆதீனம்; எல்லாப் பணமும் சர்க்கார் ரெவினியூ' என்கிற நிலையாகி விட்டது. பிரிட்டிஷ் ஆட்சி முறைக்கும் இன்றைய ஆட்சி முறைக்குமுள்ள இந்த வித்தியாசத்தின் சின்னமே சர்க்கார் வர்த்தகக் கார்ப்பொரேஷன்.

* * *

சிறிய விளம்பரங்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தைச் சார்ந்து வாழுகிற பிரதேச மொழிப் பத்திரிகைகளின் நிதிப் பிரச்னையை இந்திய சர்க்கார் போதிய அளவு புரிந்து

கொள்ளவில்லை எனத் தோன்றுகிறது. பெரிய கம்பெனிகளும், மார்க்கெட்டில் நிலைப்பட்டு விட்ட பண்டங்களை விற்பவர்களும் தமது விளம்பரச் செலவுகளைக் குறைத்துக் கொள்ளக் கூடும். ஆனால் வாடிக்கைக்காரர்களைப் பிடிப்பதற்கும், நல்ல பெயரைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் தீவிர முயற்சி எடுக்க வேண்டியவர்கள் தமது விளம்பரச் செலவைக் குறைப்பதற்கு இயலாது. பல போட்டிகளிடையே வாடிக்கை ஏற்படுத்திக் கொள்ள இவ் வியாபாரிகள் விளம்பரங்களுக்காகப் பெரும் செலவு செய்ய வேண்டியுள்ளது. இவர்களே பிரதேச மொழிப் பத்திரிகைகளின் வரவு — செலவு சரிக்கட்டிப் போவதற்குப் பெரிதும் உதவுகிறவர்கள். எனவே, விளம்பரச் செலவு பற்றி இப்போது ஏற்பட்டுள்ள கட்டுப்பாடுகளும், ஐயங்களும் இந்தப் பத்திரிகைகளைப் பலமாகப் பாதிக்கின்றன. இந்தப் பரிசோதனைகளில் ஈடுபட இதுவா சமயம்? இன்றைய நிலையில் பிரதேச மொழிப் பத்திரிகைகளை வாட்டமுறச் செய்வது சற்றும் சரியல்ல.

❀❀❀

பாதுகாப்பு முயற்சியைக் குறித்த சகல நடவடிக்கைகளிலும் சுதந்திரக் கட்சியின் எல்லா ராஜ்யக் கிளைகளும் முழு ஈடுபாட்டுடன் ஒத்துழைக்க வேண்டும், 'ஸிவில்' பாதுகாப்பு அதிகாரிகளுடன் ஒத்துழைக்க வேண்டும் என்று கட்சியின் பொதுக் காரியதரிசி அறிக்கை விடுத்திருக்கிறார். ஸெப்டம்பர் 6-ந் தேதியன்று பிரதம மந்திரி கூட்டிய சர்வ கட்சி விவாதத்தில் சுதந்திரக் கட்சித் தலைவர் ஆசாரிய ஸ்ரீ என். ஜி. ரங்கா கீழ்க்கண்ட முக்கியமான விஷயங்களை எடுத்துக் கூறினார். கூட்டத்தில் பங்கு கொண்ட அனைவரும் இந்த அம்சங்களைப் பாராட்டினர்:

(1) தொடர்ச்சியாகக் காச்மீரத்தில் நடைபெற்று வரும் ஊடுருவல்கள் மூலம் நிரூபணமாகி வரும் பாகிஸ்தானின் இட்டமிட்ட விஷமத்தனமான ஆக்கிரமிப்பை முறியடிப்பதற்காகவே நாம் பாகிஸ்தானுக்குள் நடவடிக்கை மேற்கொண்டுள்ளோம் என்பதையும், நமது லட்சியம் என்ன என்பதையும் உலகுக்கும் நம்மவருக்கும் தெளிவுபடுத்த வேண்டும்.

(2) பாகிஸ்தான் ஒரு நல்ல, சமாதானமான அண்டை நாடாக வாழ வேண்டுமேயன்றி, நம்மை உபத்திரவித்தும், நமது தேசிய, சமூக, பொருளாதார அபிவிருத்தியில் தலையிட்டும் வருவதை அது இனியும் நீடிக்க முடியாது என்று அதற்குப் புத்தி புகட்ட வேண்டும். இவ்வளவே நமது லட்சியமாக இருக்க வேண்டும். எனவே நமது இப்போதைய போர் இயக்கம் 'போலீஸ் நடவடிக்கை'க்குச் சமானமாகவே கருதப்பட வேண்டும். போலீஸ் நடவடிக்கைக்குரிய கால—தேச—வர்த்தமானக் கட்டுப்பாடுகள் இதற்கும் உண்டு. நம்முடைய போர் இலட்சியங்களைப் பற்றி அசாத்தியமான நம்பிக்கைகளை நமது மக்களுக்கு உண்டாக்கி அதனால் வேண்டாத விளைவுகளை ஏற்படுத்திக் கொள்ளக் கூடாது. பாகிஸ்தானின் எந்தப் பகுதியையும் பாரதத்துடன் சேர்த்துக் கொள்ளும் அபிப்பிராயம் நமக்கு இல்லை என்பதைத் தெளிவாக்க வேண்டும்.

(3) யுத்தம் எனில் சம்பந்தப்பட்ட அனைவருக்கும் இன்னல் விளையத்தான் செய்யும். நாம் வெற்றி பெற்றாலும் கூட, தோல்வி பெற்றோரை விடக் குறைவான நஷ்டங்களை அடைந்திருப்போமென்று தான் பொருளேயன்றி நஷ்டமே அடைய மாட்டோம் என்றாகாது. இரு தரப்புக்குமே பயங்கர நஷ்டம் ஏற்படும். எனவே சமாதானத்துக்குரிய எந்த வாய்ப்பேனும் கிட்டுமாயின் அதனைப் பற்றிக்கொள்ள நாம் விரைய வேண்டும்.

(4) தற்போது பாகிஸ்தான் ஆக்கிரமிப்பை எதிர்த்து நாம் எடுக்கும் நடவடிக்கைகள் குறித்து மக்கள் திருப்தி கொண்டு, உற்சாகம் காட்டுவதைக் கண்டு இந்தச் சூழ்நிலையையே நாம் மிகவும் சார்ந்து இருத்தல் சரியல்ல. ஏனெனில் இதுபோன்ற உணர்ச்சிப் பெருக்கு அதிக காலம் நீடிக்காது போகக் கூடும். இவ்வளவு காலமாகப் பாகிஸ்தான் ஓயாமல் தொல்லை கொடுத்ததால் மக்கள் பொறுமை இழந்திருப்பதாலேயே இப்போது இவ்வளவு உற்சாகம் காட்டுகின்றனர். யுத்தம் நீடித்து அதனால் நஷ்டம் அதிகரித்து நமது அபாயகரமான பொருளாதார நிலை மேலும் மோசமானால் மக்கள் அதிருப்தி அடையக் கூடும் என்பதையும் எதிர்பார்த்து அதற்கு நம்மைத் தயார் செய்துகொள்ள வேண்டும்.

(5) உலக அபிப்பிராயத்தை நாம் புறக்கணிக்க முடியாது. எனவே நம் நோக்கங்களைத் தெளிவுபடுத்த நல்ல பிரசாரம் நடத்த வேண்டும். (1) நமது அண்டை நாட்டினர் சண்டைக்கு வராதபடி உறுதி செய்ய வேண்டும்; (2) ராணுவத் தலையீடுகளால் கடந்த பதினெட்டாண்டுகளில் பாதிக்கப்பட்டது போல் இனியும் நாம் பாதிக்கப்படாமல் தடுக்க வேண்டும் — இவையே நம் நோக்கங்கள் என உலகறியச் செய்ய வேண்டும்.

❀❀❀

பயமுறுத்தி லாபம் பெறுவது போன்றதல்ல நல்லெண்ணமும், நட்பும். நல்லெண்ணம் என்பது இரு வழிப் பாதை. அதில் மெதுவாகத்தான் போக்குவரத்து நடைபெறும். எனவே நல்லெண்ணத்தின் விளைவும் மெதுவாக வளர்ந்து வரும் சரக்காகத்தான் இருக்க முடியும். மெதுவான போக்குவரத்து நடக்கும் இந்த இரு வழிப் பாதையின் மூலம் நாம் பயன் அடைய வேண்டியிருக்கும் போது, தவிர்க்க முடியாத ஆபத்து நேரும் வரை காத்திருந்து உதவிக்கு அழைப்பது யுக்தமாகாது. 'நாங்கள் எந்தத் தேசத்தின் கஷ்டத்திலும் ஈடுபட்டுப் பங்கு கொள்ள மாட்டோம்' என்ற மனப்பான்மையை நாம் வளர்த்துக் கொண்டோமாயின், மற்றவர்களும் நம்மைக் குறித்து இதே மனப்பான்மை தான் பெறுவார்கள். ஆனால் அவர்களது உதவி நமக்குத் தேவைப்படுகிறது. அந்த உதவி மனப்பூர்வமாகவும், வலுவாகவும் கிடைப்பதற்குரிய வழியை நாம் தேட வேண்டியிருக்கிறது.

# யுத்த காலம்!

எந்த நெருக்கடியானாலும் சரி
இது நிற்காது!











# ஏன்.. எப்படி.. எதற்கு..?

21 ம் பக்கம் பார்க்க..















ஒரு சர்வாதிகாரியாக விளங்கியபொழுதும் ருஷ்ய நாட்டு குருஷேவ் நகைச்சுவை மிக்கவராகவும் விளங்கினார்.

ரஷ்யாவில் தயார் செய்யப்பட்ட தமது பேனாவால் ஆட்டோகிராப் புத்தகத்தில் கையெழுத்துப் போட்டுக் கொண்டிருந்த குருஷேவ்



அது சரியாக எழுதாததால் அதைத் தூக்கி எறிந்துவிட்டு வேறொரு பேனாவை வாங்கிக் கையெழுத்திட்டார்.

"இந்தப் பேனா நன்றாக எழுதுகிறது. இது அமெரிக்காவில் தயார் செய்யப்பட்டது" என்று சிநேகபாவத்தோடு சொன்ன குருஷேவ் "ஒரு பொருள் திறமையாகச் செய்யப்பட்டிருக்கும் போது அதை நாம் மதிக்க வேண்டும்" என்றார்.

ஆதாரம்: ரீடர்ஸ் டைஜஸ்ட்

அனுப்பியது: வி. ந. ஸ்ரீதரன்

★

கனடா: வட அமெரிக்காவில் உள்ள கனடா இராஜ்ஜியத்துக்கு அப்பெயர் வந்த விதம் இதுதான்: போர்ச்சுகல் நாட்டைச் சேர்ந்த காரட்டரீல் என்பவர் இந்தியாவைக் கண்டு பிடிக்கச் சில மாலுமிகளுடன் ஒரு பாய்மரக் கப்பலில் புறப்பட்டார். வட அமெரிக்காவின் வட கிழக்கில் உள்ள செய்ன்ட் லாரென்ஸ் வளைகுடாதான் இந்தியாவுக்குச் செல்லும் வழி என்று எண்ணிச் சென்ற அவர்கள் ஏமாற்ற மடைந்தனர். கரையை அடைந்ததும் அவர்கள் "கனடா" என்று கத்தினர். அதன் பொருள் "இங்கு ஒன்றுமில்லை" என்பதே. அங்கிருந்த கடிதரிகள் அதன் பொருளை அறிந்துகொண்டு நாடு தேடி அலையும் பிற ஐரோப்பியர்கள் அங்கு சென்ற போதெல்லாம் "கனடா" என்று கூறுவதை வழக்கமாகக் கொண்டனர். வந்தவர்களுக்கு அங்கு ஒன்றுமில்லை என்று போக்குக் காட்டி அங்கிருந்து அவர்களை உடனடியாக வெளியேற்றிய "கனடா" என்ற சொல்லே பின்னர் அந் நாட்டின் பெயராகிவிட்டது.

-எஸ். என். கே. ராஜன்

★

ஸ்லீப்பர்: ரயில் தண்டவாளங்களுக்கு அடியில் பொருத்தப்பட்டுள்ள மரக் கட்டைகளுக்கு "ஸ்லீப்பர்" என்று பெயர். அப்பெயர் ஏன் வந்தது, தெரியுமா? அவை இருப்புப் பாதைக்குக் கீழே தூங்குவதால் அல்ல. நார்வே



மொழியில் "ஸ்லீப்" என்றால் பளுவான சாமான்களைச் சுலபமாக இழுத்துச் செல்ல வசதியாக அமைக்கப்படும் பாதையை செப்பனிடப் பயன்படும் சாதனம் என்று பொருள். அதிலிருந்து வந்ததே "ஸ்லீப்பர்" என்ற சொல்.
















## தமிழரின் அரிய சாகசம்!

தமிழர்கள் வீரத்திலும், தீரத்திலும் தேர்ந்தவர்கள் என்பதோடு தந்திரத்திலும் மிகுந்தவர்கள் என்பது சமீபத்தில் போர் முனையிலிருந்து தெளிவாகியிருக்கிறது. தென்னிந்திய இன்ஜினீயரிங் படையைச் சேர்ந்த லக்ஷ்மணன் எல்லைப்புறத்தில் தடங்கலாக நின்ற ஒரு சுவரை வெடி வைத்துத் தகர்க்க அனுப்பப்பட்டார். தமது இரு சகாக்களோடு சென்று சுவரைத் தகர்த்து, அவர் திருப்தியோடு நிமிர்ந்து பார்க்கும்போது மறு புறத்திலிருந்து பாகிஸ்தான் கபேதாரும் வேறு பலரும் தாங்கள் மறைந்திருந்த குழியிலிருந்து தலைதூக்குவதைக் கண்டார். நிராயுதபாணியாக நின்ற இன்ஜினீயர் லக்ஷ்மணன் உடனே அவர்களைக் கைப்பற்ற ஒரு தந்திரத்தை மேற்கொண்டார். கபேதாருக்கு எச்சரிக்கை விடுக்கும் தோரணையில், ''நீங்கள் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டுச் சரணடையுங்கள். இல்லாவிடில் பின்னால் வரும் எங்கள் டாங்கிப் படை உங்களைத் தகர்த்துவிடும்'' என்று அறைகூவல் விடுத்தார். அவருக்குச் சாதகமாக அப்போது போர் முனையில் ஏதேதோ சத்தங்கள் கேட்டன. அவ்வளவுதான்; பாகிஸ்தான் கபேதாரும், அவரது சகாக்களும் பயந்துபோய் இந்த அறைகூவலுக்கு அடிபணிந்தார்கள்.

லக்ஷ்மணனும் அவரது சகாக்களும் அவர்கள் கீழே போட்ட ஆயுதங்களையே எடுத்துக் கைதூக்கி நின்ற அவர்களை அழைத்துச் சென்றார்கள். அங்கே வந்த லாரியில் கைதான பாகிஸ்தானியர்களை ஏற்றி அனுப்பி வைத்தனர். லக்ஷ்மணனின் தீரம் மிக்க இச்செயல் அவருக்கு ஒரு வீரப் பதக்கத்தைப் பெற்றுத் தரும்.

வாசல் திண்ணையில் உட்கார்ந்து "ரங்கண்ணு" முழங்காலில் வைத்தியர் கொடுத்த மருந்து எண்ணெயைத் தேய்த்து விட்டுக் கொண்டிருந்தார். காலை இளம் வெய்யில் பட்டு அவர் வழுக்கைத் தலை பளபளத்தது. சற்றுக் கூன் விழுந்த முதுகும், குழிந்த கண்களும், இளைத்துக் கறுத்த உடலும், பல் உதிர்ந்து ஒட்டிய கன்னமுமாக அவர் வயதை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது அவர் தோற்றம். இருபது வருஷங்களுக்குமுன், தமிழ் நாட்டு நாடகமேடைகளில் எல்லாம் வெற்றிக் கொடி பறக்கவிட்டு, புகழும் பணமும் சம்பாதித்துக் கொண்டிருந்த அதே 'ராஜபார்ட்' ரங்கண்ணுதான் இவர் என்று சொன்னால் யாருமே நம்ப மாட்டார்கள். அத்தனை தூரம் வறுமையும் உடல் நோயும் அவர் உருவத்தை மாற்றிவிட்டிருந்தன. நாடகம் என்றால் அந்தக் கால ரசிகர்கள் நினைவுக்கு வருவது ரங்கண்ணுதான். அவர் குரல் எழுப்பிப் பாடும்போது, வண்டு ரீங்காரம் செய்வது போல் இருக்கும். அவர் பாட்டிலே சொக்கி ரசிகர்கள் கரகோஷம் செய்யக்கூட மறந்து உட்கார்ந்து விடுவார்கள். வசனம் பேசுவதிலும், அவருக்கு இணை அவரேதான். அவர் பேச ஆரம்பித்துவிட்டால் கற்பனை ஊற்றெடுத்து விடும். அந்தக் கற்பனை வெள்ளத்துக்கு எதிரே எவராலும் நிற்க முடியாது. ஸ்திரீ பார்ட்டு வேலாம்பாள்கூட எத்தனையோ முறை அவர் சாதுர்யமாகப் பேசும் பேச்சுக்குப் பதில் பேசத் தெரியாமல் திருதிரு வென்று விழித்திருக்கிறாள். காட்சி முடிந்ததும் "என்னங்க, இப்படிப் பேசி என்னைத் திணற அடிக்கிறீங்களே. கொஞ்சம் பார்த்துப் பேசுங்க" என்பாள் வெட்கம் கலந்த சிரிப்புடன். அந்தச் சிரிப்பிலே ரங்கண்ணு தம்மை மறந்து போய் நின்றதுண்டு.

இப்பொழுது வேலாம்பாளின் மகள் 'சுசித்ரா தேவி' பெரிய சினிமா நட்சத்திரமாகி வெள்ளித் திரையில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறாள் என்பது ரங்கண்ணுவின் காதுகளுக்கும் எட்டியிருந்தது. வேலாம்பாளும் சென்னையில் கார், பங்களா என்று வசதியாக வாழ்ந்து கொண்டிருக்கிறாள் என்பதும் அவருக்குத் தெரிந்திருந்தது. அவர் மட்டும் சம்பாதிக்கவில்லையா? நாடகம், நாடகம் என்று ஊர் ஊராகச் சென்று பணமாகவும், புகழாகவும், பரிசுப் பொருள்களாகவும், ஏராளமாகச் சம்பாதித்தார். ஆனால் அந்தப் பொருள்களெல்லாம் எப்படிப் போயிற்று, எங்கே போயிற்று என்பதுதான் அவருக்குப் புரியாத புதிராக இருந்தது. தங்கப் பதக்கங்களாகவும், வெள்ளிப் பதக்கங்களாகவும் அவருக்குக் கிடைத்தவை எல்லாம் இப்போது எங்கே என்றே தெரியவில்லை. இப்பொழுது அவரிடம் மிஞ்சி யிருப்பதெல்லாம் நோயும் வறுமையும்தான்.

எப்படியோ பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்து விட்டார். அவர் ஒரே பிள்ளையான கோபியும் ஏதோ ஒரு கம்பெனியில் வேலையாக இருக்கிறான். அவனுக்கு நாலு குழந்தைகள். ஆக, பிள்ளையின் சம்பாத்தியத்தில் ரங்கண்ணு, அவர் மனைவி, பிள்ளை, அவன் மனைவி குழந்தைகள் இப்படி எட்டுப் பேர்கள் சாப்பிட வேண்டும். சாப்பாட்டுக்கே கஷ்டப்படும்போது உடல் நோய்க்கு மருந்து வகை



களுக்கு எங்கே போவது? ஏதோ நாட்டு வைத்தியரிடம் எண்ணெய், மூலிகை என்று வைத்தியம் செய்து கொண்டிருந்தார்.

ரங்கண்ணாவுக்கு அன்று காலையில் எழுந்ததுமே மனத்தில் ஓர் எண்ணம் தோன்றியது! அதாவது அன்று மாலை அவ்வூர் நாடகக் கொட்டகையில் பிரபல சினிமா நடிகை சுநீதா தேவி நடிக்கும் நாடகம் நடக்கிறது. சுநீதா தேவியுடன் வேலாம்பாளும் வந்திருப்பாள். எப்படியாவது ஒரு டிக்கெட்டு வாங்கிக் கொண்டு போய் நாடகத்தைப் பார்க்கவேண்டும். முடிந்தால் வேலாம்பாளையும் பார்த்து விட வேண்டும். அந்தக் காலத்தில் வெறும் உபநடிகையாக இருந்த வேலாம்பாளுக்கு, நடிப்புக் கற்றுக் கொடுத்து, கதாநாயகி வேடத்துக்கு உயர்த்தித் தம்முடனே நடிக்கவும் வைத்துக் கொண்டிருந்ததை யெல்லாம் வேலாம்பாள் மறந்திருக்க மாட்டாள். அவள் நமது கஷ்ட நிலைமையைத் தெரிந்து கொண்டால் கண்டிப்பாக உதவி செய்வாள். பிறகு நல்ல டாக்டரிடம் உடம்பைக் காட்டி சிகிச்சை பெற்றுக்கொள்ள வேண்டும்.

இதை வெளியே சொன்னால் மனைவியும் மகனும் அவரைப் பிலுபிலுவென்று பிய்த்து எடுத்து விடுவார்கள்.

அவர் மனைவி வந்து ''வெந்நீர் ஆறிப் போகிறது. சீக்கிரம் காலைக் கழுவிக்கொண்டு சாப்பிட வாருங்கள். உங்களுக்கென்று தனியாக ஒரு பந்தி போடணுமா?'' என்றாள் குரோதமாக. ரங்கண்ணா மறு பேச்சுப் பேசாமல் ஆவி பறக்கும் வெந்நீரைக் காலில் ஊற்றிக்கொண்டார். அது கால் வலிக்குச் சற்று இதமாக இருந்தது. எழுந்து சமையற்கட்டு வரைக்கும் போவதற்குள் அவர் கால்கள் துவண்டு விட்டன. எப்படியோ சுவரைப் பிடித்துக் கொண்டு நடந்து இலையின் முன் உட்கார்ந்தார். பிள்ளை குனிந்த தலை நிமிராமல் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அவனது ஓட்டுப் போட்ட சட்டையையும், வயதுக்குமீறிய வயோதிகத் தோற்றத்தையும் பார்க்கவே அவருக்குக் கஷ்டமாக இருந்தது.

மருமகள் கீரைக் கறியையும், சாதத்தையும் இலையில் போட்டாள். அவருக்கு என்னவோ சாப்பாடே ருசிக்கவில்லை. அந்த நாளில், கெட்டித் தயிர் இல்லாமல் அவர் சாப்பிட்டதே கிடையாது. அதை யெல்லாம் இப்பொழுது நினைத்து என்ன பயன்? குழந்தைகள் சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக்கூடத்துக்குப் போய்விட்டார்கள். ரங்கண்ணாவும் சாப்பிட்டோம் என்று பெயர் பண்ணிக் கொண்டு, வாசல் திண்ணையில் இருந்த கயிற்றுக் கட்டிலில் போய்ப் படுத்துக் கொண்டார்.

ரங்கண்ணா கண்களை இலேசாக மூடியபடி சிந்தனையில் ஆழ்ந்தார். அவர் முதன் முதலாகக் கதாநாயகன் வேடம் போட்டது இதே ஊரில், இதே கொட்டகையில்தான். அன்று எத்தனை கரகோஷம்! இதே கொட்டகையில்தான் வேலாம்பாளையும் சந்தித்தார். அன்று சகுந்தலை நாடகம். வேலாம்பாளுக்குச் சகுந்தலை வேடம்; மிகப் பொருத்தமாக இருந்தது. அப்படி ஓர் அழகு. மேடையில் நடிக்கிறோம் என்பதையே மறந்துவிட்டு உண்மையிலேயே வேலாம்பாள் மீது காதல் கொண்டு விட்டார் ரங்கண்ணா. அவளுக்கும் அவரிடம் ஒரு தனி மதிப்பு. நாடகம் முடிந்து ஒப்பனையைக் கலைத்துக் கொண்டிருக்கும் போது, 'ஆமாம், வேலாம்பா! எனக்கு ஒன்னு தோணுது. இந்தத் துஷ்யந்தனால் எப்படி இந்தச் சகுந்தலையைப் பிரிந்து இருக்க முடிந்தது?' என்று கேட்டார் குறும்புப் பார்வையுடன்.

வேலாம்பாள் கலகலவென்று சிரித்தாள். அந்தச் சிரிப்பு அவர் உள்ளத்தைக் கொக்கி போட்டு இழுத்தது. முகத்துச் சாயத்தைத் துண்டால் துடைத்துக் கொண்டே, 'அந்தச் சகுந்தலை கதையிலே எங்க மாமாவைப்போல் ஒரு துர்வாசர் வராரு இல்லே? அதனாலே துஷ்யந்தன் சகுந்தலையை மறக்கும்படியாக ஆச்சு' என்றாள் உள் அர்த்தத்துடன். அவள் பேசி முடித்ததும் அறைக் கதவைத் திறந்து கொண்டு வேலாம்பாளின் மாமா முத்துரங்கம், ''என்ன, அம்மாளு? இன்னுமா ஒப்பனையைக் கலைக்கலே? வெளியே கொட்டகை முதலாளி வண்டியோடே காத்துக்கிட்டிருக்காரு. கிளம்பு, சீக்கிரம். இரவு அவர் வீட்டிலேதான் நமக்குச் சாப்பாடு. அப்போ தம்பீ, நாங்க கிளம்பறோம்'' என்று பலவந்தமாக வேலாம்பாளை அழைத்துக் கொண்டு போய் விட்டார். இப்படி வேலாம்பாளின் மாமன், வேலாம்பாளுக்கும், ரங்கண்ணாவுக்கும் இடையே வில்லனாகவே இருந்தார். ஒருநாள் வசனம் ஒத்திகை பார்த்துக் கொண்டிருக்கும் போது சோடா சாப்பிடுவதற்காக முத்துரங்கம் வெளியே போய் விட்டார். அப்பொழுது ரங்கண்ணா, ''வேலாம்பா, உனக்கேன் உன் மாமாவிடம் இத்தனை பயம்? நீ மட்டும் சம்மதம் என்று ஒரு வார்த்தை சொல்லு. நான் உன் மாமாவிடம் பேசி நம் கல்யாணத்தை முடித்துக் கொள்கிறேன்'' என்றார். வேலாம்பாள் நாற்புறமும் பார்த்துவிட்டு, ''அதெல்லாம் எனக்குத் துணிச்சல் கிடையாதுங்க. மாமாவை நினைச்சாலே எனக்குப் பயம். அவர் பேச்சுக்கு எதிராகப் பேச எனக்குத் துணிச்சல் கிடையாது'' என்றாள்.

ஒரு நாள் முத்துரங்கத்துக்குத் தீபாவளி என்ற சாக்கை வைத்துக் கொண்டு மயில் கண் வேஷ்டி, ஜரிகை அங்கவஸ்திரம், சில்க்கு சட்டை எல்லாம் வாங்கிப் பரிசளித்து விருந்தும் வைத்த பிறகு ரங்கண்ணா பேச்சை ஆரம்பித்தார்: ''இதோ பாருங்க, முத்துரங்கம், நான் நேரடியாகவே கேட்கிறேன். நாடகத்திலே நானும் வேலாம்பாளும் சேர்ந்து நடிக்கிறதை ஜனங்கள் ரொம்ப விரும்பறாங்க. நாங்க வாழ்க்கையிலும் ஜோடியாகணும் என்று ஆசைப்படறோம். நீங்க என்ன சொல்லுறீங்க?''

முத்துரங்கம் வாசனைப் புகையிலையையும், பாக்கையும் சுவைத்துக் கொண்டே சிரித்தவாறு, ''தம்பீ, நான் சொல்லறேன் என்று வருத்தப்படாதீங்க. நீங்க நாடக மேடை

புதுமையிலும், தரத்திலும், ரகத்திலும்
இன்று நிகரற்று விளங்கும் எங்கள்
தீபாவளி விசேஷ தயாரிப்புகள் இதோ :

❊ கண்கவர் வண்ணங்கள் :
காஞ்சனா, புவனேஷ் வயலட்
காமதேனு, கற்பகம்.

❊ புது தயாரிப்புகள் :
நந்தினி, மேஜிக்ஜா, ஸில்வர்டச்
கோல்டன்டச், தீபா, ரங்கோலி.

❊ பின்னி மென் பட்டில் :
சாமுண்டி.

## தாரகராம் ஸில்க் ஹவுஸ்

9-4, சத்யமூர்த்தி ரோடு - - கோயமுத்தூர்-9
(போன்: 2871)

## சக்திக்கும், வலிமைக்கும்!




இதில் அடங்கியது
பால்
கோகோ.
சர்க்கரை
மால்ட்

காட்பரீஸ்
**போர்ன்விடா**

BENSONS/II-CF.24 TM







இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங்
டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான :

கீழ்க்கண்டபடி பெருகும் :

| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- | ரூ. 500/- |
|---|---|---|---|---|---|
| 12 மாதங்களில் | ரூ. 61.50 | ரூ. 123.25 | ரூ. 617.00 | ரூ. 1,234.25 | ரூ. 6,171.00 |
| 24 மாதங்களில் | ,, 127.25 | ,, 254.50 | ,, 1,273.50 | ,, 2,547.00 | ,, 12,735.25 |
| 36 மாதங்களில் | ,, 197.25 | ,, 394.75 | ,, 1,974.50 | ,, 3,948.75 | ,, 19,744.25 |
| 48 மாதங்களில் | ,, 271.25 | ,, 542.50 | ,, 2,714.25 | ,, 5,428.50 | ,, 27,142.75 |

# இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம்: 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்குமேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

IOB-17-5A

நடிகர்களின் வாழ்க்கை மின்னல் ஒளி போலத்தான். மின்னலுக்கு முன்னும் பிரகாசம் இல்லை, பின்னும் பிரகாசம் இல்லை. நடிக வாழ்வைப் பின்னணியாகக் கொண்டு புனையப் பட்ட இந்தக் கதையிலே இவ்வுண்மை மின்னல் கீற்றெனப் பளிச்சிடுகிறது. இந்தச் சிறப்புக் கதையின் இன்னுமொரு சிறப்பான அம்சம், இது அட்டைப்படக் கதையாகவும் துலங்குகிறது.



யிலே ஜோடியா நடிக்கிறதைத்தான் ஜனங்க விரும்புறாங்க. வாழ்க்கையிலே ஜோடியாகிறதை விரும்பவே மாட்டாங்க. ஏன்? நான் கூட விரும்பவே மாட்டேன். நாடக வாழ்க்கையே ஒரு போலி வாழ்க்கை தம்பி! பளபளக்கும் உடையிலோ, அரிதாரத்திலோ ஜனங்களை மயக்குறோம். மயங்கி விடுறாங்க. வேஷத்தைக் கலைச்சுட்டா என்ன மதிப்பு இருக்கு சொல்லுங்க? உதாரணமாக பாரி வள்ளலாக வேஷம் போடுகிறவன் சீன் முடிந்ததும் இரண்டு ரூபாய்க்குச் சண்டை போடுறான். ஹரிச்சந்திர வேஷதாரி மேடையை விட்டு இறங்கினதுமே பொய்தான் பேசுறான். ஆகையினாலே நடிப்பும், வாழ்க்கையும் ஒத்து வராது. நீங்க உங்க ஜாதியிலே ஒரு பெண்ணைப் பார்த்துக் கட்டிக்குங்க'' என்று புத்திமதி சொல்லிப் பேச்சுக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டார்! அதன் பிறகுதான் வீட்டாரின் பேச்சுக்கு இணங்கி மாமன் மகளான மங்களத்தைக் கலியாணம் செய்து கொண்டார் ரங்கண்ணா.

ஒரே பக்கமாகப் படுத்திருந்தபடியால் முதுகு வலி எடுக்கவே, ரங்கண்ணா மறுபக்கம் திரும்பிப் படுத்துக் கொண்டார். கயிற்றுக் கட்டில் கிர்...ர்...ர் என்று ஒலி எழுப்பியது.

''தூங்கிவிட்டீர்களா? ஏதோ சட்டை கிழிந்திருக்கிறது, தைக்க வேண்டும் என்றீர்களே. கொடுங்கள். தைத்துவிடுகிறேன்'' என்றாள் மங்களம். உடம்பில் மாங்கல்யத்தைத் தவிர வேறு எந்த நகையும் இல்லாமல், நிறம் போன நூல் புடவையும், கிழிந்த ரவிக்கையுமாக, தம் எதிரே நிற்கும் தம் மனைவியை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார் ரங்கண்ணா. வறுமையினால் அவள் உடல் மிக இளைத்திருந்தது. முன் நெற்றி மயிர்கள் நரைத்து நெற்றியில் குங்குமப் பொட்டைத் தழுவி விளையாடிக் கொண்டிருந்தன. ரங்கண்ணா ஒரு பெருமூச்சு விட்டார். வேலாம்பாள் தன்னைக் கல்யாணம் செய்து கொண்டிருந்தால் ஒரு வேளை இன்று மங்களம் நிற்கும் நிலையில்தான் அவளும் நிற்க வேண்டியிருக்கும். நல்ல வேளை! அவள் பிழைத்துக் கொண்டு விட்டாள் என்று தோன்றியது. மங்களத்தை ஒரு நாள்கூட அந்த நாளில் அவர் அன்பாக நடத்தியது கிடையாது. ஏதோ கட்டிய மனைவி என்ற கடமையுணர்ச்சியைத் தவிர, காதல் பாசம் எல்லாம் அவளிடம் அவருக்குக் கிடையவே கிடையாது. அவளுக்கும் இழைந்து இழைந்து பேசவோ பழகவோ தெரியாது. சங்கீதம், சிட்டாட்டம், சாதுர்யமான பேச்சு இப்படிக் கணவனை வசீகரிக்கும் எந்த விதமான முறையும் மங்களத்துக்குத் தெரியாது.' சொல்லப் போனால் கணவனின் பழக்கவழக்கங்கள் எதுவுமே அவளுக்குப் பிடிக்காது. அவர் அத்தர் சென்டு என்று போட்டுக் கொண்டால் வேலாம்பாள், அவர் சில்க் சட்டையை வருடிக் கொண்டே, ''ஆஹா, என்ன வாசனை! இந்த அத்தருக்குக்கூடப் பேதம் தெரிகிறது. நீங்கள் போட்டுக் கொண்டால் அதிகமாக மணக்கிறது. அதையே நான் போட்டுக் கொண்டால் சப்பென்றிருக்கிறது'' என்பாள் உல்லாசமாக. மங்களமாக இருந்தால், ''முதலில் இந்தச் சட்டையைக் கழற்றி எறியுங்கள். எதுக்கு இத்தனை அத்தரைக் கொட்டிக்கொண்டிருக்கிறீர்கள்? எனக்கு இதெல்லாம் பிடிக்கவில்லை. தலையை வலிக்கிறது'' என்பாள்.

அவருக்கு வரும் கோபத்தில், ''நீ கழுதை ஜன்மம். உனக்கு ஏது ரசனை?'' என்பார்.

வெய்யில் முற்றத்திலிருந்து திண்ணைக்கு வந்து அவர் காலில் சுளீர் என்று உறைக்கவே எழுந்து அறைக்குள் வந்தார் ரங்கண்ணா. மங்களம் அவர் கிழிந்த சட்டையைத் தைத்து முடித்திருந்தாள். சமையற்கட்டில் மருமகள் டிபனுக்காகக் கோதுமை மாவைப் பிசைந்து கொண்டிருந்தாள். தமது பழைய டிரங்குப் பெட்டியைத் திறந்தார் ரங்கண்ணா. கிழிந்த சட்டை; அங்கவஸ்திரம் என்று ஏதேதோ இருந்தன. பெட்டி மூலையில் பிள்ளை மூக்குப் பொடி வாங்கக் கொடுக்கும் சில்லறையிலிருந்து மிச்சப்படுத்திய ஒரு நாலணா நாணயம் கிடந்தது. இன்னும் தகரச் சிமிழியில் எப்பொழுதோ வாங்கி வேண்டாம் என்று போட்டிருந்த ஜவ்வாது இருந்தது. சிமிழைத் திறந்த ரங்கண்ணாவுக்கு ஜவ்வாது மணத்தை அனுபவித்து எத்தனை நாட்கள் ஆகிவிட்டன என்று எண்ணம் ஓடியது. அவர் ஒரு முடிவுக்கு வந்தார்: பிள்ளை மருந்துக்காக ஒரு ரூபாய் கொடுத்திருந்தான். ரிக்ஷாவுக்கு இந்த நாலு அணா ஆச்சு. பேசாமல் நாடகத்துக்குப் போகவேண்டியதுதான்.

முகத்தைக் கழுவிக் கொண்டு சட்டையைப் போட்டுக் கொண்டார். கண்ணாடியில் தம் முகத்தைப் பார்த்ததும் அவருக்கே வெறுப்பாக இருந்தது. 'ஜவ்வாதுப் பொட்டு மட்டும் வைத்துக் கொண்டால் போதுமா? அந்தப் பழைய பளபளப்பும், தெம்பும் போன இடம் தெரியவில்லையே?' என்று நினைத்தார். கண்ணாடியை ஆணியில் மாட்டுவதற்குள் இருமல் பிடித்துக் கொண்டு விட்டது. லொக் லொக்கென்று இரண்டு நிமிஷங்கள் விடாமல் இருமியதன் பயனாக முகம் வியர்வையால்

நனைந்து கண்கள் சோர்ந்து விட்டன. அவர் மிகவும் களைத்து விட்டார்.

''இந்த வெய்யிலில் எங்கே கிளம்புகிறீர்கள்? உங்களுக்கு இன்று உடம்பே நன்றாக இல்லை'' என்றவாறே மங்களம் கையில் வெந்நீர் கிளாசுடன் வந்தாள். மடமடவென்று வெந்நீரைக் குடித்துத் தம்மை ஆசுவாசப்படுத்திக் கொண்டார் ரங்கண்ணா.

''நான் வைத்தியர் வீடு வரையில் போய் வருகிறேன். திரும்பி வரச் சற்று நேரமானாலும் பயந்துவிடாதே. எனக்கு வீட்டுக்குள்ளே அடைந்து கிடந்து அலுத்து விட்டது. வைத்தியருடன் பேசிக் கொண்டிருந்து விட்டு வந்து விடுகிறேன்'' என்று கைத்தடியை எடுத்துக் கொண்டு கிளம்பினார். ''உங்களால் நடக்கவே முடியாதே. ரிக்ஷாவைக் கூப்பிடட்டுமா?'' என்ற மனைவியிடம், ''வேண்டாம், இந்தத் தெரு முனையிலிருந்து நானே கூப்பிட்டுக் கொள்கிறேன்'' என்று தெருவில் இறங்கி விட்டார்.

ஒரு வீம்பில் மனைவியிடம் அப்படிச்சொல்லி விட்டாலும் இரண்டடி நடப்பதற்குள் அவர் கால்கள் வலி எடுத்தன. சரியாக ஐந்து மணிக்கு ரிக்ஷாவில் நாடகக் கொட்டகை அருகே சென்று இறங்கிய ரங்கண்ணாவை யாரும் கவனிக்கவில்லை. தம்மை யாராவது தெரிந்து கொள்கிறார்களோ என்று நாலா பக்கமும் பார்வையைச் சுழற்றினார். யாரும் கண்டு கொள்ளவில்லை. ஒரு குறும்பன், ''சுந்தரா தேவி நடிக்கும் நாடகம் என்றதும் தாத்தாகூட ஐந்து மணிக்கே டிக்கெட் வாங்க வந்துட்டாரு, பார்த்தாயா? உனக்கேன் தாத்தா, இந்த ஆசை?'' என்று கேலி பண்ணினான். கையில் பிரம்பை வைத்துக் கொண்டு காவற்காரன் ஒருவன், ''அட, என்னப்பா, இப்படிக் கூட்டம் போடறீங்க? நாடகம் தான் பார்க்கப் போறீங்களே! என்ன பெரியவரே! நீகூடவா இங்கே வந்து நிற்கிறே? ஏதோ சின்னப் பசங்கள் நடிகையைப் பார்க்க ஆசைப்படுறாங்க. நீ போய் டிக்கெட்டு வாங்க 'க்யூ'விலே நில்லு நாயினா'' என்று ரங்கண்ணாவைப் பின்னுக்குத் தள்ளினான்.

ரங்கண்ணாவுக்கு அந்தக் கிறாக் காவற்காரனை நன்றாக அடையாளம் தெரிந்து விட்டது.

அன்று இருந்ததை விட உடல் பருத்து மீசை நரைத்திருக்கிறது. அவ்வளவுதான்; மற்றபடி பழைய காவற்கார ஷண்முகம் தான். அந்த நாளில் நாடகம் முடிந்து, கொட்டகையை விட்டுக் கிளம்பும்போது ஷண்முகத்துக்கு ஐந்து ரூபாய், பத்து ரூபாய் என்று எத்தனையோ முறை இனாம் கொடுத்திருக்கிறார் ரங்கண்ணா. இப்பொழுது அவனே அவரை விரட்டுகிறான். காலத்தின் கோலம். ஒரு நீண்ட பெருமூச்சு ரங்கண்ணாவின் இதயத்திலிருந்து எழுந்தது. அங்கு நின்றிருந்த இளவட்டங்கள் சுந்தரா தேவியின் நடிப்புத் திறமையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். மாலை வெய்யில் சுளீர் என்று அடித்தது. கால் கடுக்க அவர் நின்றுகொண்டிருந்தார். சரியாக ஐந்தரை மணிக்கு ஹாரனை முழக்கிக் கொண்டே ஒரு பெரிய கார் வந்து நின்றது. இதற்குள் கூட்டத்தை விலக்கப் போலீசாரும் வந்துவிட்டார்கள். காரிலிருந்து முதலில் இறங்கிய வேலாம்பாளைப் பார்த்து மலைத்துவிட்டார் ரங்கண்ணா. அன்று கண்ட மேனிக்கு அழிவில்லாமல் இருந்தாள். உடல் மட்டும் சற்றுச் சதை போட்டிருந்தது. தங்கமும் வைரமுமாகப் பளபளத்துக் கொண்டிருந்தாள் அவள். பின்னால் இறங்கிய சுந்தரா தேவி, ரசிகர்களின் ஆரவாரத்துக்கிடையே கொட்டகைக்குள் போய்விட்டாள். காவல்கார ஷண்முகம் கதவைத் தாழிட்டு விட்டான். 'ஓ' என்ற இரைச்சலுடன் கூட்டம் டிக்கட்டு வாங்கும் க்யூவை நெருங்கியது. ரங்கண்ணாவும் பின்னால் நின்று கொண்டார். ஆறு மணிக்கெல்லாம் ''இனிமேல் ஒரு ரூபாய் டிக்கட்டுக் கிடையாது'' என்ற போர்டை மாட்டிவிட்டார்கள். வெகு வருத்தத்துடன் ரங்கண்ணா கொட்டகையின் பின் பக்கத்துக் கதவருகே வந்தார். கொட்டகைக்குள் ஒரே கூச்சலும் கும்மாளமுமாக இருந்தது. அதையெல்லாம் கேட்டபடி இருட்டில் பின் பக்கத்துக் கேட்டருகே உட்கார்ந்திருந்தார் ரங்கண்ணா. அவர்கள் திரும்ப வண்டியில் ஏறும்போதாவது பார்த்துப் பேசலாம் என்ற நப்பாசை. வேலாம்பாள் வண்டியிலிருந்து இறங்கினவுடன் ரங்கண்ணா ''வேலாம்பா'' என்று குரல் கொடுக்க முயன்றார். பாழாய்ப் போன இருமல் வந்து 'வே...வே...' என்ற உளறலுடன் நின்று விட்டது. இனிமேலாவது அழுத்தமாகக் கூப்பிட வேண்டும். நடுவே இருமல் கூடாது என்று மடியிலிருந்த ஒரு மாத்திரையை எடுத்து வாயில் போட்டுக் கொண்டார். பொழுதுபோன குளிர்ந்த காற்றினால் அவர் உடல் இலேசாக நடுங்கிக் கொண்டிருந்தது. அவர் பிரபலமாக இருந்தபொழுது இப்படிக் கொட்டகைக்கு வெளியே டிக்கட்டு வாங்க முடியாமல் தவிப்பவர்களைப் பற்றி அவர் எண்ணிக் கூடப் பார்த்ததில்லை.

ஏதோ காரணமாகக் கதவைத் திறந்து கொண்டு வந்த காவற்காரனிடம், ''அப்பா, எனக்கு ஒரு உதவி செய்கிறாயா?'' என்றார். ஷண்முகம் அவரை முறைத்துப் பார்த்து விட்டு, ''உனக்கு டிக்கட்டு கிடைக்கலியா பெரியவரே? இன்னிக்கு ஒரே கூட்டம்... கொட்டகைக்குள்ளே என்னை விடு என்று மட்டும் கேட்காதே. மொதலாளிக்குத் தெரிஞ்சாக் கொன்னுடுவாரு'' என்றான்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லேப்பா. நடிகையின் தாயார் வேலாம்பாளை நான் பார்க்கணும். அவுங்க நாடகம் முடிஞ்சு ஒப்பனையைக் கலைக்கும்போது என்னை அவுங்க கிட்டே கூட்டிப் போனாப் போதும்'' என்றார்.

''என்ன பெரியவரே! உனக்குக் கூடவா அவுங்களைப் பார்க்கணும்னு ஆசை?''

''இல்லே, அப்பா! ஒரு முக்கிய விஷயம்.''

''நீ இங்கேயே குந்திக்கினு இரு. நாடகம் முடிஞ்சதும் உன்னை அவுங்ககிட்டே கூட்டிப் போறேன். எனக்கும் பேச்சுத் துணைக்கு ஆளாச்சு'' என்றான் ஷண்முகம். இந்தச் சமயம் கொட்டகைக்குள்ளிருந்து தடதடவென்று கரகோஷம் எழுந்தது.




''ஏதோ நல்ல சந்தர்ப்பம் போல் இருக்கிறது. அதுதான் ஜனங்கள் இப்படிக் கரகோஷம் பண்ணறாங்க'' என்றார் ரங்கண்ணு.

காவற்கார ஷண்முகம் ஒரு முறை சிரித்து விட்டு, ''இதெல்லாம் என்ன கரகோஷம் பெரியவரே! அந்தக் காலத்திலே ஒவ்வொரு நடிகரும் எப்படி நடிச்சாங்க! ரங்கண்ணு என்று ஒருத்தர் இருந்தாரு. அவர் இப்போ எங்கே இருக்காரோ, தெரியாது. அவர் பாடுறு இன்னிக்கெல்லாம் கேட்டுக்கிட்டே இருக்கலாம். பார்வைக்கும் ஜோராக இருப்பாரு. அவரு பாட்டு இன்னும் என் காதிலே ஒலிச்சிக்கிட்டிருக்கு. அதெல்லாம் அந்தக் காலம்'' என்று பெருமூச்சு விட்டான்.

ரங்கண்ணுவுக்குத் தம் காதுகளையே நம்ப முடியவில்லை. இப்படி ஒரு பாராட்டைக் காதால் கேட்டு எத்தனை நாட்களாகி விட்டன! அவர் உள்ளம் குளிர்ந்தது. 'நீ புகழும் அந்த நடிகர் நானேதான்' என்று சொல்லத் துடித்தது அவர் நாவு. வெகு சிரமப்பட்டு அந்த எண்ணத்தை அடக்கிக் கொண்டார். அந்தப் புகழ் மொழியைக் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.போலிருந்தது. கண்ணை இலேசாக மூடிக் கொண்டு அந்த இன்ப மயக்கத்திலே அமிழ்ந்து, அமிழ்ந்து அதை அநுபவித்துக் கொண்டே இருந்தார். நாடகம் முடிந்து ஜனங்கள் கலைய ஆரம்பித்ததும், ''பெரியவரே! உன் பெயர் என்ன சொல்லு. வேலாம்பாள் அம்மாகிட்டே சொல்றேன். இரண்டு நிமிஷத்திலே பேச வேண்டியதைப் பேசிவிடு. தொண தொண என்று பேசாதே'' என்றான் ஷண்முகம். ரங்கண்ணு எச்சிலை விழுங்கி விட்டு ''பழைய நடிகர் ரங்கண்ணு வந்திருக்கிறார் என்று சொல்லு'' , என்றார். இதைச் சொல்லும்போது அவருக்குச் சற்று கர்வமாகக்கூட இருந்தது.

ஷண்முகம் இரண்டு நிமிஷங்கள் பேசவேயில்லை. திறந்த வாய் மூடாமல் நின்றுவிட்டு ''சாமி, அந்த ராஜப்பார்ட்டு ரங்கண்ணுவா நீங்க? இப்படி வெளிச்சத்திலே வாங்க சாமி. அடாடா உங்களை கேட்டுக்கு வெளியிலே உட்கார்த்தி வைச்சிட்டேனே. ஒரு வார்த்தை நான்தான் ரங்கண்ணு என்று சொல்லியிருக்கக் கூடாதா?'' என்று பதைபதைத்தான். ''பரவாயில்லை அப்பா. நான் அப்படிச் சொல்லியிருந்தால் கூட உன்னால் நம்பியிருக்க முடியாது. நான் உருவத்தில் அப்படி மாறிவிட்டேன். போகிறது. நீ வேலாம்பாளிடம் நான் வந்திருப்பதாகச் சொல்லு''

''சாமி, இதோ போறேனுங்க, இப்படி ஸ்டூலிலே உட்காருங்க. கலர்டிரிங்கு ஏதாவது சாப்பிடறீங்களா?'' என்று உபசரித்த ஷண்முகத்தைப் பார்த்து ரங்கண்ணு சிரித்துக் கொண்டார்.

ஒப்பனை அறையில் ஷண்முகம் வேலாம்பாளிடம், ''அம்மா உங்களைப் பார்க்க நடிகர் ரங்கண்ணு வந்திருக்கிறார். வரச் சொல்லவா?'' என்றான். தன் மகள் தலையில் மல்லிகைப் பூவை வைத்துக் கொண்டிருந்த வேலாம்பாள், ''இதென்னப்பா தொந்தரவு? நான் யாரையும் பார்க்கத் தயாராக இல்லை. காலையில் குழந்தைக்கு ஷூட்டிங் இருக்கு. சென்னை போய்ச் சேர வேண்டிய கவலை எனக்கு. இப்படித்தான் மதுரையிலே பழூன் சிங்காரம் வந்து கழுத்தை அறுத்தான், பணத்தைக் கொடு, காசைக் கொடு என்று! இந்த வரிசையிலே ரங்கண்ணு வந்திருக்கிறார். வேறு வேலை இல்லை இவுங்களுக்கு. போகச் சொல்லப்பா, வாக்கமேன்'' என்றபடி காரில் ஏறிவிட்டாள். 'இந்த அலட்சியத்தை எப்படி ரங்கண்ணுவிடம் தெரிவிப்பது? ஒரு காலத்தில் அவரைப் பார்க்க எத்தனை பேர் தவிச்சிருக்காங்க! எல்லாம் காலம்!' என்று வருந்தினான் ஷண்முகம்.

வேலாம்பாள் பேசியதெல்லாம் ரங்கண்ணுவின் காதிலும் விழத்தான் செய்தது. அவர் ஆடாமல் அசையாமல் அப்படியே உட்கார்ந்து விட்டார். தமக்குப் புகழ் தந்த நாடகக் கொட்டகையை ஒரு முறை ஆசை தீரப் பார்த்தார். தமக்கு அவமானம் நேர்ந்ததும் அதே கொட்டகையில்தான் என்று நினைத்ததும் அவர் கண்களில் நீர் நிறைந்தது. நடிகர்களின் வாழ்க்கை மின்னல் ஒளி போலத்தான். மின்னலுக்கு முன்னும் பிரகாசமில்லை, பின்னும் பிரகாசமில்லை என்ற உண்மை அவருக்கு உறைத்தது. நெஞ்சை வலிப்பது போல் இருக்கவே சுவரில் சாய்ந்தார். நடிகர் ரங்கண்ணுவுக்காக ஒரு கலர் புட்டியுடன் வந்த ஷண்முகம் அவர் ஸ்டூலில் தலை தொங்கத் திறந்த வாயுடன் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து 'ஓ' என்று அலறி விட்டான். கடைசியாக ஒரு ரசிகனின் புகழ்ச்சி மொழியிலும் இருப்தி அடைந்த அவர் ஆத்மா உடலை விட்டுப் பிரிந்து விட்டது.

இலக்கியம், எழுத்து, மரபு என்ற பதங்களெல்லாம் இப்போது தமிழ் நாட்டிலே சிலரிடம் சிக்கித் தவிக்கின்றன. 'என்னைப் போல் எழுத யாரால் முடியும்?' என்று சுய தம்பட்டம் அடித்துச் சவால் விடுவோர்களையும் 'நானும் (இதைச் சொல்லாமல் சொல்லி) என் நண்பர் திருவாளர்... இன்னும் இருக்கும்போது இலக்கியம் ஏன் வாடப் போகிறது?' என்று பரஸ்பரம் முதுகு சொறிந்து கொள்பவர்களைப் பற்றியும் நான் கவலைப்படவில்லை. இவர்கள் விமரிசனங்களுக்கு அப்பாற்பட்ட பிரகிருதிகள். நான் குறிப்பிட விரும்புவதெல்லாம் 'விமரிசனம்' என்ற போர்வையில் விருப்பு வெறுப்புடன் படித்துப் பார்த்தோ பார்க்காமலோ கண்களில் அகப்பட்டதைத் துவம்சம் செய்து கண்களுக்கு அகப்படாத ஒன்றைப் போற்றிப் புகழ முனையும் சிலரைப் பற்றித்தான்.

ஒரு பெரிய விருந்துச் சாப்பாட்டுக்குப் பண்டங்கள் தயாரிக்கும் சிரமத்துடன் தம் எண்ணத்துக்கு எழுத்துருவம் கொடுத்து ஓர் எழுத்தாளன் கொண்டு வரும் சிருஷ்டியை ஒரு வெற்றிலை போட்டுத் துப்பும் அவகாசத்தில் பாதியில் விமரிசனம் என்ற பெயரில் தூக்கி எறியும் சில விமரிசகர்கள் நம்மிடையே இருக்கத்தான் செய்கிறார்கள். நண்பர் க. நா. சு.வும் அவர்களில் ஒருவரே.

திரு க. நா. சு. இன்று நம்மிடையே வாழும் ஒரு நக்கீரர்! (அவர் அப்படித்தான் நினைக்கிறார்) குற்றம் கண்டுபிடிப்பதே அவர் குறிக்கோள். கடந்த முப்பது ஆண்டுகளில் தமிழ் நாட்டில் வெளியான எத்தனையோ ஆயிரம் சிருஷ்டிகளில் எழெட்டைத் தவிர மற்றவையெல்லாம் உதவாக்கரை என்பது அவர் கொள்கை. எத்தனையோ நூறு எழுத்தாளர்களில் இரண்டொருவர்தான் அவருடைய லட்சியத் திறமை அளவை எட்டிப் பிடித்திருக்கிறார்கள். ஐயா! நான் கேட்கிறேன்: இவர் எந்த அளவுகோலைக் கொண்டு இந்தப் பணி செய்கிறார்? 'அழித்தல்' விமரிசனத்தினால் தமக்குப் பிராபல்யம் தேடிக் கொள்ள முயற்சி செய்கிறாரா?

மணிக்கொடி காலத்து எழுத்தாளர்கள்தான் பொற்கால எழுத்தாளர்கள் என்ற நினைப்பிலேயே இன்றும் நின்றுகொண்டு நிலைமையைப் பரிசோதிப்பது அவர் காலத்துக்குக் கொடுக்கும் மதிப்பு ஆகாது.

தமிழ் வசன நடை புது உருவமும் உயிரும் பெற்றுப் பண்டைய பண்டித பாணியிலிருந்து விலகி வளர ஆரம்பித்ததே சமீப காலத்தில்தானே? கடந்த நூற்றாண்டின் இறுதியில் ஏற்படத் தோன்றிய இந்தப் புரட்சிகரமான மாறுதல் நடுவில் ஏனோ சில காலம் சும்மா இருந்துவிட்டு, 1920–30க்கு மேல்தானே செழிப்படைந்தது? இந்தத் தமிழ்நடைப் புரட்சி வளர்ந்து வரும் குழந்தை போல்தானே! அதைப் பூச்சாண்டி காட்டி மிரட்டிப் பயப்படுத்தும் வகையிலான அழிப்பு விமரிசனம் நமக்குத் தேவைதானா? க. நா. சு. போன்றவர்களது விமரிசனம், களை பிடுங்கும் முயற்சியில் களையுடன் பயிரையும் பிடுங்க முற்படுவதுபோல்தான்!

பத்திரிகைகளுக்காகவோ பரிசு வாங்குவதற்காகவோ எழுதும் விஷயங்கள் எல்லாமே இலக்கியத் தரமற்றவை என்பது நண்பர் க. நா. சு. வின் பலவீனமான அபிப்பிராயங்களில் ஒன்று. ஓர் எழுத்தாளர் தாம் காண்பதை, நினைப்பதைத் தம் வாசகர்களுடன் பகிர்ந்துகொள்ளத்தான் விரும்புவார். அதற்கான இன்றைய சாதனம் பத்திரிகைகள்தானே. வாசகர்களின் பிரதிபலிப்புக்கிணங்க அவரால் தம் திறமைக்கு மெருகேற்றிக் கொள்ள முடிகிறது. ஆத்ம திருப்தி என்ற பெயரில் ஓர் எழுத்தாளன் தம் கற்பனையை எழுத்தில் வடித்துத் தாமே படித்து மகிழ்ந்து கொண்டால் போதுமா? ஏட்டுச் சுவடியில் எழுதிப் பெட்டகத்துக்குள் வைத்துப் பூட்டும் காலத்திலா நாம் வாழ்கிறோம்? நிற்க; அன்பர் க. நா. சு.வும் தம் அழிப்பு ஒழிப்பு விமரிசனங்களை வெளியிடப் பத்திரிகைகளைத்தானே நாட வேண்டியிருக்கிறது! பிறமொழிப் பத்திரிகைகளின் உதவியைக்கூடத்தான் தமிழ் எழுத்தாளர்களைத் தாக்க நாடுகிறார்!

இருக்கும் ஒன்றிரண்டு விமரிசகர்களும் இந்தக் கோணலான பாதையில் நின்று எழுத்தாளர்களிடம் வாசகர்களின் பாரபட்சமற்ற மதிப்பைச் சரியான பாதையில் திருப்பாமல், தாங்கள் விரும்பும் பாதையில் போக்குவரத்துப் போலீஸ் காவலர் போல் இருப்ப முயற்சி செய்வதால்தான் இன்றையத் தமிழ் எழுத்தாளர்களின் சிருஷ்டிகளுக்குச் சரியான, நியாயமான, வளர்ச்சிக்கு உதவக்கூடிய விமரிசனம் கிடைக்கவில்லை என்று அழுத்தமாகவே நான் சொல்கிறேன்.



'ரஸவாதி'

**இன்றையத் தமிழ் எழுத்தாளர்களின் சிருஷ்டிகளுக்குச் சரியான விமரிசனம் உண்டா?**

❖

''இல்லை'' என்பவர் எழுத்தாளர் 'ரஸவாதி'

''உண்டு'' என்பவர் விமர்சகர் க. நா. சுப்பிரமணியம்



க. நா. சு.

# சிலையான சிந்தனைகள்

**ப**ல எழுத்தாள நண்பர்களிடம் இருக்கும் வெற்றிலைப் புகையிலை வழக்கம் என்னிடம் கிடையாது. ஆகையால் அதை ரசிக்கும் முழு அவகாசம், பாதி அவகாசம் என்பது பற்றி எல்லாம் எனக்குத் தெரியாது. நேரம் என்பது முழுக்க முழுக்க எனக்கு அடிமையாக இருக்கிறதே தவிர நான் நேரத்துக்கு அடிமையில்லை. இதனால் எனக்கு இன்று வெளியாகும் புத்தகங்களையும், பத்திரிகைகளையும் குறைந்த பட்சம் எழுபது எண்பது சத விகிதத்துக்குப் படிக்க முடிகிறது. இதனால் அவைகளில் காணும் விஷயங்களைப் பற்றிச் சீர்தூக்கிப் பார்க்கவும் முடிகிறது.

'சிலர்' என்ற குழுவைச் சிருஷ்டித்து அதில் என்னை ஒருவனெனச் சுட்டிக் காண்பிக்கிறார் நண்பர் ரஸவாதி! இதற்கு அவசியமே இல்லை. இந்த மறைப்பு இல்லாமலேயே சொல்லியிருக்கலாமே! க. நா. சு. என்றவுடனேயே கடித்து விழுங்கும் அசைவ உணர்ச்சிக்கு இடமாகும் பல எழுத்தாளர்களில் அவரும் ஒருவர் தானே?

விருப்பு வெறுப்புக்கு ஆளாகுபவன் நான் அல்ல! விஷயங்களைத்தான் சீர்தூக்கிப் பார்க்க முயற்சி செய்கிறேனே தவிர அவைகளின் சிருஷ்டிகர்த்தாக்களை அல்ல. ரஸவாதி அவர்களுக்கு நம்பிக்கை ஏற்படும்படி நான் ஓர் உதாரணத்தைக்கூடக் கொடுக்கலாம். திரு பி. எஸ். ராமையா என் ஆப்த நண்பர் தான். ஜனரஞ்சகமாக எழுதக் கூடியவர் தான்! ஆனாலும் அவர் சிருஷ்டிகளும்தான் என் கண்டனத்துக்கு ஆளாகின்றன! இத்தனைக்கும் என்னையும் அவரையும் மணிக்கொடி கோஷ்டி என்ற திரைக்குள் தள்ளப் பலர் முயற்சி செய்வது தெரிந்ததே! நண்பர் சங்கரராம் இந்தக் கோஷ்டிக்கெல்லாம் அப்பாற்பட்டவர். அவர் சிருஷ்டி பாராட்டக் கூடியதாக இருக்கிறது. ஜனரஞ்சகமாக எழுதுவது வேறு, இலக்கிய வளம் பெற எழுதுவது வேறு. இதைப் பிரித்துக் காட்டி விளக்க வரும்போது நான் பொல்லாதவனாகிப் போகிறேன்! உண்மை சற்றுக் கசப்பாகத்தான் இருக்கும். "ஆஹா! பிரமாதம்! அற்புதம்!" என்று பெருமாள் கோவில்களில் பக்தர்களுக்குச் சடாரி சாதிப்பது போல் சமமாக எல்லா எழுத்தாளர்களையும் பாராட்டி விடலாம். சுலபம். அதனால் எழுத்தாளர்கள் பூரிக்கலாமே தவிர இலக்கிய வளர்ச்சி ஒருநாளும் பூரித்துவிடாது. உண்மையில் அத்தகைய போலிப் பாராட்டே நண்பர் ரஸவாதியின் பாஷையில் அழிப்பு விமர்சனமாகப் பணி செய்யத் தொடங்கிவிடும்.

விமரிசனக் கலைக்கு ஒரு திட்டவட்டமான அளவுகோல் என்று ஒருநாளும் இருந்தது கிடையாது. அவரவர்கள் தங்கள் அனுபவம் படிப்பு, பழைய சிருஷ்டிகள் இவற்றின் அடிப்படையில் தான் விமரிசிக்கிறார்கள். நானும் அப்படித்தான். இலக்கியத்தைப் படித்து அனுபவித்து ரசிப்பவர்கள் வேறு, அதில் தாரதம்மியங்கள், குறை குணங்கள் பாகுபாடுகள் சொல்லி, ஆனந்திப்பவர்கள் வேறு. நல்ல நூல்களைப் பெரும்பான்மையோர் ரசித்துத்தானாக வேண்டும் என்கிற கட்டாயமுமில்லை. ஜனநாயகம் என்பது வேறு எங்கே எப்படி ஆட்சி செலுத்தினாலும் இலக்கிய உலகில் அப்படி ஒன்றும் தீவிர ஆட்சி செலுத்திவிட முடியாது.

தமிழ்நாட்டின் சாபக்கேடு சிருஷ்டிகள் புத்தகங்களாக வரவேண்டுமென்றால் அவைகள் முதலில் பத்திரிகைகளில் இடம்பெற வேண்டியிருக்கின்றன. பத்திரிகைகளில் வாராந்தர சஸ்பென்ஸ்கள் தேவைகளுக்குத் தகுந்தாற் போல வெளியாகும் விஷயங்கள் புத்தக உருவில் முழுமையடையும்போது சோபிக்காமல் போவதில் வியப்பு ஒன்றுமில்லை. மேலை நாடுகளில் இந்தப் பத்திரிகை 'மீடியத்தை' எதிர்பாராமல் நேரடியாகப் புத்தகங்களாகவே எழுதுகிறார்கள். அவைகள் ஏனோ தரமாகவும் இருக்கின்றன. இதனால் தான் சொல்கிறேன், ஜனரஞ்சகமாக இருப்பதற்கும், இலக்கியத் தரத்துக்கும் ஸ்நானப் பிராப்திகூட இல்லாமல் போய் விடுகிறது. சில விதிவிலக்குகள் நேரும்போது அதைச் சற்றுப் பலமாகவேதான் பாராட்ட வேண்டியிருக்கிறது. இதற்காக நண்பர் ரஸவாதி சீறுகிறார். என்னுடைய நண்பர்கள் என்ற குழுவில் நான் சிலருடைய பெயரைச் சொல்வது உண்மைதான். ஆனால் அவர்கள் எழுதிய எல்லா சிருஷ்டிகளையுமே நான் பாராட்டியிருக்கிறேனா என்று நண்பர் ரஸவாதி கவனிக்க வேண்டும். ஒன்று குறிப்பிடத்தக்கதாக இருந்தால் சில குப்பைகளாகவே இருக்கின்றன. நான் இதை மறைப்பதில்லை. மணிக்கொடியை ஆரம்பித்து நடத்தி வந்த காலத்தில் அதில் சம்பந்தப்பட்ட ஓர் ஆசிரியர் தம் கதைகளைப் பற்றிப் பெருமையடித்துக்கொண்டார். "ஐயா! அத்தனையும் திருட்டுக் கதைகள்" என்று ஓங்கிச் சொன்ன பெருமை எனக்குத்தான் உண்டு.

நல்ல விமரிசகன் என்றால் ஒரு நூறு வருஷங்களுக்கு அப்பால் இன்று வந்த நூலைப் பற்றி ஜனங்கள் என்னதான் சொல்லுவார்கள் என்று கணிக்கும் திறமை உள்ளவனாக இருக்க வேண்டும். ஜோஸியம் அல்ல அது. குத்து மதிப்பாகக் கையளவாகச் சொல்லும் காரியமுமல்ல. நிலைத்துவிட்ட இலக்கியங்களைக் கலைத்து அறிந்து தாரதரங்களைத் தனக்குத்தானே நிர்ணயித்து மதிப்பிட்டுக் காண முயலுகிற காரியம் இது! நான் இந்த விமரிசனத் துறையில் நல்லபடியாகவே பணி செய்கிறேனென்றும், இன்றைய தமிழ் எழுத்தாளர்களின் சிருஷ்டிகளுக்குச் சரியான விமரிசனம் கிடைக்கிறது என்று நண்பர் ரஸவாதியின் கோபத்திலிருந்தே தெரிகிறது.

## அத்தியாயம் 33

# இதயம் இளகுமா?

சின்னஞ் சிறுமியாக விவரம் அறியாதவளாக இருந்தபோது, 'உன் அப்பா தான் என் அப்பா ஜெயிலுக்குப் போகக் காரணமாயிருந்தார்' என்றும், 'உன் அப்பா பலபேர் குடியைக்கெடுத்தவர்' என்றும் தன்னம்பிக்கையுடன் தன்னை மிக உயர்ந்தவனாக எண்ணிக் கொண்டு அதிகாரத் தொனியில் கூறிய உஷாவுக்கு, வயதாக ஆகக் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் குடும்பத்தின் உண்மை நிலவரங்கள் தெரிய வந்ததும் எப்படி இருந்திருக்கும்? அந்தப் பிஞ்சு நெஞ்சம் எந்த அளவுக்கு ஏமாற்றத்தால் பாதிக்கப் பட்டிருக்கும்? அந்த அதிர்ச்சியிலிருந்து ஒருவாறு விடுபட்டபோதிலும் குடும்ப பாசத்திலிருந்து விடுபட முடியாத அவள் அதன் பிறகு நேர்மையை எங்கு கண்டாலும் நெஞ்சு பொறுக்காமல் சீறுவதில் வியப்பென்ன?

வாழா வெட்டியாக விளங்குபவள் குடியும் குடித்தனமுமாக இருப்பவளைப் பார்த்துப் பொருமுவதும், ஒழுங்கினத்தில் உழலுபவள் கற்புடைய மங்கையைப் பார்த்து ஆத்திரத்தில் வெந்து போவதும், கடன் தொல்லைகளில் கண், மண் தெரியாமல் ஆழ்ந்து அவதிப்படுபவன் வரவுக்கும் செலவுக்கும் சரிக்கட்டிக் கொண்டு செல்லும் சாமர்த்தியம் உள்ள




வனைக் கண்டு உள்ளம் குமுறுவதும் இவையெல்லாம் உலகில் சகஜம்தானே?

அநீதியிலும் ஒழுக்கமின்மையிலும் வாழ்பவர்கள் அவற்றிலிருந்து மீண்டுவர இயலாமல் அவற்றுக்கே அடிமையாகி விட்டதற்கப்புறம் அதே போன்ற தவறுகளை இழைப்பவர்களிடம் சிநேகமாக இருப்பதும் தர்ம ரீதியாக வாழ முற்படுகிறவர்களிடம் பொறாமை கொண்டு வெறுப்பை உமிழ்வதும் இயல்புதானே?

மாருதியிடம் உஷாவைப் பற்றி அன்றொருநாள் சில சிமிஷங்கள் பேசிக் கொண்டிருந்த பிறகு தங்கப்பனுக்கு அவள் என்ன குற்றங்கள் புரிந்தாலும் சினம் பொங்கவில்லை. 'ஐயோ பாவம் இந்த நிலைக்கு இவள் தாழ்ந்து விட்டாளே' என்று பரிந்து கொள்ளத்தான் தோன்றியது.

இப்போதும் அவள் கரங்களைப் பற்றியபடி அதையே மெய்யன்போடு கூறினான் தங்கப்பன். "உஷா! எனக்கு உன் நிலை புரிகிறது. நீ இப்படியெல்லாம் தப்பிதமாக நடந்து கொள்வதற்கான அடிப்படைக் காரணமும் தெரிகிறது. உன்னை இந்தப் பரிதாப நிலைக்கு ஆளாக்கியவர்கள் மீதுதான் எனக்குக் கோபம் பொங்குகிறது உஷா!" என்றான்.

"அதென்ன விஷயம்? புதிதாக ஏதேதோ கண்டுபிடித்துச் சொல்கிறாயே!" என்றாள் உஷா. "யார் என்னை என்ன செய்து விட்டார்கள்....?"

"பணம் பண்ணவும் பதவியை நிலைநிறுத்திக் கொள்ளவும் உன் அப்பா எந்த வழியையும் கையாளத் தயாராய் இருக்கிறார். இல்லையா?" என்றான் தங்கப்பன்.

உஷா கலங்கவில்லை. எழுந்து நிற்பதுபோல் தன் கரத்தினை அவன் பிடியிலிருந்து விடுவித்துக் கொண்டு அமைதியாகப் பதில் சொன்னாள்: "வாழ்க்கையை நன்றாக அநுபவிக்கிறதே ஒரு கலை. எல்லாருக்கும் சுலபத்தில் அந்தக் கலை கைவராது. அதைக் குறைவில்லாமல் கற்றுத் தேற நான் ஆசைப்படறேன். அதற்குச் சமூகத்திலே நமது அந்தஸ்து உயரணும்; செல்வமும் வளர்ந்து கிட்டே இருக்கணும். நீ நினைக்கிறமாதிரி இருக்கிற பதவியை நிலைநிறுத்திக்கிட்டா மட்டும் போதாது!"

"உன் மாமா ஒரு குடிகாரனாக இருந்து உள்ள சொத்தையெல்லாம் பல வழிகளிலேயும் தாறுமாறு அழிச்சுப்பிட்டுப் பெண்டாட்டியை உங்களைத் தவிர வேறு கதியில்லாமெ தவிக்க விட்டுட்டுப் போயிட்டார்!"

"அவர் அழிச்சதைவிடப் பத்து மடங்கு அதிகமா இப்போ எங்ககிட்டே செல்வம் இருக்கு. போனதை நினைச்சுத் தலையிலே கையை வைச்சுக்கிட்டுப் புலம்பறது கோழைத்தனம்!"

"உன் அத்தை உங்களை அண்டிப் பிழைக்க வந்தவள். சொந்த விருப்பு வெறுப்புக்களை யெல்லாம் ஒதுக்கி வைச்சுட்டு

உன்னைத் திருப்திப்படுத்தறதிலேயே கண்ணுயிருந்து காலத்தை ஓட்டுகிறான்!''

''அத்தை என் பேரிலே உயிரையே வைச்சிருக்காங்க. அன்பை அடைச்சு வைக்கப் பூட்டுப் போடுறது சாத்தியமா என்ன?''

''உன் அப்பாவுக்குச் சென்னையிலே யாரோ ஒருத்தி சிநேகம் என்று ஊரிலே பேசிக்கிடறாங்க.''

இத்தனை நேரம் எவ்விதப் பரபரப்புமின்றி அலட்சியமாகப் பதில் சொல்லி வந்த உஷாவின் கண்களில் இப்போது முதன் முறையாகக் கோபம் மின்னலைப் போல் பளிச்சிடுவதைக் கண்டான் தங்கப்பன். அந்தக் கோபம் பழி சுமத்த முயன்ற தன் மீதா அல்லது அவள் அப்பாவின் அன்புக்கும் ஆசைக்கும் அவனிடம் பங்கு கேட்ட அந்த இன்னொருத்தியின் மீதா என்று அனுமானிக்க அவனால் முடியவில்லை.

''இருந்தால் என்ன?'' என்று தலையைப் பின்புறமாகச் சொடுக்கி ஒடித்து அவனை எதிர்த்து நிற்கும் தோரணையில் திடமாகக் கேட்டாள் உஷா. ''ஊர் வாய் எதையும் சொல்லும். அதற்கு மதிப்புத் தரவில்லை நான்; அதை நம்பவுமில்லை. ஆனால் அப்படியே அவருக்கோர் ஆசைநாயகி அங்கே இருந்தால்தான் என்ன? நான் ஒன்றும் பச்சைக் குழந்தையில்லை. அவரும் மனிதர் தான். சாதாரண மனித ஜன்மங்களுக்குள்ள உணர்ச்சிகள் அவருக்கும் உண்டு. என்னைப் பெற்றுப் போட்டுவிட்டு என் தாயார் இறந்த பிறகு கடந்த பதினைந்து வருஷங்களாக மகளைத் தவிர வேறு எந்தவிதமான நினைப்பும் இல்லாமலிருந்திருக்கிறாரே; அதற்காகவே நான் பெருமைப்படுகிறேன். நாளெல்லாம் நாட்டு மக்கள் நலனுக்காக உழைத்து விட்டு அலுத்துச் சலித்துத் திரும்புகிறவருக்கு அன்புடனும் அன்னியோன்னியமாகவும் இழைந்து பணிவிடைகள் செய்யக் கூடிய ஒரு பெண் துணை அவசியத் தேவைதான்!''

தங்கப்பன் திகைத்துப் போனான். சென்னையில் தினதயாளுவுக்கு யாரோ ஒரு சில்லறை சினிமா மோகினியிடம் தொடர்பு உள்ளதாகக் கூறப்படுவதை நினைவூட்டினால் அவள் அப்படியே நிலைகுலைந்து அழ ஆரம்பித்து விடுவாள் என்று எதிர்பார்த்தவனுக்குப் பிரமிப்பாகத்தான் இருந்தது. 'எத்தனை வைராக்கியம் இந்தப் பெண்ணுக்கு?' அதே சமயத்தில், 'நல்ல விஷயங்களில் அவள் மனத்தைத் திசை திருப்பி அழைத்துச் செல்ல ஆள் இல்லையே என்று குறைப்பட்டுக் கொண்டாரே மாருதி. அதன்படி அதற்காகத் தானே முன்வந்தாலும் தான் மேற்கொள்ளும் அந்தக் காரியம் எவ்வளவு கடுமையான ஒன்றாக இருக்கும் என்பதையும் உணர்ந்தான். இன்னும் ஒரு விநோதமான எண்ணமும் உருவாயிற்று அவன் இதயத்தில். அவள் மனம் மாறுவதற்குப் பதிலாகத் தான் அவள் பக்கம் சாய்ந்து விட்டால்? அதற்காகவே தான் அவளும் பிரயாசைப்பட்டதாகத் தோன்றியது! சத்தியத்தில் தங்கப்பனை நம்பிக்கை இழக்கச் செய்ய அவள், ஃபாக்டரியில் கலகம் உண்டாக்கியும் தேர்தலில் அவனுக்கு உதவியவர்களுக்கு இன்னல்கள் விளைவித்தும் பயமுறுத்துவது முதல் தன் வசீகரமான உடல் வனப்பினால் அவனை அடிமைப் படுத்த முயலுவது வரை பலவித அஸ்திரங்களைப் பிரயோகித்துப் பார்க்கவும் தயங்கவில்லை! அந்த வலையில் தான் விழுந்துவிட வேண்டியதுதான். அடுத்த விநாடியே முன்னெப்போதையும் காட்டிலும் அதிகமாகத் தன்னை அவள் துச்சமாகக் கருதி எள்ளிநகையாடுவாள்! 'நேர்மையாளரின் மனமாற்றத்துக்கு முயல வேண்டும். அது சாத்தியமாகா விட்டால் அவர்களை வெறுக்க வேண்டும். பல இடையூறுகளையும் கஷ்டங்களையும் ஏற்படுத்தி அவர்களை ஒன்றுமில்லாதவர்களாக்கி அழிக்க வேண்டும். இதுதானே அவளுக்கு வாழ்க்கையில் லட்சியங்கள்! அழகுதான்!'

''என்ன, அப்படியே குத்துக் கல்லாட்டமா நின்னுட்டே?'' என்றாள் உஷா. அவள் கண்களில் விஷமம் விளையாடியது. அதரங்களில் வெற்றிப் பெருமிதம் துள்ளியது.

அது வரை பேச நா எழாமல் நின்றிருந்த தங்கப்பன், ''பொதுவாகவே பெண்களிடம் வாய்ச் சண்டையில் ஜெயிப்பது கஷ்டம்; அதிலும் உன்னிடம் நான் தோல்வியை ஒப்புக் கொள்வது தவிர வேறு வழி இல்லை'' என்றான்.

''அதே போல் தேர்தலில் நீ அடையப் போகிற தோல்வியையும் இப்போதே ஒப்புக் கொண்டு விடலாமே!'' என்றாள் உஷா.

''உஷா, நீ எதற்காக என்னை இந்த அளவுக்கு வெறுக்கிறாய்?'' என்று நேரடியாகவே கேட்டு விட்டான் தங்கப்பன்.

''நீ எதற்காக என் அப்பாவை எதிர்க்கிறாய்?'' என்று திருப்பிக் கேட்டாள் அவள்.

''உன் அப்பாவுக்கு நான் விரோதியில்லை; அவர் கொள்கைகளை நான் எதிர்க்கிறேன். அவ்வளவுதான். மாறுபட்ட கருத்துக்களைக் கொண்டவர்களும் சிநேக பாவத்துடன் வாழ முடியும் உஷா! ஜனநாயகத்தின் அடிப்படையே அதுதான். உன்னிடம் நான் கேட்டுக் கொள்வதும் அதைத்தான். யோக்கியமானவனாக நான் இருக்க முயலுகிறேன் என்பதற்காகவே என்னை வெறுக்காதே! என் அப்பா கள்ளுக் கடைகள் வைத்திருந்ததின் காரணமாக அவலை நினைத்துக் கொண்டு உரலை இடிப்பதுபோல் உன் அத்தை தனக்கு நேர்ந்த அவல வாழ்க்கையை எண்ணி என் மீது வெறுப்பைக் கொட்டுகிறாள். அந்த வெறுப்பு உன்னிடமும் பற்றிக் கொண்டிருக்கிறது. என் மாமா கணக்கு வழக்குகளில் என் அம்மாவை ஏமாற்றிமோசடி செய்ததால் அவரைப் பகைக்கவிட்டேன். என் மீது அவருக்கு ஏற்பட்ட ஆத்திரத்தால் அவர் உன்னைத் தம் வசப்படுத்திக்கிட்டு உன் மூலமா உன் செல்வாக்கையும் செல்வத்தையும் பயன்படுத்தி என்னைப் பழி வாங்கப் பார்க்கிறார். இதற்கெல்லாம் நீ உடந்தையாக இருந்து கெட்டுப் போகாதே உஷா!

''நடத்தை, எண்ணம், நோக்கம், லட்சியம் இவற்றிலே நாம் இரண்டு பேரும் இரண்டு துருவங்களிலேதான் இருக்கிறோம். ஆனாலும் அதற்காக நாம் குரோதத்தை வளர்த்துக்கிட வேண்டாம், நண்பர்களாகவே பழக முயலுவோம்.''

## உலகப் புகழ்பெற்ற டீஸல் எஞ்சின்களின் பெயர்





# பர்கின்ஸ்

பர்கின்ஸ் எஞ்சின்கள் இயங்கும் சக்தியை நன்கு அளிக்கின்றன. கைதேர்ந்த வேலைப்பாடுடன் உறுதியான சாமான்களைக் கொண்டு திறம்பட அமைக்கப் பெற்றவையாதலால் பர்கின்ஸ் எஞ்சின்கள் சாசுவதமான மதிப்புள்ளவை. உறுதியான உழைப்பு, சிக்கனம், ரிப்பேர் தொல்லையின்மை இவற்றிற்கு உத்திரவாதமளிப்பவை. பர்கின்ஸ் எஞ்சின்களை இணைத்து பூரண திருப்தி யடையுங்கள்.




தயாரிப்பாளர்கள் :

## ஸிம்ஸன் & கோ., லிட்.

(ஸ்தாபிதம்: 1840) மதராஸ்-2

தலைமை ஆபீஸ்: 202/203, மவுண்ட் ரோடு, மதராஸ்-2

கிளைகள் : பெங்களூர் - உதகமண்டலம் - திருச்சிராப்பள்ளி - ஹைதராபாத் (A. P.)

"உன் சிநேகிதத்துக்காக இங்கே யாரும் ஏங்கித் தவிக்கலே" என்றாள் உஷா சீறிப் பாய்வது போன்ற தொனியில்.

தங்கப்பன் சிரித்தான். "வாழ்ந்தால் உனக்கு அடிமையாகத்தான் வாழ வேண்டும். இல்லாவிட்டால் உன் விரோதியாகத்தான் விளங்க வேண்டும்! அதுதானே, உன் சித்தாந்தம்? உஷா! 'இதயத்தை இளக விடாதே. இரும்பாக்கிக்கிடு' என்று சற்று முன்னால் உபதேசம் செய்தாயே, நினைவிருக்கிறதா? அந்தக் காரியத்தை நீ உன் உள்ளத்தைப் பொறுத்தவரை நன்றாக நிறைவேற்றி வைத்திருக்கிறாய். அதிகார ஆணவமும், அழகின் அகந்தையும், பணப் பெருமையும் சேர்ந்து உன் மனசைக் கல்லாக்கி யிருக்கின்றன. உன் தாயார் ஸ்தானத்திலே ஒரு கூத்தாடி இருப்பதைக்கூட நியாயம் என்று வாதாடுகிற அளவுக்கு உன் உள்ளம் மரத்துப் போய்க் கிடக்கிறது! ஆனாலும் உன் நெஞ்சிலே ஏதேனும் ஓர் ஓரத்தில் பெண்மைக்குரிய மென்மை இல்லாமல் போகாது! என்றைக்காவது ஒரு நாள் ஈவிரக்கம் புதையுண்டு கிடக்கும் அந்தப் பகுதி வெடித்துச் சிதறப் போகிறது. கண்ணீரைச் சிந்தப் போகிறது. அதை நானும் பார்க்கத்தான் போகிறேன்" என்றான்.

## அத்தியாயம் 34

# பயங்கரச் செய்தி

தங்கப்பனும் தீனதயாளுவும் மாறி மாறிப் பல இடங்களில் காரசாரமான சொற்பொழிவுகள் செய்தார்கள். தீனதயாளு பல பிரசங்கங்கள் புரிந்து பண்பட்ட பேச்சாளராகத் திகழ்ந்தார். தங்கப்பன் அதுவரை அதிகமாக மேடை ஏறி அறியாதவன். தொழிலகத்தின் திறப்பு விழாவின்போதும் கல்லூரியில் ஓரிரு தடவைகளிலும் சில நிமிஷங்களுக்கு மைக் முன்னால் நின்றிருக்கிறான், அவ்வளவுதான். மக்களைச் சிந்திக்க விடாமல் மயக்கிய தீனதயாளுவின் சொல் அடுக்குகளின் முன்னால் தன் பேச்சு எடுபடாது என்பது அவனுக்குத் தெரிந்ததுதான். ஆனால் சாதுர்யமாக இதனை வெளிப்படையாக ஒப்புக்கொண்டதன் மூலமே அவன் நல்ல பெயர் சம்பாதித்து விட்டான். பிறகு, "ஒருசிலரைப் போல் விஷயமில்லாமல் எனக்கு வார்த்தைகளை மட்டும் உதிர்க்கத் தெரியாதுதான். உண்மையில் இங்கே வருவதற்கு முன்னால் வீட்டில் கண்ணாடி எதிரே நின்று பேசி ஒத்திகை பார்த்துக் கொண்டுதான் கிளம்பினேன். ஆகவே, மெல்ல, நிதானமாக இல்லை, ஓரளவு தடுமாற்றத்துடன்கூட நான் ஏற்கனவே யோசித்து வைத்திருக்கும் விஷ



பங்களை விளக்கமாகச் சொல்கிறேன்'' என்று தன் கொள்கைகளை மக்களுக்குப் புரிய வைத்தான். ''நாளுக்குப் பத்துக் கிராமம் என்று சூறாவளி சுற்றுப் பயணம் செய்ய என்னிடம் கார் வசதியோ, ஜீப் படைகளோ கிடையாது. அந்த அளவுக்குச் செல்வம் இல்லை. ஆனால் உங்களுக்காக உழைக்க என்னிடம் உறுதியான உடல் உண்டு. நிறைந்த உள்ளம் உண்டு. உங்களுக்கு உண்மையான உழைப்பு வேண்டுமானால் என் சார்பில் உங்கள் நண்பர்களிடமும் பேசுங்கள். இல்லை, 'வெளிப் பூச்சுக்குத்தான் மதிப்புத் தருவோம். உளுத்துப் போன மரமானாலும் பரவாயில்லை' என்றால் அது உங்கள் இஷ்டம்.'' — இப்படி மனம் விட்டு அவன் பேசியது அவன் பக்கத்தில் அனுதாபத்தைத் திரட்டித் தந்தது.

''போர்க்களத்திலே அறுபத்துநான்கு விழுப் புண்களைப் பெற்றவன் என்று சரித்திர காலத்திலே படைத் தலைவர்களுக்கு விருதுகள் வழங்குவார்களாம் மன்னர்கள். நான் மட்டு மென்ன? நாடு சுதந்திரம் பெற வேண்டும் என்பதற்காக எத்தனையோ துன்பங்களை அனுபவித்தாகி விட்டது. கள்ளுக்கடை மறியலென்றும், உப்பு சத்தியாக்கிரகமென்றும், ஆகஸ்டு புரட்சி என்றும் பல இயக்கங்களில் ஈடுபட்டுத் தடியடி பட்டும் சிறைவாசம் புரிந்தும் தேச சேவை செய்தேன். அந்தத் தழும்புகள் இன்றும் என் தேகத்தில் உள்ளன. அத்தனை சிரமங்களையும் தாங்கி விடுதலைக்கு அடிகோலிய என் போன்றோருக்கு இன்று ஓரளவு சௌகரியமாக வாழ உரிமையில்லையா? நேற்றுப் பிறந்தவர்கள், தியாகத் தீயில் நாங்கள் குதித்தபோது தெருவில் கோலி விளையாடிக் கொண்டிருந்தவர்கள் இன்று என்னை எதிர்க்கிறார்கள். நான் கார் வைத்திருப்பதையும் ஜீப்கள் ஓடுவதையும் பற்றி அபத்தமாகத் தட்டிக் கேட்கத் துணிகிறார்கள். இவர்களுக்குப் பதில் சொல்லித்தான் ஆக வேண்டுமா?'' என்று தினதயாளு முழக்கினார், கரகோஷமும் பெற்றார்.

'' 'அன்று கோலி விளையாடிக் கொண்டிருந்தான்' என்பதும் ஒரு வாதமா?'' என்று கேட்டான் தங்கப்பன். ''இவரும் சிறுவனாக இருந்த போது ஏதேனும் விளையாடித்தானே இருப்பார்? யாருமே எடுத்த எடுப்பிலேயே அனுபவம் மிகுந்தவர்களாகிவிட முடியாது. ஏணியின் முதல் படியில் அடியெடுத்து வைத்துத்தானே மேலே ஏற வேண்டும்? ஆகவே இருவரது கொள்கைகளிலும் உள்ள ஏற்றத் தாழ்வுகளைத்தான் கவனிக்க வேண்டுமே ஒழிய வயதிலோ அனுபவத்திலோ உள்ள ஏற்றத் தாழ்வுகளுக்கு முக்கியத்துவம் அளிக்கக் கூடாது. நான் இந்தத் துறைக்குப் புதியவன் தான், முன் அனுபவம் இல்லாதவன்தான். பழம் பெருச்சாளியாக இல்லாமலிருப்பதாலேயே நேர்மையாகவும் கடுமையாகவும் மனப் பூர்வமாகவும் உழைப்பேன் என்று நீங்கள் எதிர்பார்க்கலாம். மேலே மேலே முன்னுக்கு வர வேண்டும் என்ற ஆர்வத்தால் ஊக்கத்துடன் பாடுபடுவேன் என்று நம்பலாம்'' என்று தினதயாளு பேசிய அதே மேடையில் எடுத்துரைத்தான்.

ஒருநாள் இரவு சுமார் பதினொரு மணி இருக்கும். ஒரு கிராமத்தில் பொதுக் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தான் தங்கப்பன்.

''ஏதோ சரித்திர காலத்தில் கொடுக்கப்பட்ட விருதுகள் பற்றி இந்த மேடையில் நேற்றுப் பேசப்பட்டதாக அறிந்தேன். இன்றைய நிகழ்ச்சிகளும் நாளைய சரித்திரங்களாகத்தான் போகின்றன. இன்றைய சரித்திரம் இதனைக் கங்கையும் கடாரமும் கொண்ட சோழன் வாழ்ந்த நாடு என்று புகழ்கிறது. புத்தபிரான் அவதரித்த புண்ணிய பூமி என்று போற்றுகிறது. இன்னும் பல வாறுகவும் வர்ணிக்கிறது. நாளைய சரித்திரமும் இதே போல் இதனைக் காந்திஜியின் பாதங்கள் பட்ட புனித பூமி என்றும் ஆசிய ஜோதி சுடர்விட்ட உன்னதமான தேசம் என்றும் கூறும். அது மட்டுமா? 'கள்ளுக் கடைகளை மீண்டும் திறந்தால் எனக்கு இருபத்தையாயிரம் ரூபாய் லஞ்சம் தருவதாகச் சொன்னார்கள்' என்று பெருமையடித்துக் கொண்ட முதல் மந்திரி வாழ்ந்த தேசமும் இதுதான்! 'அரிசி விலை ஏறிப் போச்சு என்று பழங்களைச் சாப்பிடலாமே, காய்கறிகளை நிறையச் சேர்த்துக் கொள்ளலாமே' என்றும், 'பஸ்ஸில் இடமில்லையானால் நடந்து போகலாமே, உடம்புக்கு நல்லது' என்றும் அருமையான யோசனைகளை மக்களுக்குச் சொன்ன மந்திரிகள் அவதரித்த புண்ணிய பூமியும் இதுதான்! மிகக் குறுகிய காலத்துக்குள் பத்துக்கோடிரூபாய் சொத்து சேர்த்ததாகத் தன் சாமர்த்தியத்தைக் குறித்துச் செருக்குடன் பேசிய முதல் மந்திரி உலவி வந்ததும் இந்தப் பொன்னான பாரத நாட்டிலேதான்! மதுவிலக்கு மந்திரியாக விளங்கிக் குடித்துவிட்டு மனைவியை அடித்தும் விவாகரத்துக் கோரியும் ரகளை செய்தபின், ராஜிநாமா செய்ய மாட்டேன் என்று வேறு பிடிவாதம் பிடித்த அமைச்சர் ஆண்டதும் இதே இந்தியாவில்தான். இப்படியாக ஒன்றா இரண்டா? எத்தனையோ பெருமைகளைப் பேசப்போகிறதுசரித்திரம்,வருங்காலத்தில்.''

இவ்விதம் ஏளனமாகவும், ஒழுக்கத்துக்கு நாட்டில் ஏற்பட்ட பஞ்சத்தை எண்ணி விசனத்துடனும் தங்கப்பன் பேசிக்கொண்டே இருக்கையில்தான், அவசரம் அவசரமாகக் கதிர்வேலன் மேடை மீது ஏறி வந்து அந்தத் திடுக்கிட வைக்கும் செய்தியைத் தங்கப்பனிடம் அவன் சொற்பொழிவை இடைமறித்துக் கூறினான். அப்போது மணி இரவு சுமார் ஒன்று இருக்கலாம்.

''மாருதி குண்டர்கள் சிலரால் தாக்கப்பட்டுக் கோவை ஆஸ்பத்திரியில் கிடக்கிறார்'' என்பதுதான் அந்தச் செய்தி. கோயமுத்தூரிலிருந்து காரிலே அந்தக் கிராமம் பக்கமாக வந்த தினதயாளுவின் ஆட்கள் சிலர் கருணை கொண்டு இந்தத் தகவலைத் தெரிவித்து விட்டுப் போனார்களாம்!

பெரும் கலவரமடைந்த தங்கப்பன் மேடையிலிருந்து குதித்தான். அந்த வேகத்தில் அருகிலிருந்த பெட்ரோமாக்ஸ் விளக்கு ஒன்று கீழே விழுந்து உடைந்தது. குப் பென்றுதீப்பற்றி மண்ணெண்ணெய் எரிந்தது.

# டெரிகாட் - டெரிஉல் - டெரீன்

## சூட்டிங்களில் புது கலர்கள்

புல் வாயில்களில் புது டிசைன்கள்

வழுவழுப்பான டெபிலேஸ்டு சோளி ரகங்கள்

பல புது வர்ணங்களில்

கண்கவர் ரெடிமேடு ஆடைகள் வாங்க

# ராமு & கோ.,

ஜவுளிக் கடைகள் :-

1 R.S.புரம்: போன்-4397 2 அவனுசி ரோடு: போன்-5124

3 கிராஸ்கட் ரோடு: போன்-5889

ரெடிமேட் கடைகள் :-

1 கிராஸ்கட் ரோடு 2 R.S.புரம்

**கோயமுத்தூர்.**

OSR



# பார்கோ

**கேஸ் மான்டில்கள்**



நிறைந்த ஒளிக்கும்,
நீடித்த சேவைக்கும்

தயாரிப்பவர்கள் :

**பார்கோ மான்டில் ப்ராடக்ட்ஸ்**

பக்கத்தில் இருந்தவர்கள் மண்ணை அள்ளிப் போட்டு அதனை அணைத்தார்கள். சாதாரணமாகத் தங்கப்பனுக்குச் சகுனம் முதலானவற்றில் நம்பிக்கை கிடையாதுதான். ஆனால் மாருதிக்கு ஆபத்து என்று அறிந்ததிலிருந்து அவன் மனம் பேதலித்துப் போயிற்று. இதை ஒரு துர்ச்சகுனமாகக் கருதி, நெஞ்சம் பதை பதைத்தான் அவன். பாய்ந்து சென்று தேர்தல் உபயோகத்துக்கென்று 'செகண்ட் ஹாண்டில்' வாங்கியிருந்த தன் மோட்டார் சைக்கிளில் ஏறி வேகமாக அதனைச் செலுத்திக் கொண்டு போனான். அவனுக்குப் பின்னால் அமர்ந்திருந்த கதிர்வேலுவுக்குத் திகில் இதயம் திக் திக்கென்று அடித்துக் கொண்டது. "மெல்லப் போங்க ஐயா! அவர்தான் அடிபட்டு ஆஸ்பத்திரியிலே படுத்துக் கிடக்கிறாருன்னா, உங்களுக்கு வேறே விபத்து நேர வேணும் இப்போ" என்றான்.

அவன் பேச்சைத் தங்கப்பன் லட்சியம் செய்யவில்லை. அவன் உயிர்தான் ஏற்கனவே கோவை ஆஸ்பத்திரியில் துடிதுடித்துக் கொண்டிருந்ததே. இங்கே அவனுக்கென்று ஓர் உயிர் இருந்தாலல்லவா அவன் அது பற்றிக் கவலைப்படப் போகிறான்?

இருளைக் கிழித்துக் கொண்டு மோட்டார் சைக்கிளின் முன் விளக்கு ஒளி பரப்பப் பயங்கரமாக உறுமிக் கொண்டு அறுபது மைல் வேகத்தில் விரைந்தது வாகனம்.

கோயமுத்தூரை நெருங்க, நெருங்க இதெல்லாமே தன்னைக் கலவரத்தில் ஆழ்த்தத் தனதயாளுவின் ஆட்களால் கூறப்பட்ட ஒரு கட்டுக் கதையோ என்று எண்ண ஆரம்பித்தான் தங்கப்பன். அப்படியே கட்டுக் கதையாகவே இருந்துவிடக் கூடாதா என்று அவன் மனம் ஏங்கித் துடித்தது.

அப்படி ஆசைப்பட்டது காரணமாகவே தலையிலும் உடம்பிலும் பட்ட பலத்த காயங்களுக்குக் கட்டுப் போட்டுப் படுக்க வைக்கப்பட்டிருந்த மாருதியை நேரில் கண்டதும் அவன் துக்கம் பன்மடங்காகப் பெருகியது.

"மாருதி சார்! இதெல்லாம் என்ன?" என்று அலறினான் தங்கப்பன்.

"உனக்கு வோட்டுப் போடச் சொல்லிக் கிராமம் கிராமமாகப் போய்க் கேட்டதற்குக் கிடைத்த பரிசு தம்பி, இது!"

"ஐயோ!" என்று வேதனை தாங்காமல் துவண்டான் தங்கப்பன். அவர் பாதங்களைப் பற்றி முகத்தை அவற்றில் புதைத்துக் கொண்டு விம்மி விம்மி அழுதான். "கதர் கட்டாத காந்தி நீங்கன்னு நெனச்சுப் பெருமைப்பட்டுக்கிட்டிருந்தேனே, உங்களுக்கா, இந்தக் கதி?" என்று புலம்பித் தீர்த்தான்.

"அடித்து நொறுக்கியதுடன் நிற்கவில்லை தம்பி! அடுத்தாற்போல் அடுக்கடுக்கான ரூபாய் நோட்டுக்களையும் என் கரங்களிலே அள்ளிச் சொரிந்தார்கள்" என்றார் மாருதி.

அந்தத் துன்பத்துக்கிடையிலும் வியப்பு மிகுந்தவனாக நிமிர்ந்து நோக்கினான் தங்கப்பன். தனதயாளு ஆஸ்பத்திரியின் அந்த அறைக்குள் நுழைந்து கொண்டிருந்தார்.

(தொடரும்)



# YET ANOTHER FEATHER

Sankar Brand Calcium Carbide—the first make of Indian Calcium Carbide to be exported - has added yet another feather to its cap. It now proudly holds the ISI trademark, another tribute to its superb quality.

With the main use of Calcium Carbide in the manufacture of acetylene gas for welding and various other purposes Sankar Brand Calcium Carbide has made itself indispensable to industry at large.




SOLE SELLING AGENTS:

**V. D. SWAMI & CO. PRIVATE LTD.**

Calcutta • Madras • Delhi • Bombay

IS 1040







FDS/VDS-5

# ஆலவாய்

ஜெகசிற்பியன்



அத்தியாயம் முப்பத்தோன்பது

## இனம் இனத்தோடு

அஞ்சுகம் கொஞ்சுவது போன்ற அழகு தமிழில் அந்த அகதிப் பெண் பேசியதைக் கேட்டு வியப்பால் உள்ளம் வியர்த்துப் போன சபேசன் தன்னையறியாமலே பின்னால் நகர்ந்தவாறு அவளைப் பரபரப்புடன் கூர்ந்து நோக்கினான்.

அவள் கையிலிருந்த தாகூரின் புத்தகத்திலிருந்து அப்போதுதான் தன் பார்வையைப் பெயர்த்தெடுத்த அவள் அவனை ஒரு கணம் ஏறிட்டுப் பார்த்துவிட்டுப் பின் சாவதானமாகத் திரும்பித் தூண்டில் முள்ளில் இரை கோத்

துக் குளத்து நீர்ப் பரப்பில் சுழற்றிப் பாய்ச்சினாள். குண்டுக் கல் ஒன்றின் மீது வலது காலைத் தூக்கி வைத்துக்கொண்டு நின்ற அவளது ஒய்யார ஒயிலையும், அதற்கேற்றவாறு முகத்தில் நிலவிய நளின எழில் பாவங்களையும் ஒரு புகைப்படக் கலைஞன் போல் ரசித்துப் பார்த்துகொண்டிருந்தான் சபேசன். இப்படி ஒரு பெண்ணை நேருக்கு நேர் பார்க்கத் துணிந்ததிலிருந்தே அவன் மனம் பெரியதொரு மாறுதலுக்கு உள்ளாகியிருக்கிறதென்பது தெளிவாகியது. சென்னையில் இருந்தபோது இவ்விதமாக எந்தப் பெண்ணையும் — ஏன், வேதாவைக்கூட—தன் முழுக் கண்களாலும் பார்க்க அவனுக்குத் துணிவு ஏற்பட்டதே இல்லை.

அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். அவளோ நீரில் கிடந்த தக்கையின் மீதே கண்ணாயிருந்தாள். சில விநாடிகளுக்குப் பின் அவனுடைய கண்ணில் ஏறியிருந்த துணிவை அவனது மனத்தில் இயற்கையாகவே குடிகொண்டிருந்த பண்பு எதிர்ப்பட்டெழுந்து கரைக்கவே, சட்டென்று தலையைத் தாழ்த்திக் கொண்டு அங்கிருந்து செல்லத் திரும்பினான்.

''அது எங்கள் தாகூரின் புத்தகம்தானே?''

கிள்ளைத் தமிழில் மீண்டும் வீணை முரல்வது போன்ற இந்தக் குரல் கேட்டு நிமிர்ந்த சபேசன், ''ஆமாம்; இது எங்கள் தாகூரின் புத்தகம்தான்!'' என்றான் வாலிப வாடை கமழ்ந்த புன்னகையுடன்.

அவள் அவனை ஒரு கணம் ஊடுருவி நோக்கினாள். 'எங்கள் தாகூர்' என்று தான் சொன்னதற்கு அவன் 'எங்கள் தாகூர்' என அழுத்திக் கூறியதிலிருந்த குத்தலையும் குறும்பையும் புரிந்து கொண்டு நாணமடைந்தாளோ என்னவோ அவளது அழகிய மூக்கு நுனியும் செவியோரங்களும் சிவந்தன. தன் கோமள வண்ண அதரங்களை நெளித்து மோகனப் புன்னகை பூத்த அவள், ''நானும் இதைப் படித்திருக்கிறேன், மூல மொழியிலேயே!'' என்றாள் இனிய மென் குரலில்.

சபேசனுக்கு அவளைப்பற்றிய ஒரு விஷயம் பளிச்செனத் தெரிந்து விட்டது: அவள் வங்காளி என்பதே அது !

அந்தச் சிற்றூற்றங் கரையின்மேல் புகை படிந்த பித்தளைக் குவளைகள் போன்ற குலைகளைத் தள்ளி நின்ற பனை மரங்களில் சிலர் ஏறிக் காய்களை வெட்டிச் சரிக்க, அவற்றைக் கீழே நின்றவர்கள் பொறுக்கிக் கூடைகளில் போட்டுக் கொண்டிருந்தனர். சிறுமியொருத்தி நுங்குகள் தெரியச் சீவிய இரண்டு காய்களை எடுத்துக் கொண்டு சபேசனிடம் ஓடி வந்தாள்.

''நுங்கு வாங்கிக்கிறீங்களா, அண்ணே ? ஆறு நுங்கு ஓரணாத்தான்.''

சபேசன் காசு கொடுத்து அவற்றை வாங்கிக் கொண்டான். சிறுமிக்கு ஒரே கொண்டாட்டம். அவள் அங்கிருந்து ஓட்டம் பிடித்தாள். இரண்டு கைகளிலும் இரண்டு பனங்காய்களை ஏந்திக் கொண்டு தயக்கத்துடன் ஓரடி முன்னால் வந்த அவன், தூண்டில் தக்கையின் மீதே கவனமாயிருந்த அந்தப் பெண்ணைப் பார்த்து, ''நுங்கு சாப்பிடுகிறாயா?'' என்று இதமாக வினவினான். ''இந்த வெயில் வேளைக்குக் குளுகுளுவென இருக்கும்.''

அவனைத் திரும்பிப் பார்க்காமலே முகத்தை இலேசாகச் சுளித்துவிட்டு, 'வேண்டாம்' என்பதுபோல் மெல்லத் தலையசைத்த அவள் உள்ளூறப் பயப்படுகிறாள் என்பது படபடவெனத் துடித்த அவளது கண்ணிமைகளிலிருந்து புலனாயிற்று.

அதைப் புரிந்துகொண்ட சபேசன் ஒரு கண யோசனைக்குப் பின், ''ஏன் வேண்டாம் என்கிறாய்? நானும் உன்னைப்போல் ஓர் அகதிதான்; வித்தியாசமாக நினைக்காதே!'' என்றான் புன்னகையுடன்.

திடுக்குற்றுத் திரும்பிய அவள் தன் நீல நிறக் கண்களை மலர்த்தி அவனை வியப்புடன் நோக்கினாள்.

''ஆமாம்; பர்மாவிலிருந்து விரட்டப்பட்ட பல ஆயிரம் இந்தியர்களில் நானும் ஒருவன். அகதியாகத் தாய்நாட்டுக்கு ஓடி வந்து சேர்ந்து இன்னும் மூன்று மாதங்கள் கூட ஆகவில்லை. நீ இப்போது தங்கியிருப்பது போன்ற அகதி முகாம் ஒன்றில்தான் நானும் சில நாட்கள் தங்கியிருந்திருக்கிறேன் சென்னையில்.''

அதிகப் பிரசங்கித்தனமாகத் தன்னைப் பற்றி அதிகம் சொல்லி விட்டோமோ என்று எண்ணிச் சட்டென்று உதட்டைக் கடித்துக் கொண்டு தலை குனிந்தான் சபேசன். இவ்விஷயமாக இதுவரை யாரிடமும் எதுவும் சொல்ல விரும்பாமலிருந்த அவன் இந்தப் பெண்ணிடம் மட்டும் தானே முந்திக் கொண்டு சொன்னது ஏன்? அவளிடம் ஏதாவது பேச வேண்டும் என்ற ஆவலால் உந்தப்பட்டு அசட்டுத்தனமாக அப்படி உளறினானா? அல்லது அவளுக்கும் தனக்கும் ஒரு நெருக்கத்தை உண்டு பண்ணி அவளைத் தன்னிடம் பேச வைக்க வேண்டும் என்பதற்காக நன்கு சிந்தித்தே அவ்வாறு கூறினானா?

வெண் தந்தம் போன்ற அவளது வலக் கரம் நீளுவதைக் கண்டு மகிழ்ச்சியுடன் நிமிர்ந்த சபேசன் தன்னை மீறிய ஒரு குழைவோடு பனங்காயை அவளிடம் கொடுத்தான். அதே சமயம் நீரில் மிதந்து கிடந்த தூண்டில் தக்கை விர்ரென உள்ளுக்கு இழுத்துச் சென்றது. ஆனால் அதைக் கவனியாமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள் அவள். சடாரெனத் தாவிய சபேசன் அவளது இடது கரத்திலிருந்த தூண்டில் கோலை வெடுக்கெனப் பிடுங்கி வேகமாகச் சுண்டியிழுத்து வெளியே வீசினான்.

''ஆ........ கனமாயிருக்கிறதே! பெரிய மீன் போலிருக்கிறது!''

உரக்கக் கூவினான் சபேசன். அவள் ஒய்யாரமாகத் திரும்பிப் பார்த்தாள். கரையில் கிடந்த தூண்டில் நூலை ஆவலுடன் ஓடிப் போய்த் தூக்கினான் அவன். ''ஐயையே!.... தவளை!.... தவளை!....''

ஜலதரங்கத்தைத் தட்டி மீட்டினாற் போன்ற நெஞ்சையள்ளும் இனிய ஓசை— அவள்தான் அப்படிக் கலகலவெனச் சிரித்தாள். அவனுக்கும் சிரிப்பு வந்து விட்டது. ஆனால் முன்னை விழுங்கிவிட்டுக் கரையில்

# பண்டைய திறமை —நவநாகரீகத்தின் முன்னணி

கைத்தறி ஆடைகளின் நேர்த்தியான நெசவு... நெசவாளரின் தொன்மை வாய்ந்த திறமையும் இன்றைய நாகரீகத்தின் சிறப்பும் ஒருங்கே சேர்ந்தது. நூற்றுக்கணக்கான வகைகளில் எந்த சந்தர்ப்பத்திற்கும் அணிவதற்கேற்ற அழகிய கைத்தறிப் புடவைகள். கைத்தறி ஆடைகள் இன்றையத் தேவைகளின் சவாலை ஏற்கின்றன.

வர்ண ஜாலங்களில் மின்னும் மென்மையான ஆடைகள் உலகில் நீங்கள் ஜம்மென்று உலாவலாம். ஏனெனில் நீங்கள் அணியும் கைத்தறிப் புடவைகள்—பட்டாயினும் நூலாயினும்—இன்றைய நாகரீகத்தின் முன்னணி.

**ஹாண்ட்லூம் ஹவுஸ்**

9, ரத்தன் பஜார், சென்னை-3



FDS. HH. 547 TM. A.





நீங்களும் அழகாக விளங்கலாம்

# லாக்டோ-காலமைன் உபயோகித்தால்

ஏனெனில் அது ஒரு சாதாரண அழகு சாதனம் மட்டுமல்ல, சருமத்திலுள்ள குறைகளை நீக்கி ஒளியுடன் மிளிரச் செய்கிறது.

சருமத்திற்கு இதத்தைச் செய்யும் "காலமைன்" "விச்-ஹேஸல்" (பனிப்பிரதேசங்களில் வளரும் ஓர் வகை மரத்தின் திரவம்) ஆகிய உயர்தர மூலப் பொருள்கள் "லாக்டோ-காலமைனி"ல் சேர்க்கப்பட்டிருப்பதால் உங்கள் சருமம் இயற்கைப் பொலிவுடன் பளபளக்க உதவுகிறது. சருமத்தில் உள்ள குறைபாடுகளை அகற்றி சுத்தப்படுத்துகிறது. லாக்டோ-காலமைன் அவற்றை அடியோடு மறைத்தும் விடுகிறது. பவுடர் பூச்சுக்கு முன்பு உபயோகிக்க இது மிகச் சிறந்தது. சருமத்துடன் ஒன்றிப்போவதுடன் சருமத்தை பட்டுப்போல மழமழப்பாக்கி பிரகாசிக்கச் செய்கிறது. வெய்யிலினால் பாதிக்கப்பட்ட சருமத்திற்கு இதம் அளிக்கிறது. சருமத்தில் உள்ள குறைபாடுகளை மறைத்துப் போக்கிக் குணம் அளிக்கும் அழகு சாதனம் லாக்டோ-காலமைன் ஒன்றுதான். எண்ணெய் பசையற்றது. மெல்லியது. தினசரி உபயோகத்துக்கு நேர்த்தியானது.




குரூக்ஸ்

இயற்கை அழகு பொலிய வகை செய்கிறது **லாக்டோ-காலமைன்**

**லாக்டோ-காலமைனின் இதர வகைகள்: கிரீம், (ஆடை) டால்க் (பவுடர்)**

கிடந்து துடித்த அந்தத் தவளையைக் காண அவன் மனம் இளகித் தவித்தது. அருகில் ஓடினன். அதைத் தொட்டு விடுவிக்க அருவருப்பாயிருக்கவே, இடுப்பின் மேல் இரு கைகளையும் ஊன்றிக் கொண்டு குனிந்து, அது துள்ளுவதுபோல அவனும் அப்படியும் இப்படியுமாகத் துள்ளிக் குதித்தான். அதைக் கண்டு அவளுக்கு மேலும் சிரிப்புப் பொங்கியது. அவனைக் குறும்பாகப் பார்த்துக் கொண்டே வந்து அலட்சியமாகத் தூண்டில் கோலை எடுத்துத் தலைக்குமேல் தூக்கி ஆலவட்டமாகச் சுழற்றினள். ஐந்தாறு சுற்றில் அந்தத் தவளை, முள்ளைக் கக்கிவிட்டுத் தண்ணீரில் போய்த் தொபீரென விழுந்து உயிர் தப்பியது. தவிப்பு நீங்கிய சபேசன் நிம்மதியாக நிமிர்ந்தான்.

அவள் அவனைக் கடைக்கண்ணால் கவனித்துக் கொண்டே தூண்டில் முள்ளில் இரை கோத்துத் தண்ணீரில் வீசி விட்டுக் குண்டுக் கல்லின் மேல் ஒயிலாக உட்கார்ந்தாள்.

"நுங்கு சாப்பிடவில்லையே! அதிக நேரம் வைத்திருந்தால் குளிர்ச்சிபோய்விடும்!" என்றவாறு அவளருகில் நெருங்கினன் சபேசன். கூச்சத்துடன் தலைகுனிந்த அவள், தூண்டில் கோலைத் தன் கால் பாதத்தின் அடியில் வைத்து அழுத்திக்கொண்டு, கீழேயிருந்த பனங்காயை எடுத்து அதில் முக்கண்களாகப் புதைந்திருந்த நுங்குகளின் மேல் தோலைப் பெயர்த்தெடுத்து விட்டுப் பளிங்கு நிறமாகத் தளதளத்த சதைப் பகுதியைச் சிறுபிள்ளை போல் கிள்ளிக் கிள்ளி வாயில் போட்டுச் சுவைக்கலானள்.

இதைப் பார்த்த சபேசனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. "என்ன இது, இப்படியா நுங்கு தின்பது?" என்று நகைத்தவன், "இதோ பார், நான் தின்று காட்டுகிறேன்" என்றபடி அவளெதிரே உட்கார்ந்து மற்றொரு பனங்காயை எடுத்து அதன் நுங்குக் கண்ணை உதடுகளில் பொருத்தி வலது கைப் பெருவிரலை உள்நுழைத்துக் குடைந்து கொண்டே ஓர் உறிஞ்சு உறிஞ்சினன். மூன்றே நிமிடங்களில் மூன்று நுங்குகளும் காலியாகி விட்டன !

இந்த 'அதிசய'த்தைக் கண்டு பிரமித்துப் போனவள் போல் அவனையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த அவள் நாணத்துடன் முகத்தைத் திருப்பிக்கொண்டு அவன் செய்து காட்டியவாறே விரலால் நுங்கைக் குடைந்து உறிஞ்சினள். மறு கணம் அவளுக்குப் புரையேறி விட்டது. அத்துடன் மூக்கிலும் கன்னங்களிலும் நெற்றியிலும் நுங்குத் துணுக்குகளைப் பூசிக்கொண்டு, பால் சோற்றைத் தானே அளைந்து அள்ளி உண்ட குழந்தைப் பிள்ளை மாதிரி காட்சியளித்தாள்.

சபேசனுக்கு மறுபடியும் சிரிப்பு வந்து விட்டது. எழுந்து போய் அவளுடைய முகத்தைத் துடைத்துவிட வேண்டுமெனக் கையும் மனமும் பரபரத்தன. அவள் சரேலென்று குளத்துச் சரிவில் இறங்கி ஓடி முகத்தை அலம்பித் துடைத்துக் கொண்டு சாவதானமாக மேலே ஏறி வந்தாள். அவளுக்குப் பதிலாக அவன் தூண்டில்கோலைப் பிடித்தபடி



மனைவி : மாமனார் சீதனமா ஸ்கூட்டர் வாங்கித் தரலே தரலேன்னு பிரலாபித்தேளே, இப்போ அதைத் தள்ளறதுக்குத் தாபப்படலாமோ?

---

மிதலையிட்ட தக்கையின் மேல் கண்ணாக உட்கார்ந்திருந்தான். அவள் அருகில் வந்த அவள் அவனைக் கடைக் கண்ணால் கவனித்துக் கொண்டிருந்த அவள், "நிஜமாகவே நீங்கள் பர்மா அகதிதானா?" என்று வினவினள்.

அவன் அவளைத் திரும்பிப் பார்த்துவிட்டு, "அதில் இன்னுமா சந்தேகம்? என் முகத்தைப் பார்த்தாலே அது தெரியவில்லையா?" என்றான் ஓர் அவலச் சிரிப்புடன்.

பரிவோடு தலையாட்டிக்கொண்ட அவள் சற்று நேரம் கழித்து, "இங்கே உங்கள் தாய், தந்தை யெல்லாம் சௌக்கியமாக இருக்கிறார்கள் அல்லவா?" என்று கேட்டாள். "அவர்கள் இருந்தால் உங்களை அகதி என்று சொல்ல முடியாது!"

"ஓ...... அதனால்தான் அப்படிக் கேட்டாயா?" என்று புன்னகை புரிந்த சபேசன், "இல்லை; நான் ஒரு நிரந்தர அகதிதான் !" என்றான் அலட்சியமாக.

துணுக்குற்றவள்போல் தலை நிமிர்ந்த அவள் அவனைக் குறுகுறுவெனப் பார்த்தாள்.

தூண்டில்கோல் முனையால் தண்ணீரைச் சுழித்துக் கொண்டே அடைத்த குரலில் சொன்னான் சபேசன்: "நான் வந்த கப்பலில் என் தந்தைக்கு இடம் கிடைக்கவில்லை. அடுத்த கப்பலில் வருவதாகச் சொன்னவர் இன்றுவரை வரவுமில்லை. அவர் கதி என்ன ஆயிற்றோ தெரியாது. இங்கே நான் வந்து சேர்வதற்குள் என்னுடைய தாயார் இறந்து போய் விட்டாள்."

இவ்விவரங்களைக் கேட்ட அந்தப் பெண்ணின் முகம் வெளிறிச் சிறுத்துக் கண்களில் ஈரம் கவர்ந்தது. அவளையறியாமலே அவளருகிலிருந்த மற்றொரு கல்லின்மேல் போய் உட்கார்ந்து கொண்டு அவன் முகத்தையே இமைக்காமல் நோக்கினள்.

ஏதோ யோசனையிலிருந்த சபேசன் சட்டென்று அவள் முகத்தைப் பார்த்து, " ஆமாம் ; உனக்கு எப்படி இவ்வளவு நன்றாகத் தமிழ் பேசத் தெரிகிறது?" என்று புன்னகையுடன் வினவினன்.

அவன் ஓர் அழகுக் கோணத்தில் தலையைச் சாய்த்து அவனை ஓரக் கண்ணால் பார்த்துக்கொண்டே கூறினான்: ''நான் பிறந்து வளர்ந்தது கல்கத்தா 'ராஷ்பிகாரி அவென்யூ'விலே. அங்கு தமிழர்கள் நிறையப் பேர்கள் வாழ்கிறார்கள். என் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் குடியிருந்ததும் ஒரு தமிழ்க் குடும்பம் தான். எனது தாயார் 'லேக் மார்க்கட்'டில் கறிகாய்க் கடை வைத்திருந்தாள். அவளுடைய வாடிக்கைக்காரர்களில் பெரும்பாலோர் தமிழர்களே. அதனால் அவள் நன்றாகத் தமிழ் பேசக் கற்றுக் கொண்டாள். அவளிடமிருந்தும், பக்கத்து வீட்டுக்காரர்களிடமும் நான் கொஞ்சம் தமிழ் கற்றுக் கொண்டேன். பிறகு நாங்கள் என் தந்தையோடு போய்ச் சேர்ந்தோம். அந்த ஊரிலும் தென்னிந்திய முஸ்லிம் குடும்பம் ஒன்றுடன் எங்களுக்கு நட்பு ஏற்பட்டது. அவர்களிடமிருந்து இன்னும் நன்றாகத் தமிழ் பயின்றேன். என் தந்தையும் கொஞ்சம் கற்றுக் கொண்டிருந்ததால்தான், தமிழகத்துக்கு அனுப்பப்பட்ட அகதிக் குழுவோடு நாங்களும் சேர்ந்து இங்கு வந்தோம்.....'' — முதலில் இவ்விவரங்களையெல்லாம் உற்சாகமாகச் சொல்லி வந்த அவன், இறுதியில் தடுமாற்றத்தோடு இழுத்து நிறுத்தினான்.

அவனுடைய பூர்வோத்திரத்தை அறிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவலுடன் காத்திருந்த சபேசனுக்கு அவனின் இந்தப் பேச்சிலிருந்து ஒரு 'பிடி' கிடைத்தது. ''ஓ....'' என்று சுவாரசியமாகத் தலையாட்டிக் கொண்ட அவன், ''இன்னுமொரு சந்தேகம்...'' என்றான். ''கல்கத்தாவில் பிறந்து வளர்ந்த நீ உன் தந்தையோடு போய்ச் சேர்ந்துகொண்டதாகச் சொன்னாயே, அவர் அப்போது எங்கே இருந்தார் ?''

தன் இரண்டு முழங்கால் முட்டிகளிலும் மோவாயை ஊன்றிக் கொண்டு சற்று நேரம் மௌனமாயிருந்த அவன், அவனை நிமிர்ந்து பார்க்காமலே தணிந்த தொனியில் கூறினான்: ''நான் மூன்று வயதுக் குழந்தையாயிருந்தபோது என் தந்தை வேலை மாற்றலாகிக் கிழக்கு வங்காளத்திலிருக்கும் ஃபரீத்பூர் என்னும் ஊருக்குப் போனார். வேலை குதிர்ந்து ஜாகை வசதியும் செய்து கொண்டபின் எங்களை அழைத்துக் கொள்வதென்பது அவர் இட்டமாயிருந்தது. அது வரையில் நாங்கள் — என் அம்மா, நான், எனது சகோதரன் மூவரும் — கல்கத்தாவிலேயே தங்கியிருந்தோம். அப்பா சென்று ஆறாவது மாசத்தில், இந்தியா இரண்டுபட்ட பாரதமாகி விடுதலையடைந்தது. அதற்கு முன்பே மேற்கு கிழக்கு என்று இரு கூறுகளாக்கப்பட்டிருந்த வங்காளம் அந்த விடுதலையால் மேலும் ஒரு பலத்த—நிரந்தரமான—வெட்டுக்கு உள்ளாகித் துடித்தது. ஆமாம்; கிழக்கு வங்கம் கிழக்குப் பாகிஸ்தானில் சேர்க்கப்பட்டது. அப்படி வெட்டுப் பட்டுப் பிரிந்து போன பகுதியில் வேலை பார்த்து வந்த என் தந்தை பாகிஸ்தான் பிரஜையானார்; அவரது இரத்தமும் தசையும் போன்ற மனைவியும் மக்களுமாகிய நாங்கள் பாரதப் பிரஜைகளாயிருந்தோம் ! எங்களையறியாமலே எங்களுக்குள் ஏற்பட்டு விட்ட இந்தப் 'பிரிவினை'யைக் கண்டு என் தாயும் தந்தையும் குழம்பித் தவித்துப் போனார்கள். நாங்கள் பாகிஸ்தானுக்குப் போவதா, அல்லது எங்கள் தந்தை இந்தியாவுக்கு வந்து விடுவதா என்ற பிரச்னை எங்களிடையே பெரும் பிரச்னையாகியது. நல்ல சம்பளமுள்ள வேலையை விட்டு வர என் தந்தைக்கு மனமில்லை; எனது தாயாருக்கோ பாரத மண்ணை விட்டுப் பாகிஸ்தான் போகப் பிடிக்கவில்லை. இரண்டுங்கெட்ட இந்நிலையில் அல்லாடிக் கொண்டிருந்த போது, தேசத்தின் சில பாகங்களில் திடீரென்று வகுப்புக் கலவரங்கள் மூண்டன. சுதந்திரத்துக்கு முன்வரை உடன் பிறந்த சகோதரர்கள்போல் ஒன்றி வாழ்ந்து வந்த இந்துக்களிலும் முஸ்லிம்களிலும் சிலர் சுதந்திரம் பெற்றபின் ஏனோ வெறி பிடித்தவர்களானார்கள். ஒருவரை யொருவர் வீணாகப் பகைத்துக்கொண்டு வெட்டுப் பழி, குத்துப் பழி நடத்தலானார்கள். மேற்கு வங்காளம் இந்த வெறியர்களின் தலைமைக் களமாகியது. அதிலும் என் தாயாரின் சொந்த மாவட்டமான நவகாளி ஒரு பூலோக நரகமாகவே மாறியது. அவளுடைய பெற்றோர், உறவினர் அனைவரும் வகுப்புவாத அரக்கனுக்குப் பலியானார்கள். கல்கத்தா நகரிலும் ஆங்காங்கே வகுப்புக் கலகங்கள் தலைதூக்கின. இதனால் பயந்து போன நாங்கள் பாகிஸ்தானுக்கு — என் தந்தை இருந்த ஃபரீத்பூருக்கு — போய்விடத் தீர்மானித்தோம். ஆனால் அவர் இந்தப் பயங்கரக் கலவர நிலையில் குடிபெயர்ந்து வரவேண்டாம் என்று கடிதம் எழுதித் தடுத்துவிட்டார். அவரும் இந்தியாவுக்கு வர அச்சப்பட்டார். வேறு வழியின்றி, சிறு பிள்ளைகளாயிருந்த எங்களை வைத்துக்கொண்டு என் தாயார் தனிமையில் கிடந்து படாத பாடு படலானாள். வாராது வந்துதித்த மாமனித தெய்வமான மகாத்மாவின் பெரு முயற்சியால் வங்கத்தில் தலைவிரித்தாடிய வகுப்புக் கலவரம் ஓரளவு ஒடுங்கித் தணிந்தது. ஆனால் அதன் பதற்ற நிலை தீர ஓராண்டுக்குமேல் ஆகிவிட்டது. அது வரையில் பொறுமையோடு காத்திருந்த நாங்கள் பல்வேறு துன்ப அநுபவங்களுக்குப் பின் என் தந்தை இருந்த ஃபரீத்பூருக்குப் போய்ச் சேர்ந்தோம்.......'' — கண்களில் நீர் ஆறாகப் பெருக இவ்வாறு சொல்லிக் கொண்டு வந்த அவன் சட்டென்று குரலை உயர்த்தி, ''ஐயோ ! அப்படிப் போன அந்தப் பயணமே எங்கள் குடும்பத்தைச் சின்னாபின்னப்படுத்தக் கூடிய ஒரு பயங்கர மின்னல் கவிழாக அமையப் போகிறதென்பதை அப்போது நாங்கள் எள்ளளவும் அறியவில்லை!'' என்று கூறி முகத்தை மூடிக் கொண்டு விம்மிப் பொருமினான்.

சபேசனின் பாடு தர்மசங்கடமாகிவிட்டது. தனக்கு எவ்வகையிலும் பயனில்லாத இவ்விவரங்களை அவனிடம் துருவிக் கேட்டு, மகிழ்ச்சியுடன் இருந்த அவனை இப்படிக் கலங்கிக் கண்ணீர் வடிக்க வைத்து விட்டோமே என்று மனம் வருந்திக் குமைந்தான்.

(தொடரும்)




ஒரு குழந்தையின்மேல் எழுதி வைக்கப்பட்டிருக்கும் முப்பது லக்ஷ ரூபாய் சொத்துக்காகப் பல சூதுகள் நடக்கின்றன. குழந்தையின் தாய்க்கும் தந்தைக்கும் இடையே ஒற்றுமையில்லாததால் பிரிந்து விடுகின்றனர். குழந்தை ஒருவனிடம் வளர்கிறது; தாய்க்குப் பைத்தியம் பிடித்து விடுகிறது; தந்தை ராணுவத்தில் சேர்ந்து குண்டடிபட்டு இறக்கும்தறுவாயில், நண்பன் காப்டன் சரவணனிடம் தன் கதையைக் கூறிக் குழந்தை இருக்கும் இடத்தையும் தெரிவிக்கிறான். காப்டன் சரவணன் தாய்நாட்டுக்கு வந்து குழந்தையைக் கண்டுபிடிப்பதோடு ஒரு காதலியையும் பிடித்து விடுகிறான்.

கதையின் போக்கைத் தெரிந்து கொண்டதும், காப்டன் சரவணன் பாகத்தை எம்.ஜி.ஆர்.தான் ஏற்க முடியும் என்று யாரும் முடிவு செய்து விடலாம். கடமையில் கருத்துள்ளவனாகவும், நீதியின் காவலனாகவும், நேர்மைக்கு உறைவிடமாகவும் விளங்கி, வந்த சண்டையை வளைத்துக் கொள்பவனாகவும், வராத சண்டையைத் தேடிச் செல்பவனாகவும் உள்ள ஒரு கதாநாயகன் பாகத்துக்கு இப்பொழுது எம். ஜி. ஆரை விட்டால் வேறு யாரைப் போடுவது? சண்டைக் காட்சிகளில் வழக்கம்போல் சக்கைப் போடு போட்டிருக்கும் எம். ஜி. ஆர். காதல் காட்சிகளிலும் பின்தங்கி விடவில்லை.

ஜயலலிதா அநாதைப் பெண்ணாக வந்து, எம். ஜி. ஆர். ஓட்டும் வண்டியின் பின்னாலேயே ஓடிக் காதலை வளர்த்துக் கொள்கிறார். (ஓடிய பாதையிலேயே மீண்டும் மீண்டும் ஜயலலிதாவை ஓடவிட்டுப் படமாக்கி யிருக்க வேண்டாம்!) திருடர்களிடமிருந்து தன்னைக் காப்பாற்றியதற்குக் காணிக்கையாகத் தன்னையே கொடுத்துக் கொள்ளும் அநாதைப் பெண்ணின் துணிச்சலைப் பாராட்ட வேண்டியதுதான்! ஆனால் ஜயலலிதாவின் நடிப்பில் பாராட்டும்படியாக (சிறிதும் கூச்சப்படாமல் காதல் காட்சிகளில் நெருங்கி நடிக்கிறார் என்பதைத் தவிர) ஒன்றும் இல்லையே!

நாகேஷ் — மனோரமா தமாஷ் காட்சிகள் அநாவசியமாக நீண்டு தரக் குறைவாயிருக்கின்றன. ஒரு மகன், தன் காதல் திருமணத்துக்கு ஆதரவு தரவில்லை என்பதற்காகத் தன் தகப்பனாரை இழிவுபடுத்தி, ஹோட்டலில் மாவரைக்க வைத்து, பிச்சைக்கார வேஷம் போடச் செய்து அவமதிப்பதாகக் காட்டுவதில் என்ன ஹாஸ்யம் இருக்கிறதோ!

கே. ஆர். விஜயா ஏற்றிருக்கும் பாகம் சங்கடமானது. சரவணனின் மனைவி என்று கூறிக் கொண்டு தன் பெண்மைக்கே மாசு கற்பித்துக் கொள்ளும் பாத்திரம். என்ன கதையோ, என்ன கஷ்டமோ!

பேபி ஷகிலாவை நன்றாய் நடிக்க வைத்திருக்கிறார்கள்.

சந்திரகாந்தா குழந்தையை இழந்து பைத்தியமான தாயாக வருகிறார். ஆனால் அந்தப் பாத்திரம் அவசியம்தானா?

கன்னியாயிருக்கும் போதே ஒரு குழந்தையை வளர்க்கும் பொறுப்பை ஏற்றதனால் ஒரு பெண்ணுக்கு, ''கன்னித்தாய்'' என்று பெயர் வந்து விடுகிறது! அடுத்தடுத்து வரும் அடிதடி சண்டைகளும், உதவாக்கரை ஹாஸ்யங்களும், அலுக்க வைக்கும் காதல் காட்சிகளும் நிறைந்து கதையேயில்லாமல் கடைசி வரையில் ஓடும் படம் ''கன்னித் தாய்!''

# இது போன்ற காபியை நீங்கள் குடித்திருக்க மாட்டீர்கள்

## நெஸ்கா:.பே

மட்டுமே
காபியின் தனிச் சிறப்பை
முற்றிலும் பெற்றுள்ளது




நெஸ்கா:.பே உயர்ந்த ரக காபிக்கொட்டையிலிருந்து தயாரானது. அது தனிப்பட்ட முறையில் வறுக்கப்பட்டு, நவீன வழியில் திறம்பட தயாரிக்கப்படுகிறது. டின்னைத் திறந்தவுடன் புத்தம் புதிய காபியின் நறுமணம் உங்கள் மனதைக் கவரும். சுவைத்தால் தான் தெரியும், அதன் தனி ருசியும், மணமும். இன்றே வாங்கிப் பருகுங்கள்!



**5** விநாடிகளில் காபி தயார்

நெஸ்கா:.பே உடனே கரையக் கூடிய தூய்மையான காபி. அது, கொதிக்கவைத்தல் முதலிய வழி முறைகளுக்கு முன்னதாகவே உள்ளாகிவிட்டது. ஒரு ஸ்பூன் நெஸ்கா:.பேயை கோப்பையில் போட்டு வெந்நீர் ஊற்றுங்கள். அருமையான காபி உடனே தயார்! கொதிக்க வைப்பது, வடிகட்டுவது போன்ற எவ்வித கஷ்டமும் இல்லை. ஆகா, எத்தனை எளிமை—எவ்வளவு இனிமை!

**நெஸ்கா:.பே*** இந்தியாவின் இணையற்ற காபி 100% தூய்மையானது

*நெஸ்கா:.பே, நெஸ்லே இன்ஸ்டன்ட் காபியைக் குறிப்பிடும் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்

NESTLÉ
ஒரு நெஸ்லே தயாரிப்பு

(WT-NCC-172(R))



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா:வெல்டன் - அநுத்தமா

சுப்புலக்ஷ்மிக்குச் சித்தி என்றால் உயிர். அவள்வரை இதைவிட மேலான ஏற்பாடு வேறு ஒன்றும் இருக்க முடியாது. அவள் தாயாருக்கு இந்த ஏற்பாடு திருப்தியளிப்பதாக இருந்தது. சித்திக்கும் அப்படித்தான். பாட்டி ஒன்றுமே சொல்லவில்லையாயினும் அவளும் ஒத்துக் கொண்டதைப் போலத்தான் தோன்றியது.

'அரச மரத்து வீடு' என்று அதற்குப் பெயர் வந்ததற்குக் காரணம் அவ்வீட்டின் எதிரே இரண்டு அரச மரங்கள் இருந்ததுதான் என்று சுப்புலக்ஷ்மியின் தந்தை விளக்கினார். அந்த வீடு மிகவும் பெரியது. இரண்டு மாடிகள் இருந்தன. குடும்பத்தினர் எல்லோரும் வந்தாலும் தாராளமாக இடம் இருந்தது. ''மேலும் வாடகை பதினாறு ரூபாய் தான்'' என்று பாட்டியைப் பார்த்துக் கொண்டே அவர் பேசினார்.

''நாம் எப்போது அங்கே போகலாம்?'' என்று சுப்புலக்ஷ்மி பரபரப்புடன், ஆர்வத்துடன் கேட்டாள்.

''சீக்கிரமே'' என்றாள் சித்தி. ''ஆனால் உடனே அல்ல. முதலில் வீட்டைக் கழுவி விட்டுச் சுத்தப்படுத்தித் தயாராக வைத்துக் கொள்ளலாம். பிறகு ஒரு நல்ல நாள் பார்க்க வேண்டும்!''

அந்தத் தினம் வந்தபோது, காலை முழுவதுமின்றி, பிற்பகலிலும் வெகு நேரம் வரை சுப்பிரமணிய ஐயர் கல்லூரியிலேயே இருக்கும்படி நேர்ந்தது. அவர் வரும்வரை சுப்புலக்ஷ்மியும் சித்தியும் காத்திருந்தார்கள். அவர் வந்தவுடன் அவர்களைச் சென்னைக்கு அழைத்துச் சென்று, வீட்டில் சௌகரியமாக அமர்த்தி விட்டுச் சைதாப்பேட்டை திரும்புவதாகத் திட்டம்.

அன்று காலை வழக்கம்போல் குடும்பத்தினர் அனைவரும் நன்றாக உணவு அருந்தினர். பாட்டி மட்டும் எப்பொழுதும்போல் தனியாக முன் பக்கத்து அறையில் அமர்ந்திருந்தாள். சாப்பாடு முடிந்ததும் சுப்பிரமணிய ஐயர் வெளிக் கிளம்பு முன் பாட்டி அவரை அழைத்தாள்.

அவர் அவள் இருந்த அறைக்குள் சென்றார். கதவு சாத்தப்பட்டது. அவர்கள் இருவரும் வெகு நேரம் அவ்வாறு அடைபட்டுக் கிடக்கவும் விசாலாட்சிக்குத் தன் கணவர் கல்லூரிக்குச் செல்லக் கால தாமதமாகி விடுமே என்று கவலை தோன்றியது.

வெளியே வந்தபோது அவருடைய முகத்திலிருந்தே கெட்ட செய்தி என்பது தெரிந்தது. பாட்டி மீண்டும் ஆட்சேபித்து விட்டாள். இரண்டு இளம் விதவைகள் தன்னந் தனியே பாதுகாப்பின்றி வாழ்வது முறையல்ல; சித்தியும் சுப்புலக்ஷ்மியும் வீட்டோடு தான் இருக்க வேண்டும் என்று கூறி விட்டாள்.

சுப்பிரமணிய ஐயர் என்ன சொல்லியும் கேட்கவில்லை. மீண்டும் அவர் விட்டுக் கொடுக்கும்படி ஆயிற்று.

அவர் சுப்புலக்ஷ்மியிடம் ''கவலைப் படாதே, நம்பிக்கை தளராதே. எப்படியாவது ஒரு வழி கண்டுபிடிப்போம்'' என்று தேறுதல் கூறினார்.

''எப்படி?'' என்றாள் அவள் மெதுவாக. அவர் தன் கண்ணீரைப் பார்த்துவிடக் கூடாதே என்பதற்காக முகத்தைத் திருப்பிக் கொண்டு கண்ணைக் கொட்டினாள்.

''எப்படியோ, கொஞ்சம் பொறுமையாக இரு'' என்றார் தந்தை.

அவள் அவ்வாறிருக்க முயன்றாள். வாரங்கள் கடந்தன. வீட்டுப் பாடங்கள் வழக்கம்போல் தொடர்ந்தன. பிறகு ''யூக்லிட்'' பெரியப்பா சைதாப்பேட்டைக்கு வந்தார். இந்தக் கணித மேதை புத்தியில் மேதை மட்டுமல்ல, இங்கிதமும் அறிந்தவர். மற்றவர்களை விட நன்றாகப் பாட்டியைச் சரிக்கட்டத் தெரிந்தவர். அவர் அங்கிருந்து கிளம்பு முன் ஒரு புதுத் திட்டம் வகுத்து, அதற்குப் பாட்டியைச் சம்மதிக்கும்படியும் செய்து விட்டார். ஒரு வாரம் குடும்பம் முழுவதும் சென்னையில் போய் அரச மரத்து வீட்டில் இருக்க வேண்டியது. அந்த ஒரு வார காலத்தில் அங்கு நடப்பது பாட்டிக்கு விருப்பம் இல்லையென்றால் குடும்பம் முழுதும் சைதாப்பேட்டைக்குத் திரும்ப வேண்டியது. பாட்டி சம்மதித்தால் சித்தியும் சுப்புலக்ஷ்மியும் எழும்பூரில் இருக்கலாம்.

மீண்டும் நல்ல நாளுக்காகக் காத்திருந்தார்கள். விரைவில் அது வந்தது. அன்று இரவு பாட்டி, தகப்பனார், தாயார் நான்கு பெண்கள் ஆகியோரும் சித்தியும் எழும்பூரில் உறங்கினார்கள். மறு நாள் காலை பாட்டி வீட்டின் முன் பக்கத்து ஜன்னலண்டை அமர்ந்து சுப்புலக்ஷ்மி தெருவைக் கடந்து சென்று வகுப்பில் போய் அமர்வதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். நாள் முழுவதும் பாட்டி அவ்விடத்தை விட்டு நகரவில்லை.

பிற்பகல் சுப்புலக்ஷ்மி இடைவேளையில் வீட்டுக்கு வந்தபோதும் அவள் அங்கேயே இருந்தாள். கடைசியில் பாட்டியின் முகத்தில் சிரிப்புத் தோன்றியது. ''நான் அங்கு வருவோர் போவோர் எல்லோரையும் பார்த்து விட்டேன். அங்கு ஆண்களே இல்லை. பெண்களைத்தான் பார்த்தேன். இப்பொழுது எனக்குத் திருப்தியாகி விட்டது. இனிமேல் ஆட்சேபணை சொல்ல மாட்டேன்'' என்றாள்!

## 5

சுப்புலக்ஷ்மி பி. டி. ஸ்கூலில் மிகவும் சந்தோஷமாக இருந்தாள். இதைத் தவிர வேறு வாழ்வையே அறிந்திராதவள்போல், அவள் அந்தப் புதிய சூழ்நிலையில் இயல்பாக ஒன்றிவிட்டாள். முதல் வார இறுதியில் குடும்பத்திலுள்ள மற்றவர்கள் சைதாப்பேட்டைக்குத் திரும்பச் சித்தியும் அவளும் தனிமையில் விடப்பட்ட போதும் அவளுக்கு ஏக்கமோ, கலக்கமோ ஏற்படவில்லை. சித்தி அவளுக்கு அருந்துணையாக இருந்தாள். வெள்ளைப் புடவைத் தலைப்பால் தலையை இறுக்க மூடிக்கொண்டு காணப்படும் சித்தியின் முகம் அமைதியாகவும் ஜீவகளை ததும்பவும் விளங்கிப் பார்க்கத் தெவிட்டா விதமாய் இருந்தது. அவள் கண்களில் சதா ஒரு குறுகுறுப்பு. ஆனால் குறுகுறுத்த பார்வையை உடைய வேறு பலரைப்போல் அவள் அவசர புத்தியோ உணர்ச்சி வசப்படும் தன்மையோ, கோபமோ கொண்டிருக்கவில்லை. அவள் எதைச் செய்தாலும் அநாயாசமாகச் செய்வதாய்த் தென்பட்டது. சுப்புலக்ஷ்மிக்கு எதை வேண்டுமானாலும் அவள் செய்யத் தயாராயிருந்தாள். சுப்புலக்ஷ்மியின் கேள்விகளுக்குப் பதில் சொல்லவோ, தேவைப்பட்டால் அவளுடைய வீட்டுப் பாடத்தில் உதவி செய்யவோ அவளுக்கு அவகாசம் இருந்தது. சுப்புலக்ஷ்மிக்கோ வார ஆரம்பத்திலிருந்து இறுதி வரையில் நிறைய வேலைகள் இருந்ததினால் ஒரு நிமிஷ நேரம்கூட அவளுக்குத் தன் பெற்றோரைப் பற்றியும், மூன்று தங்கைமாரைப் பற்றியும் நினைத்து ஏங்க நேரம் இருக்கவில்லை.

ஆனால் அவர்கள், அவள் இல்லாமல் மிகவும் கஷ்டப்பட்டார்கள். ஒரு மாத முடிவில், இந்த மாதிரி சனி, ஞாயிறு கிழமைகளில் மட்டும் சுப்புலக்ஷ்மியைச் சந்திப்பது போதாது என்று நிச்சயித்து விட்டார்கள். தவிரவும், இரண்டு குடும்பங்களைச் சமாளிப்பதும் எளிதாக இல்லை. சீக்கிரமே பாலத்துக்கும் சாவித்திரிக்கும் வரதட்சிணை தேடியாக வேண்டும். இரண்டு பெண்களும் சைதாப்பேட்டை ஆரம்பப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தனர். தக்க வயது வந்தவுடன் அவர்களையும் பி. டி. ஸ்கூலில் படிக்கப் போடவேண்டும் என்று பெற்றோர் விரும்பினார்கள்.

அதனால் அந்தக் குடும்பம் முழுவதுமே எழும்பூருக்கு வந்து 'அரச மரத்து வீட்'டில் குடியேறிற்று.

ஏறக்குறைய இரண்டு வருஷ காலமாகவே — தன் விதவைப் பெண்ணைப் படிக்க வைக்க ஆரம்பித்ததிலிருந்து சுப்பிரமணிய ஐயர், ஆசார சீலர்களான தம் பல நண்பர்களுடைய நிந்தனைத் தாக்குதல்களுக்கு ஆளாகி வந்தார். அவருடைய நடத்தை கோணல் என்பது மட்டும் இல்லை; அளவு கடந்து போய்

இந்தியா முழுவதிலிருந்தும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள் கூறுகின்றன

# போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

கடிதங்கள் மேல் கடிதங்கள்! ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் ஒழித்த போர்ஹான்ஸ் பற்பசையின் வியக்கத்தக்க வெற்றியைப்பற்றிக் கூறுகின்றன.

## அவர்கள் கூறுவதைப் படித்துப் பாருங்களேன்:



"இதர பல பற்பசைகளைத் தேய்த்துப் பார்த்த பிறகு, ஒப்பற்றது போர்ஹான்ஸ் தான் என்பதை எனது 50 வது வயதிலே உணர்ந்து, அதனையே 20 ஆண்டு காலமாக உபயோகித்து மிகவும் அருமையான பலன்கள் அனுபவித்து வருகிறேன். இந்த 72 வது வயதிலே எனக்கு இயல்போடமைந்த வலுவான பல்வரிசைகள் வாய்த்திருப்பது போர்ஹான்ஸின் மாயம் போலும்!"

ஜீ. என்., சென்னை.



"உங்கள் போர்ஹான்ஸ் பற்பசையை 20 ஆண்டுகளாக நான் உபயோகித்து வருவதன் நற் பயன், இன்றைத் தேதிக்கு எனக்கு 65 வயது நிரம்பி 5 மாதம் ஆகியும், என் 32 பற்களும் பாங்கான திட நிலையில் இருந்து வருகின்றன; இதுநாள் வரை என் பற்களுக்கு யாதொரு பழுதும் சேர்ந்ததில்லை."

டி. என். டி., அஸ்ஸாம்.



"மூன்றாண்டுகளுக்கு முன் நான் பல் கோளாறால் தவித்ததுண்டு. நன் பரோபகாரியின் அறிவுரையைப் பின்பற்றி நான் போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். தொடங்கி ஒரே மாதம்தான் ஆயிருக்கும். என்னவென்பேன் அதிசயத்தை, என் ஈறு நோய் குணமானதோடன்றி பற்களே அற்புத வெண்மையோடு பளிச்சிடலாயின. இன்றும் நான் உபயோகிப்பது போர்ஹான்ஸ்."

பி. பி., பம்பாய்.

*இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜெப்ரே மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.

**போர்ஹான்ஸ்** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பெற்ற பற்பசை

இலவசம்! "CARE OF THE TEETH AND GUMS" என்ற ஆங்கில வண்ண நூல் பற்களின் பராமரிப்பு முறையைப் படங்களோடு விளக்கும் இப் புத்தகத்தைப் பெற விரும்புவீர்களாயின், (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் வில்லைகளை அனுப்புங்கள்; டிபார்ட்மெண்ட் K. 6, மானேர்ஸ் டென்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய் 1.

பெயர் ..............................................................

விலாசம் ..............................................................



அவர் செய்கை பழமையானதொரு சம்பிரதாயத்தை மீறுவதுடன் ஆண்டவனுடைய நியதியையே எதிர்ப்பதாகும் என்று அவர்களுக்குப்பட்டது. விதவா ஸ்திரீகள் படும் துயரமும், இழிவும் ஆண்டவன் கட்டளையேயாகும். தண்டனையைத் தைரியமாக ஏற்றுக்கொள்வதும் ஒருவித தபசுதான். அதன் பயனாகப் பழைய பாவங்கள் கழுவப்பட்டு ஆத்மாவானது தூய்மையுறும். அடுத்த பிறவியில் நல்ல பாக்கியம் கிட்டப் புண்ணியமும் ஏற்படும்.

சுப்பிரமணிய ஐயர் பக்தசீலர். ஒவ்வொரு குழந்தையும் அழிவற்ற ஓர் ஆன்மாவுடன் பிறக்கிறது. அது எத்தனையோ முற்பிறவிகளை எடுத்திருக்கிறது என்று அவர் நம்பினார். பூர்வ ஜன்மத்தின் நினைவு இல்லாவிட்டாலும் அப்போது செய்த நன்மை தீமை, கொண்ட நல்ல எண்ணங்கள், தீய எண்ணங்கள் இவைகளின் பயனாக அமைந்த குறை, குணங்களைத் தங்களுடன் கொண்டு வருகின்றன. இது தான் விதி அல்லது கர்மா என்ற நியதி. பல இந்துக்களும் அநேக அந்நிய நாட்டினரும் நம்புவதுபோல் விதி என்பது ஒரு கட்டுப்பாட்டில் அடங்காமல் தன்னிச்சையாக நடப்பதோ வெளிக் காரணங்களால் உருவாக்கப்படுவதோ அல்ல. விதி என்பது ஒவ்வோர் ஆத்மாவும் கடவுளின் கட்டளைக்கு அடிபணிவதன் வாயிலாகவோ அல்லது அதை எதிர்ப்பதன் மூலமோ வருத்துக் கொள்ளும் ஒரு கதியாகும். ஆகவே நல்ல ஆரோக்கியம் உள்ளவளும் அதீதமான புத்தி படைத்தவளுமான ஒரு பெண், கணவனை இழந்த ஒரே ஒரு துர்ப்பாக்கியத்துக்காக, சமையலறையில் வாழ்நாள் முழுதும் அடைபட்டுக் கிடக்க வேண்டும் என்று தாம் வணங்கும் கடவுள் பணிப்பார் என்பதைச் சுப்பிரமணிய ஐயராலோ, விசாலாட்சியாலோ, சித்தியாலோ நம்ப முடியவில்லை. அதற்கு மாறாகத் தம்முடைய குழந்தையின் சாமர்த்தியமெல்லாம் நல்ல முறையில் வளர்க்கப்பட்டு, பயனுள்ள வகையில் உபயோகப்படுத்தப்பட வேண்டும் என்பதுதான் ஆண்டன் திருவருளாக இருக்கும் என்பது அவருடைய திடநம்பிக்கை. அதைத் தளர்த்த முடியவில்லை.

சுப்புலக்ஷ்மிக்குக் கல்வி பயிலுவிப்பதற்குத் தியாகம் தேவைப்பட்டால் அந்தத் தியாகத்தைச் செய்ய அவர் தயாராக இருந்தார்.

ஒவ்வொரு நாளும் காலை ஆறு மணிக்கெல்லாம் 'சர்வே' வகுப்பு நடத்த விவசாயக் கல்லூரியில் அவர்



''மணமகள் கல் என்றால் மணமகன் அரிசி!...''
''ஆஹா! மணமகளைக் கல் என்று சொல்லி அரிசியில் கல்லின் ஆதிக்கத்தை எவ்வளவு அழகாகச் சொல்லி விட்டார்! மண வாழ்க்கைன்னு இப்படியல்லவா இருக்கணும்!''
(ஓர் அரிசி வியாபாரி வீட்டுக் கல்யாணத்தில்!)

இருந்தாக வேண்டும். அவர் ஒரு சைக்கிளை வாங்கிக் கொண்டார். அதில் தினமும் எழும்பூர் ரயில் நிலையம் வரை போய் அங்கிருந்து முதல் ரயிலைப் பிடித்துச் சைதாப்பேட்டை போவார்.

''என் தந்தை'' என்று தொடங்கி ஸிஸ்டர் என்னிடம் பேச ஆரம்பிக்கும் போது அவர் கண்கள் சூரிய ஒளி பெற்றது போல் பிரகாசிக்கும். அப்பாவைப் பற்றிய பழைய நினைவுகள் வரும் போதெல்லாம் இப்படி ஒளி தோன்றுவதுண்டு. ''என் தந்தைக்குச் சிறிது மலச் சிக்கல் உண்டு. ஆகையினால் சீக்கிரம் எழுந்து வெளிக் கிளம்புவது அவருக்கு மிகவும் கஷ்டம். அதிகாலையில் நான் விழித்துக் கொண்டு என் மாடி அறை ஜன்னல் வழியே வெளியே நோக்கும்போது அவர் கீழே குறுக்கும் நெடுக்குமாக உலாவிக் கொண்டிருப்பது தெரியும். உடற்பயிற்சிக்காக அவ்வாறு செய்தாரோ அல்லது சைக்கிளில் ஏறிச் செல்லுவதற்குக் கடைசி விநாடி வரை காத்துக் கொண்டிருந்தாரோ? அந்த நாட்களில் இப்பொழுதுபோல் காற்று அடைக்கப்பட்ட டயர்கள் கிடையாது. பாதைகளும் நன்றாக இருக்காது. அந்தக் கனமான டயர்ச்

சக்கர சைக்கிளில் ஸ்டேஷனுக்குப் போவதும் வருவதும் அவருக்கு ரொம்பவும் சிரமத்தைக் கொடுத்தன. சாதாரணமாகப் பகல் பதினொரு மணிக்கு வந்து சாப்பிட்டு விட்டு மீண்டும் பிற்பகல் அவர் கல்லூரிக்குப் போவார்.''

சுப்புலக்ஷ்மி காலை ஐந்து மணிக்கெல்லாம் எழுந்து விடுவாள். முகம் கைகால் கழுவியாவதற்குள், வாத்தியார் வந்து விடுவார். இரண்டு பேர்கள் ஒன்றுவிட்டு ஒரு நாள் வருவார்கள். ஒருவர் வயலின் சொல்லித் தர. மற்றொருவர் வீணைக்கு.

அந்தப் பாடம் முடிந்தவுடனே, பகவத் கீதையிலிருந்து ஐந்து சுலோகங்கள் கற்றுக் கொள்ள அவள் அமர்வாள். அவள் சுலோகங்களை வாயால் சொல்வதுடன் அவற்றுக்கு மேலெழுந்தவாரியான அர்த்தத்தை உணர்ந்தாலே போதுமானது என்று கருதினார்கள். ஆனால் சுப்புலக்ஷ்மி மொத்தமுள்ள எழுநூறு சுலோகங்களையும் கற்று முடிக்கும் சமயத்தில் அவ்வளைத்துக்கும் தான் ஆரம்பத்தில் நினைத்ததைவிட ஆழ்ந்த பொருள் இருப்பதைப் புரிந்து கொண்டாள். சில சமயம் தாயாரோ, சித்தியோ அவளுக்குப் பொருளை விளக்குவார்கள். சில சமயம் அவள் தானாகவே புரிந்துகொள்ளப் பார்ப்பாள்.

இப்பொழுதுகூட ஸிஸ்டர் அவற்றில் ஒரு வார்த்தைகூட மறக்கவில்லை. இப்பொழுதெல்லாம் சிறுமியாக இருந்த போதைவிட அரை மணி நேரம் தாமதமாகத்தான் துயில் எழுகிறார். ஆயினும் அன்றாட அலுவல்களை ஆரம்பிக்கு முன் பகவத்கீதை முழுவதையுமே ஒரு தடவை மனனம் செய்து விடுகிறார்.

பள்ளிக்கூட நாட்களில் கீதைக்குப் பிறகு, பாடங்களைப் படிப்பதோ எழுதுவதோதான் அவள் வேலை. ஒரு நாள், தன் அறையில் அமர்ந்து, தன் வழக்கமான ஊக்கத்துடன் படித்துக் கொண்டிருந்த போது அவள் நிமிர்ந்து பார்க்க நேர்ந்தது. ஜன்னல் வழியாகப் பார்த்தபோது கீழே வெளி முற்றத்தில் சமையற்கார அம்மாள் ஒரு ஸ்டூலின் மீது அமர்ந்திருப்பது தெரிந்தது. சமையற்கார அம்மாள் நடு வயது மாது. சித்தியைப் போலவே தலையை மூடிக் கொண்டு புடவை உடுத்தியிருப்பாள். இப்பொழுது தலையைத் திறந்து கொண்டிருந்தாள். தலை முழுவதும் கறுப்பும் வெளுப்புமாகக் குட்டையான தலை மயிர் இருந்தது. தன் தகப்பனாருக்கு க்ஷவரம் செய்யும் நாவிதன் அந்த அம்மாளுக்கு அருகில், கையில் கத்தி பளபளக்க, நின்று கொண்டிருந்தான்.

அருவருப்பும் பீதியும் மேலிட, கண்களை அவ்விடத்திலின்றும் அகற்ற முடியாமல் அவள் பார்த்துக் கொண்டேயிருந்தாள். இந்த மனிதன் சமையல்கார அம்மாளின் தலையைத் தன் கையில் பிடித்துக் கொண்டு, அதன் பக்கம் குனிவதைப் பார்த்தாள் சிறுமி சுப்புலக்ஷ்மி. இதுபோல் ஒரு கோரத்தை அவள் இதற்கு முன்னால் எங்கும் கண்டதில்லை. இதே போல்தான் சித்திக்கும், சித்தியைப் போல் உருமாறித் தலையை மூடிக் கொண்டிருக்கும் இதர பெண்களுக்கும் நேருகிறதோ? இதைப் பற்றி யாரையும் கேட்க முடியாது. கேட்டுத் தெரிந்து கொள்ள அவள் விரும்பவும் இல்லை.

அன்று காலை குளித்துவிட்டுப் பள்ளிக்கூடம் போக ஆயத்தமாக, புதிய புடவையும் ரவிக்கையும் அணிந்த பிறகு அவளால் ஒரு கவளம்கூடச் சாப்பிட முடியவில்லை. தனக்கு வயிற்றைக் கலக்குகிறது என்று அவள் சொன்ன போதிலும் அதன் காரணத்தை அவளால் விளக்க முடியவில்லை. இவ்வளவு இழிவான ஒரு கதி ஒரு பெண்ணுக்கு நேரிடக்கூடும் என்று அவள் ஊகத்துக்கோ, கற்பனைக்கோ எட்டவேயில்லை. இப்பொழுதும்கூட, தன்னுடைய பெற்றோரும் சித்தியும் கொண்ட ஆழ்ந்த துணிவுதான் தன்னை இதே போன்ற கதியின்று காப்பாற்றியிருக்கிறது என்று அவளுக்குத் தோன்ற வில்லை. அந்தக் காட்சியைப் பார்த்த பிறகு பல நாட்களுக்கு அவளால் வேறு எதைப் பற்றியுமே சிந்திக்க முடியவில்லை.

அவள் எப்பொழுதும்போல் அழகான வண்ணச் சேலைகள் உடுத்தி வந்தாள். வாரா வாரம் எண்ணெய் தேய்த்துக் குளித்ததனால் அவளுடைய நீண்ட கூந்தல் அடர்ந்து வளர்ந்து பளபளப்பாக இருந்தது. அவள் நேர் வகிடு எடுத்துப் பின்னால் இறுக்கப் பின்னிவிட்டுக் கொண்டிருந்தாள். மெட்டி, மூக்குத்தி முதலியவைகளை அவள் அணியாவிடினும் அவளது மென்மையான அழகான செவிகளுக்குப் பொருந்திய வைரத் தோடுகள் மட்டும் போட்டுக் கொண்டிருந்தாள். கர்வப்படவில்லை என்றாலும், தான் அழகு என்பதை அவளால் உணராமலும் இருக்க முடியவில்லை.

தன் வாழ்வுக்கும், தன் பெற்றோர்களுடைய நண்பர்களின் பெண்களின் வாழ்வுக்குமிடையே இரண்டே இரண்டு வேறுபாடுகள்தாம் இருந்தன. பெரிய வித்தியாசம், அவள் பள்ளிக்கூடம்

சென்றதுதான். அவ்வளவு முக்கியமில்லாத மற்றொரு வேறுபாடு, அவர்களைப் போல் தான் கல்யாணங்களுக்கோ, உபநயனங்களுக்கோ மற்றெந்தவிதமான கேளிக்கைகளுக்கோ போகாதிருப்பது.

1900ம் வருடம் சுப்புலக்ஷ்மிக்குப் பதினாலு வயது நிரம்புவதற்குச் சில மாதங்கள் இருக்கும்போது, அவளுக்கு அடுத்த தங்கைகளான பாலத்துக்கும் சாவித்திரிக்கும் திருமணம் நடந்தது. பாலத்துக்கு வயது பன்னிரண்டு. சாவித்திரிக்குப் பதினொன்று கூட ஆகவில்லை. 'ஸாண்டி'க்கும் பாலத்துக்குமிடையே இருந்த பாசம் அசாதாரணமானது என்று குடும்பத்தில் அனைவரும் புரிந்து கொண்டு, அவர்களைப் பிரித்து, அவர்களில் யாரையும் வேறொருவரை மணக்குமாறு கட்டாயப்படுத்துவது தவறு என்றும் உணர்ந்தார்கள். சாவித்திரி ஸாண்டியின் தம்பி துரைசாமியை மணப்பதென்றும் நிச்சயமாயிற்று. இரட்டைக் கல்யாணம் என்றதும் எல்லோருக்கும் மிகவும் மகிழ்ச்சியாகி விட்டது.

"இன்றைக்கு நீ வழக்கம்போல் பள்ளிக்கூடம் போக வேண்டும். கல்யாணங்களுக்கெல்லாம் நீ போகாவிட்டால் பரவாயில்லை. அதைவிட மேலானது, முக்கியமானது உனக்குப் படிப்புத்தான்" என்று கல்யாணச் சடங்குகள் ஆரம்பிக்கும் தினத்தன்று அவள் தாயார் கூறி விட்டாள். மணப் பெண்களுடைய அக்காளுக்கும் இது திருப்தியாகவே இருந்தது. அந்த அளவுக்குப் பள்ளிக்கூடம் எல்லையற்ற சுவாரசியத்தோடு விளங்கியது.

அவளுக்கு மிகவும் பிடித்தமான பாடம் கணிதம்தான். மிகவும் பிடிக்காத பாடங்கள் தையலும் பூநூல் பின்னுவதும். தன் வகுப்பிலுள்ள எல்லாப் பெண்களும் கற்றுக் கொண்டார்களே என்றுதான், மேனாட்டுப் பாணியில் கவுனுக்குள்ளே அணியும் உள்ளாடையைத் தயாரிக்க அவளும் கற்றுக் கொண்டாள். அதை அவள் என்றுமே போட்டுக் கொள்ளப் போவதில்லையே. அதே போல் நிட்டிங் வகுப்பில் கம்பளி நூலினால் குழந்தைகளுக்கான காலுறைகள் பின்னவும் கற்றுக் கொண்டாள். சென்னையின் சீதோஷ்ண நிலையில் அவற்றை அணிந்து கொள்ளும் எந்தக் குழந்தையும் வேர்க்குரு தோன்றி அவதிப்படுமே!

பொதுவாகத் தன் எண்ணங்களைத் தன் மனத்துக்குள் புதைத்தது போல் இந்தக் கஷ்டங்களையும் அவள் தன் உள்ளத்துக்குள் அடக்கி விட்டாள். லோயர் செகண்டரி பரீட்சைக்கு உட்காரும் சமயம் அவளுக்கு இருந்த நடுக்கத்தில் தையல் கலை தேர்வின் போது நூல் கோத்த ஊசி அவள் விரல்களிடையே பட்டென்று உடைந்து விட்டது. அடுத்தடுத்து நடுங்கும் கரங்களுக்கிடையில் பத்து ஊசிகள் உடைந்து விட்டன!

இருப்பினும் என்ன, தேர்வு முடிவுகள் வெளி வந்தபோது சுப்புலக்ஷ்மி ராஜதானியிலேயே மூன்றாவதாகத் தேறியிருந்தாள். அவள் வெள்ளிப் பதக்கம் பெறப் போகிறாள் என்று அறிந்தபோது பாட்டி உள்பட வீட்டில் எல்லோரும் மிக மகிழ்ச்சியுற்றார்கள்.

இதற்குள் பாலமும் சாவித்திரியும் பி. டி. ஸ்கூலில் சேர்ந்து விட்டிருந்தார்கள். ஒரு நாள் தலைமை ஆசிரியை, அன்று பள்ளிக்கு விஜயம் செய்திருந்த அந்நிய நாட்டுப் பெண்மணி ஒருவருக்குப் பள்ளிக்கூடத்தைச் சுற்றிக் காட்டிக் கொண்டிருந்தாள். காலையில் விளையாட்டு மைதானத்தில் அவர்கள் நடந்து கொண்டிருந்தபோது, சுப்புலக்ஷ்மியும் பாலமும் பேசிக் கொண்டிருந்த இடத்துக்கு வந்தார்கள். தலைவி, சுப்புலக்ஷ்மியைச் சுட்டிக் காட்டி, "இவள்தான் அந்த விதவைச் சிறுமி" என்றாள்.

(தொடரும்)

# கொடி உடலாள்
# துடி இடையாள்

ஸ்லாக்கோ, புடவையோ, எது அணிந்தாலும் எடுப்புடன்
தோன்றும் இந்த எழிலரசியின் தன்னம்பிக்கைக்கு
அடிப்படை கொடிபோல் துவளும் ஒயிலான உருவம்தான்!

முயன்றால் எந்தப் பெண்ணும் பெறக்கூடிய பாக்கியம்தான் இது.
லிமிகால், அபாயமற்ற முறையில் இளைத்து,
ஆரோக்கியமாக, அழகுடன் திகழ வழி காட்டுகிறது.

லிமிகால், உடலுக்கு அத்தியாவசியமான
போஷாக்குச் சத்துக்கள் கொண்ட பரிபூர்ண
மரக்கறி உணவு. ஒரு வேளை லிமிகால்
(4 மேசைக் கரண்டி பவுடர் அல்லது 6
பிஸ்கட்டுகள்) பசியைச் சமனம் செய்யவல்ல
ஒரு முழுச் சாப்பாட்டுக்குச் சமமானது;
ஆனால் குறைந்த கலோரிகள் கொண்டது.
பரீட்சார்த்தமாக லிமிகால் சாப்பிட்டுப்
பார்த்ததில் ஒரு வாரத்திற்கு 3லிருந்து 4
பவுண்டுகள் வரை எடை
குறைந்திருக்கிறது.

லிமிகால் பவுடர் சாக்கலேட், வாழைப்பழம்,
ஆரஞ்சு ஆகிய மூன்று இன்சுவைகளில்,
225 கிராம்கள், 1.6 கிலோகிராம் ஆகிய
இரு சைஸ் டின்களில் கிடைக்கிறது.






லிமிகால் பிஸ்கட்டுகள் 27 கொண்ட
(900 கலோரிகள்) டின்னில்
கிடைக்கின்றன.

எடை குறைந்து எடுப்பாய்
விளங்க லிமிகால் — போஷாக்குள்ள
பரிபூர்ண பதிலுணவு.

ஸாராபாய் கெமிகல்ஸ்
தபால் பெட்டி 1688, பம்பாய் – 1.

Shilpi SC 137 TM

# சாதல் இல்லையேல் காதல்

சோ

[நாகராஜனின் தூரத்து உறவுக்காரர் மண்டையைப் போட்டு நாகராஜனுக்குப் பெரும் பிரச்னையை உண்டு பண்ணி விட்டார். சொத்துக் கிடைக்காவிட்டாலும் போகிறது, காதலும் பறி போய் விடுமே என்று நாகராஜன் ரயிலில் சந்தித்த தன் நண்பன் சுரேஷிடம் பிரலாபிக்கிறான். பிறகு அவன் நிலை என்ன? மேலே படியுங்கள்.]

## காட்சி 10

[கனகசபை வீடு. கனகசபையும் மாலதியும் பேசிக் கொண்டிருக்கிறார்கள்]

கனகசபை: ஏம்மா, நம்ப மாப்பிள்ளை... அதான், நாகராஜன் என்னிக்குத் திரும்பி வரதாச் சொன்னான்?

மாலதி: இன்னிக்குத்தான் சித்தப்பா: ஊர்லேந்து வந்தவுடனே நேரே இங்கேதான் வரதாச் சொல்லியிருக்கார். டைம் ஆயிடுத்து. அவரை இன்னும் காணுமே....

கன: வருவாரு.. அவசரப்பட்டா எப்படி?

மால: சித்தப்பா, நீங்க எங்கே எங்க கல்யாணத்துக்குக் குறுக்கே நிப்பீங்களோன்னு பயந்துக்கிட்டே இருந்தேன். நல்லவேளை, நீங்க ரொம்பச் சீக்கிரமா சம்மதிச்சுட்டீங்க! அவரைப் பார்த்தவுடனேயே உங்க மனசு மாறிடுத்து இல்லே? அவர் பெரிய அறிவாளின்னு இப்ப ஒத்துக்கிறீங்களா?

கன: எவன் சொன்னான்? அவன் அறிவாளியா? இந்தக் காலத்திலே ஒரு நல்ல புத்திசாலிக்குத்தான் பொண்ணைக் கொடுப்பேன்னு, மாப்பிள்ளையைத் தேடிக்கிட்டிருந்தா தேடிக்கிட்டே இருக்க வேண்டியதுதான்.. ஏதோ, காலேஜிலே படிக்கிறான்...இப்ப இல்லாட்டியும் ஒரு நாலஞ்சு வருஷத்துலே பாஸ் பண்ணிப்பிடுவான். நீ நம்ம வீட்டிலே இருந்த மாதிரியே ஒரு குறையும் இல்லாம நிம்மதியா, சௌகர்யமா வாழ்க்கை நடத்தணும். அதுக்கு வசதி இருக்கணும். இந்த நாகராஜனுக்கு மாமா சொத்து இருக்குது. அதான் அவன் சித்தி தம்பி சித்தப்பா பிள்ளை மச்சான் — ஏதோ சொன்னானே...

மால: சித்தப்பா! அப்போ அந்தச் சொத்தை நம்பியா நீங்க கல்யாணத்துக்கு ஒத்துக்கிட்டீங்க?

கன: பின்னே என்ன? அந்தப் பையனை நம்பியா ஒத்துக்கிட்டேன்? சங்கரலிங்கம் பெரிய புள்ளி. அவர் சொத்துலே இவனுக்குப் பத்துலே ஒரு பங்கு கிடைச்சாக்கூடப் போதும். ஒரு கவலை இல்லாம மூனு தலைமுறை வாழலாம்.

மால: சே! பணத்துக்காகவா கல்யாணம்? ஒருத்தருடைய குணத்துக்காகத்தான் கல்யாணம் பண்ணிக்கணும். நீங்க இந்த மாதிரி நினைப்பீங்கன்னு நான் நினைக்கவே இல்லே.

கன: ஏன்? நீ என் குணத்தைச் சரியாப் புரிஞ்சுக்கலே! இத்தனை வருஷம், பொறந்ததிலிருந்து கூடவே இருக்கே. உனக்கு என் குணமே புரியலே. அவனைப் பார்த்து இப்பத்தான் கொஞ்ச நாளாவுது. அவன் குணம் புரிஞ்சுடுத்தா? அதனாலேதான் சொல்றேன். குணத்தைப் பார்த்துப் பிரயோசனமில்லே. கண்ணுக்குத் தெரியாது. பணத்தைத்தான் பார்க்க முடியும்.

மால: ரொம்பச் சாமர்த்தியமாப் பேசிட்டீங்க, சித்தப்பா!

கன: கோவிச்சுக்காதேம்மா... பணம் இல்லாதவனுக்கு உன்னைக் கொடுத்திட்டா, நாளைக்கே நீ கஷ்டப்பட்டா நான் எப்படிப் பொறுத்துக்கிறது? நம்ம சொத்து மட்டும் போதுமா? தலைமுறை தலைமுறையா நல்லா இருக்க மாப்பிள்ளை கையிலேயும் பணம் வேணும்.

மால: சித்தப்பா அவர் வரார்.

கன: எவரு? (திரும்பிப் பார்க்கிறார்) அடடே! மாப்பிள்ளை! வாங்க! (நாகராஜன் வருகிறான்) மாலதி! காப்பி கொண்டாம்மா.

நாகராஜன்: அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம் ஸார்.

கன: சரி, வேண்டாம்... என்ன மாப்பிள்ளை? சங்கரலிங்கம் என்ன சொன்னாரு?

நாக: நான் அவரைப் பார்க்கவேயில்லே, ஸார்!

கன: ஏன்?

நாக: நான் போறதுக்கு முன்னாலேயே அவர் இறந்துட்டார்!

மால: நாகராஜன்! நிஜமாவா?

கன: அட கடவுளே!... பாவம் நல்ல மனுஷன் பூட்டான்!

நாக: ஸார்! இதனாலே நீங்க உங்க முடிவை ஒண்ணும் மாத்தப் போறதில்லையே?

கன: எது? என்ன முடிவு?

நாக: எங்க கல்யாண விஷயமா...

கன: மாத்த வேண்டியதுதான்.

நாக: ஏன் ஸார்?

கன: சாவு நடந்திருக்கு. மாத்தாம எப்படி? தேதியை மாத்திக் கல்யாணத்தை வெச்சுப் போம்.......

நாக: ஸார்! எனக்குச் சொத்துலே பங்கு இல்லாமப் போனாலும் மாலதியை எனக்குக் கொடுக்கிறதுன்னு நீங்க தீர்மானம் பண்ணிட்டீங்களா?

கன (திக்பிரமை பிடித்தவராக): சொத்திலே பங்கு இல்லையா?

நாக: அவருடைய உறவுக்காரங்க அப்படியே எப்பம் விடத் தீர்மானிச்சுட்டாங்க. போகட்டும் ஸார்! அந்தச் சொத்துப் போனா என்ன சார்! எனக்கு இனிமே நீங்க இருக்கீங்க!



மால: சித்தப்பா! கடைசியிலே பணம் இன்னாட்டியும் [illegible] யில்லேன்னு நீங்களே தீர்மானம் பண்ணிட்டீங்க. பார்த்தீங்களா?

நாக: மாலதி! படிப்பைக் கூட நிறுத்த வேண்டியதுதானேன்னு நினைச்சேன். இனிக் கவலே இல்லே. சித்தப்பாதான் இருக்காரே!

கன: அப்போ உனக்குச் சொத்திலே பங்கு இல்லேயா? ஐயா, பாவம்! உன்னேப் பார்த்தா பரிதாபமா யிருக்குது.

நாக: பரவாயில்லே ஸார்! சொத்துப் போனாப் போகட்டும். அதுக்காக நீங்க என் மேலே இவ்வளவு பரிதாபப்பட வேண்டிய அவசியமே இல்லே.

[illegible] ஐயோ பா[illegible]ன்!

நாக: பணம் இல்லே. அவ்வளவுதானே! போகட்டும் பரவாயில்லே! நீங்க வருத்தப் படாதீங்க.

கன: எப்படி வருத்தப்படாம இருக்க முடியும்? உனக்குப் பணமும் இல்லே—மாலதி யும் இல்லே! ஐயோ பாவம்!

நாக: மாலதி இல்லேயா?

மால: (பதற்றத்துடன்) சித்தப்பா! நீங்க என்ன சொல்றீங்க?



கன: புரியலே! 'உனக்கும், இந்த நாகராஜனுக்கும் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்ட கல்யாணம் பெரியோர்களாலேயே நிறுத்தப்பட்டது. நாகராஜன் நீ போயிட்டு வரலாம்.

மால: சித்தப்பா'

நாக: சித்தப்பா!

கன: என்னது? உனக்கு நான் சித்தப்பாவா? இதோ பாரய்யா! உனக்குப் புண்ணியமாப் போவுது நீ என்னோட உறவு கொண்டாடாதே! எங்கேயோ இருந்த சங்கரலிங்கத்தை மாமான்னே! அவன் பூட்டான். இப்ப என்னைச் சித்தப்பான்றே! வேண்டாய்யா!

நாக: ஸார்! எனக்குக் கிடைக்கப்போற சொத்துலே நம்பிக்கை வெச்சா முதல்லே மாலதியைக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கிறேன்னு சொன்னீங்க?

கன: ஆமாய்யா! மாலதியைக் கல்யாணம் பண்ணிக்கப் போறவனுக்கு, அவளை வசதியா வெச்சுக் காப்பாத்தத் தெரியணும். அவ கல்யாணத்துக்கப்புறமும் இந்த வீட்டிலே இருக்கிற மாதிரியே சௌகரியமாயிருக்கணும். உன்னை இந்த நிலைமையிலே பண்ணிக்கிட்டா அது எப்படி முடியும்? இந்த வீட்டிலே இருக்கிற சௌகரியமும், வசதியும் அவளுக்குக் கிடைக்குமா?

நாக: ஏன் சார், முடியாது? இங்கேயே இருந்துட்டாப் போச்சு.

கன: என்னய்யா சொல்றே?

நாக: கல்யாணத்துக்குப் பிறகு, நானும், மாலதியும் இங்கேயே இருந்துடறோம். எனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லே.

மால: ஆமாம், சித்தப்பா! அது நல்ல யோசனை இல்லே!

கன: உம்! இங்கே நீ இருக்கிறதுலே உனக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லேயா?

நாக: இல்லவே இல்லே...! நீங்களும் நல்லாத் தெரிஞ்சவரா போயிட்டீங்க! கல்யாணமும் ஆயிட்டா அப்புறம் என்ன ஸார்! எனக்கு இங்கே இருக்கிறதுலே ஆட்சேபணையே இல்லே.

கன: எனக்கு இருக்குது! ஏன்யா, வீட்டுக்கு மாப்பிள்ளையா வர்றவன் பேசற பேச்சா இது? என் பணத்துலே நீ வாழலாம்னு திட்டம் போட்டியா? ஒரு மாப்பிள்ளைக்கு வேண்டிய கௌரதையே இல்லேயே உனக்கு!

மால: பேசாம இருங்களேன் நாகராஜன்.

கன: அவனுக்குத் தெரிஞ்சது பேசறது ஒண்ணுதான். அதையும் நிறுத்திட்டா எப்படி?

மால: சித்தப்பா.....

கன: இவன் எதிரிலே என்னைச் சித்தப்பான்னு கூப்பிடாதே. இவனும் சித்தப்பான்னு சொல்ல ஆரம்பிச்சுடுவான். எனக்கு உடம்பெல்லாம் எரியுது!

மால: சித்தப்பா....

செய்யறது நியாயமா? வாழ்க்கையிலே பணமா முக்கியம்? இன்னிக்கு வரும். நாளைக்குப் போகும்!

கன: இவனுக்கு இன்னிக்கு வரவே இல்லேயே? இதோ பாரு, மாலதி! நயா பைசாக் காசு இல்லாத பயனுக்கு

உன்னைக் கல்யாணம் பண்ணிக் குடுக்க நான் சம்மதிக்கவே மாட்டேன்.

மால: பணம் இல்லாட்டி என்ன சித்தப்பா. இவர் சம்பாதிக்கிறார். இன்னும் கொஞ்ச நாள்ளே இவர் கவிதைக்கெல்லாம், எவ்வளவு மதிப்பு வரப் போறது தெரியுமா ?

கன: கவிதையா?

மால: ஆமாம், சித்தப்பா.... முன்னே நான் சொன்னேனே.... காலேஜிலே தமிழ்க் கவிதைப் போட்டியிலே பிரைஸ் வாங்கினார்னு—இவர்தான் அவர்.

கன: நீ கவிதை வேறே எழுதுவியா? உருப்பட்டாப்போலேதான் !

மால: ஏன் சித்தப்பா ?

கன: ஏனய்யா நீதானே அந்த ஸண்டே மண்டே எழுதினே! கர்மம்!... இவனாலே இப்படிப்பட்ட கவிதை எத்தனை நாட்கள் எழுத முடியும்?

மால: ஏன்.... வாழ்நாள் பூரா எழுத முடியும் !

கன: எப்படி? இன்னும் அஞ்சு நாள் எழுதலாம். அவ்வளவுதான் !

நாக: ஏன், ஸார் !

கன: வாரத்துலே மொத்தம் இருக்கிறது ஏழு நாள்.... ஸண்டே, மண்டே இரண்டு நாள் முதல் கவிதையிலேயே போயிடுத்து. பாக்கி அஞ்சு நாள்தானே?

மால: இவருக்கு இதைத் தவிர வேறே எழுதவே முடியாதுன்னு நினைச்சுட்டீங்களா?

கன: முடியலாம்..... ஜனவரி, பிப்ரவரின்னு ஒரு பன்னிரண்டு கவிதை எழுதலாம். அப்பாலே? ஐடியாவுக்கு இவன் எங்கே போவான் ?

நாக: சித்தப்பா....

கன: எழவு, என்னை அப்படிக் கூப்பிடாதேய்யா! கவிதையா எழுதறே நீ?.... என்னய்யா இது ஸண்டே, மண்டே? நீ இனிமே கவிதை எழுதாதே.... காலண்டர் போடு!

நாக: ஸார்! உங்களுக்கு என் கவிதையைப் பத்தித் தெரியாது. நான் ஒரு கவிதை எழுதினா மத்தவங்க ஒன்பது கவிதை எழுதின மாதிரி.....

கன: என்னய்யா அது?

நாக: ஆமாம்..... என் ஒரு கவிதைக்குக் குறைஞ்சது ஒன்பது அர்த்தம் இருக்கும்....

மால: சித்தப்பா....நான் தீர்மானமாச் சொல்றேன்... என் மனசுலே இவரைத் தவிர வேறு யாருக்கும் இடம்கிடையாது சித்தப்பா!

நாக: பார்த்தீர்களா ஸார்; அவளுக்கு என் பேரிலே இருக்கிற அன்பை? என்ன அடக்கம், என்ன குணம், என்ன பண்பு! ஆஹா! ஸார், இவளைப் பார்த்தா ஒரு காலேஜ்லே படிக்கிற பெண்ணாத் தெரியுதா?

கன: அதானே பார்க்கிறேன்! காலேஜ்லே படிக்கிற பெண்ணாவே தெரியலியே? உன்னைத்தான் கல்யாணம் பண்ணிப்பேன்னு பிடிவாதம் பிடிக்கிறாளே! ஒரு படிச்ச பொண்ணு. இவ்வளவு முட்டாளாவா இருப்பா !

மால: சித்தப்பா.... நீங்க இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்கலேன்னா, எனக்குக் கல்யாணமே வேண்டாம்.

நாக: பாருங்க ஸார்!.... ஸார், இது தெய்வீகக் காதல். ஜன்ம, ஜன்மமா வரது ஸார், இது !

கன: வாஸ்தவம்தான்! ஜன்ம, ஜன்மமா வர பாவம்தான் இப்ப, இப்படி ஆட்டி வைக்குது !

நாக: நீங்க எப்படி வேணுமானாலும் பேசுங்க. ஸார், நீங்க எங்க உறவை வெட்டலாம். ஆனா எங்க அன்பை அறுக்க முடியாது. எங்க காதலை 'கட்' பண்ண முடியாது. எங்க பாசத்தைக் கத்திரிக்க முடியாது.

கன: என்னய்யா இது, எளவு?.... வெட்டலாம், அறுக்க முடியாது, கட் பண்ண முடியாது, கத்திரிக்க முடியாது! சலூன் கிலூன் வெச்சிருந்தியா ?....

நாக: சலூன் வெச்சாலும் தப்பில்லே ஸார்! ஆய கலை அறுபத்து நாலு. அதிலே ஒண்ணுதான் சலூன் கலை !

கன: அது தெரிஞ்சாலாவது பரவாயில்லே! ஏதோ நாலு காசு சம்பாதிக்கலாம்.

மால: கவிஞனாலே பணம் சம்பாதிக்க முடியாதா?

கன: முடியாது! அதுவும் இவன் மாதிரி காலண்டர் பாட்டு எழுதறவங்களாலே கண்டிப்பா முடியாது ! அப்பனே! காலண்டர் கவிராயா, மாலதியை மறந்துடு !

மால: அவர் என்னை மறந்தாலும், நான் அவரை மறக்கத் தயாராயில்லே.

நாக: பாரதப் பண்பு — பாரதப் பண்பு!

கன: ஆமாம்..... நம்ம நாட்டுப் பண்பு தான் இது. கடைசி வரைக்கும், எவன் நமக்கு வேண்டியவன், எவன் வேண்டாதவன்னு தெரியாது! முழுக்கவும் நல்லா ஏமாந்தால்தான் புரியும்!

நாக: ஸார் — இந்த மாதிரியெல்லாம் பேசாதீங்க! என்னாலே இனிமே பொறுத்துக் கிட்டு இருக்க முடியாது! இனிமேலும் இந்த மாதிரி பேசினீங்க.....

கன (ஆவலுடனும் நம்பிக்கையுடனும்): கோவிச்சுக்கிட்டுப் போயிடுவியா?....

நாக: எனக்குக் கோவமே வராது ஸார்.... ஒரு பேச்சுக்குச் சொன்னேன். அவ்வளவு தான் !

கன: போ! அவ்வளவுதானா?

மால: சித்தப்பா.... நான் சொல்றதைக் கேட்க மாட்டீங்களா ? இவரே, பிற்காலத்திலே ஒரு உலகம் போற்றும் கவிஞராகலாம். அப்போ பணம் இவரைத் தேடி வரும். உங்க குறையும் தீர்ந்துடும்.

கன: போம்மா! இவனாலே சுயமா ஒரு செல்லாக் காசு சம்பாதிக்க முடியாது. அப்பேர்ப்பட்ட பயலுக்கு, உன்னைக் கல்யாணம் பண்ணிக் குடுக்க எனக்கு மனசு வராது.

நாக: ஏன் ஸார், அப்படிச் சொல்றீங்க ! என்னால் ஏதாவது வேலை தேடிப் பொழைக்க முடியாதா ?

கன: உனக்கு வேலை தர எந்த முட்டாள் காத்துக்கிட்டிருக்கான்?

நாக: நீங்கதான் இருக்கீங்களே....அதாவது.... வந்து, உங்ககிட்டேயே ஏதாவது வேலை இருந்தா சொல்லுங்க....

மால: இதெல்லாம் எதுக்கு சித்தப்பா, வீண் பேச்சு? உங்க முடிவுதான் என்ன சொல்லுங்க......

(தொடரும்)

ஆரோக்
கியமான.
பளபளக்கும்
கூந்தலுக்கு...




# டாடாவின் நறுமண கோகோனட் ஹேர் ஆயில்

## தூய தேங்காய் எண்ணெய் அடங்கியது.

டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில் தூய தேங்காய் எண்ணெய் மட்டுமே என்பதை அறிவுள்ள அன்னையர் அறிவர். கூந்தலின் வேர்களுக்குச் சத்தூட்டி, கூந்தல் அடர்த்தியாகவும், ஆரோக்கிய மாகவும் இருக்கச் செய்கிறது. தவிர, ரோஜா, லேவண்டர், மல்லிகை, புஷ்பா என் மனோகரமான நாலு நறுமணங்களுடனும் வருகிறது டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில்.

கூந்தல் எப்பொழுதும் எழிலுடன் மிளிர டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில்.

SH3I-TCO-76

“இன்று விடுமுறை தானே?”

“ஆமாம்.”

“வாருங்களேன். பிர்மாவைப் போய்ப் பார்த்துப் பேசிவிட்டு வரலாம்.”

திடுக்கிட்டேன்.

“பிர்மாவைப் போய்ப் பார்ப்பதாவது! அப்படியே பார்த்தாலும் பேசுவதாவது?”

நண்பர் சிரித்தார்.

“நாம் ஏன் பிர்மாவைப் போய்ப் பார்க்க வேண்டும்? அவர் படைத்த அழகிய உலகின் மனிதர்கள் இருக்கும் லட்சணத்தைப் பார்க்க அவரே வானிலிருந்து இறங்கி வந்து பார்த்துவிட்டுப் போகட்டும்.”

“படைப்பு பிர்மாவை நான் சொல்லவில்லே. பிர்மாவையே படைக்கும் பிர்மாவைப் பார்க்கத்தான் அழைக்கிறேன்.”

“பிர்மாவைப் படைக்கிற பிர்மாவா?”

“பிர்மாவை மட்டும் அல்ல; விஷ்ணு, முருகன், லக்ஷ்மி, எல்லோரையும் ஒரே நாளில் நூற்றுக் கணக்கில் படைக்கிறார். என்னுடன் வரத் தயாரா?”



# பொம்மைக் கல்வி

கூடலூர் டவுன் பஸ் வண்டிப்பாளையம் ஸ்டாப்பில் நின்றது.

“இதுதான் வண்டிப் பாளையம்.”

“முருகன் கோவில் பிரசித்தமாயிற்றே!”

ஒரு பெரிய வீட்டின் முன் நின்றோம். நாற்பத்தி ஏழு வயதுள்ள ஒரு மனிதர் கைகூப்பி வரவேற்றார். பார்த்தால் பெரிய காந்தியவாதியாய்த் தெரிந்தார். நல்ல தூய கதர் வேட்டி, ஒரு கதர் சட்டை. மேலே மடித்துப் போடப் பட்ட துண்டு.

“இவர்தான் தண்டபாணி. கடலூர் பதுமைத் தொழிலாளர் கூட்டுறவு சங்கத்தின் முன்னாள் தலைவர்; இப்போதைய

டைரக்டர். பள்ளி ரைட்டராய் இருந்து விலகி இப்போது இந்தச் சங்கத்துக்கு முழு நேரச் சேவை செய்கிறார்.''

''சின்னஞ்சிறு குழந்தைகள் முதல் தொண்டு கிழவர் வரை பொம்மைகளில் மனத்தைப் பறி கொடுக்காதவர்களே இல்லையல்லவா? இப்போது நவராத்திரி வரப்போகிறதல்லவா? அதனால் இந்தப் பொம்மைகள் பழைய காலத்தில் எப்படிச் செய்தார்கள், படிப்படியாக அது எப்படி முன்னேறி வந்துள்ளது, இப்போது எப்படித் தயாரிக்கிறார்கள் என்பதை எல்லோரும் அறிவது அவசியம் அல்லவா? அதற்காகத் தங்களை நாடி வந்தோம்.''

'' உண்மைதான். ஆரம்ப காலத்தில் பொம்மைகள் நவராத்திரியின் போது கொலுவை அலங்கரிக்கவும், கோவில்களில் திருவிழாக் காலங்களில் அலங்கரிக்கவுமே பயன்பட்டு வந்தன. இப்போதும் அப்படித்தான். ஆனால் இப்போது நாங்கள் இந்தப் பொம்மை செய்யும் தொழிலைக் கல்வியின் பக்கம் திருப்பிவிட்டுப் பொம்மைகள் கல்விக்காகச் சேவை செய்யும்படி செய்துள்ளோம்.''

''கல்விக்காகப் பொம்மைகள் சேவை செய்கின்றனவா?''

''ஆமாம். நான் உபாத்தியாயராயிருந்து சிறு குழந்தைகளின் மன நிலையை நன்கு அறிந்தவன். இரைப்பை, நுரையீரல், கல்லீரல், சிறுகுடல் என்று படிக்கும் சிறுவன் படங்களைப் பார்த்துக் கொஞ்சம் புரிந்து கொள்கிறான். நாங்கள் பொம்மை உருவில் செய்து அவனிடம் காட்டும்போது அவன் நினைவில் ஆழமாய்ப் பதிந்துவிடுகின்றன. உயிர் உள்ளவரை அவன் நினைவில் இருந்து அகல முடியாது.

''பொம்மைகள் மூலமாய்க் கல்வி போதிக்க உதவுகிறோம். அதாவது நேரிடையாகப் போதிக்க வசதியுள்ள சாதனங்களாக அவை இருக்கின்றன.

''பூகோள, சரித்திர சம்பந்தமான பொம்மைகள் இவை. எஸ்கிமோக்கள், சிவப்பிந்தியர்கள் அரேபியர்கள் இவர்களைப் பற்றிப் புத்தகங்களில் எப்படி எப்படி வர்ணித்துள்ளார்களோ, அப்படி அப்படியே மண் பொம்மைகளால் செய்திருக்கிறோம். இவைகளைப் பார்க்கும் சிறுவர் சிறுமிகள் மனத்தில் ஆழமாய்ப் பதிந்து விடுகின்றன.

''இதோ இவைகள் எல்லாம் சரித்திரப் பொம்மைகள். சிவாஜி, அசோகர், கட்டபொம்மன், சோழ அரசன் இப்படிப் பல பொம்மைகள். ராமாயணம், மகாபாரதம், விக்கிரமாதித்தன், ராஜ ராஜ சோழன், புத்தர் காலம், கிறிஸ்தவ காலம், மொகலாயர் காலம், ஆங்கிலேயர் காலம், கடைசி கவர்னர் ஜெனரல் ராஜாஜி வரையில். இந்தப் பொம்மைகளைச் சிறுவர்கள் கண் முன்னால் பார்க்கும்போது சரித்திர புருஷர்கள் அவர்கள் கருத்தில் நிலைத்துவிடுகின்றனர். அதன்பின் சிவாஜி கதை, கட்டப்பொம்மன் சரித்திரம் போன்றவற்றை நாம் விளக்கும் போது படம் பிடித்தாற்போல் அவர்கள் மனத்தில் பதிந்து விடுகின்றன.''

''ஒரு செட்டில் எவ்வளவு பொம்மைகள்? விலை எவ்வளவு?''

''இருபத்தி நான்கு பொம்மைகள் கொண்ட ஒரு செட் ரூபாய் ஐம்பது. பல பள்ளிகளுக்குச் சப்ளை செய்துள்ளோம். இப்படித் தயாரிப்பது கடலூரில் மட்டும்தான்.''

''இப்படிக் கல்விக்கான போதனை பொம்மைகள் செய்வதில் லாபம் உண்டா?''

''லாபமா? இதில்தான் எத்தனை கோடி லாபம் தெரியுமா? நம் நாட்டுக் குழந்தைகள் பெரிய அறிவுக்களஞ்சியமாக ஆகிறார்களே!''

''இந்தப் பொம்மைகள் பற்றி நம் இந்தியா முழுவதும், உலகின் மற்ற பாகங்களும் அறிய வேண்டாமா?''

''பதினைந்து நாட்களுக்கு முன்பு நியூயார்க்குக்குத் தொழில் பொம்மைகள் செட்டை விமானத் தபாலில் 'நன்கொடையாக அனுப்பி வைத்துள்ளோம். ரஷ்யாவுக்குக்கூட சென்ற ஆண்டு தொழில் பொம்மைகள் இருநூற்றைம்பது ரூபாய்க்கு அனுப்பினோம். எவ்வளவோ 'இந்தியப் பெண்கள் செட்' லண்டனுக்கு அனுப்பியுள்ளோம். இவைகளை அனுப்பவும் வெளிநாட்டு ஆர்டர்கள் பலவும் எங்களுக்கு வரவழைத்துத் தரவும் சர்க்காரும்





மற்ற சர்க்காரைச் சார்ந்த ஸ்தாபனங்களும் பெரிதும் உதவுகின்றன.''

'' நீங்கள் செய்யும் அரிய சேவையை மத்திய சர்க்கார் அறிந்திருக்கிறார்களா?''

''அறிந்திருக்கிறார்களாவது. இதோ பார்த்தீர்களா எங்களுக்குக் கிடைத்த பெரிய பொக்கிஷத்தை. ஆசிய ஜோதியின் அருகில் நின்று பேசும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது'' என்று கூறி ஒரு புகைப்படத்தை எடுத்துக் காண்பித்தார் அவர். ''மூன்று ஆண்டுகளுக்கு முன்பு டில்லியில் சென்னை ராஜ்ய பாவைத் தொழில் பொருட்காட்சி ஒன்று நடந்தது. மத்திய மந்திரி திரு கே. சி. ரெட்டி திறந்து வைத்தார். நானும் என் தகப்பனாரும் தலைவர் மாணிக்கமும் போனோம். தமிழ் நாட்டிலிருந்து வான் ஏற்பாடு செய்து கொடுத்தார்கள். ரூபாய் மூவாயிரம் பெறுமான பொம்மைகளை எடுத்துப் போனோம். பத்து நாட்கள் மேற்படி பொருட்காட்சி நடந்தது. எங்கள் பங்காளி திரு வைத்தியலிங்க பத்தருக்கு ஆயிரம் ரூபாய் பரிசும், விருதும்கூட இந்த ஆண்டு குடியரசு விழாவில் தில்லியில் கிடைத்தன. அவர் குருக்ஷேத்திர ரதத்தைப் பொம்மையாகச் செய்து காட்டியிருந்தார்.''

''தாங்கள் பொம்மை தயாரிப்பது எப்படி என்று விளக்க முடியுமா?''

''பத்து வருடங்களுக்கு முன்பு பொம்மைகளைக் களிமண்ணால் செய்தார்கள். அப்போது எல்லாம் 'மோல்ட்' செய்யும் வழக்கம் இல்லை. கறி காய்கள், பழங்கள் மட்டுமே செய்து வந்தார்கள். முதல் முதல் பாண்டிச்சேரியில் இரண்டு குடும்பங்கள் இருந்தன. ஒரு குடும்பம் பண்ருட்டி, ஒன்று கடலூர், பிறகு சென்னையில் ஒன்று என்று இப்படிக் கிளைகள் பிரிந்தன.

''களிமண் மாதிரி பொம்மைகள் தயாரிக்க முக்கியமானது களிமண். கண்ணாம்புக் கல் இல்லாமல் நைஸ் களிமண்ணைப் பூமிக்குக் கீழே பத்தடி வெட்டி அந்தக் களிமண்ணை எடுப்போம். அந்த மண் பாஹிரிக்குப்பத்தில் கிடைக்கிறது. ஒரு வண்டி மண் ரூ. 2.50. தைமாதத்துக்குப் பிறகு வயலில் அறுவடையானதும் மண் கொண்டு வந்து ஒரு வருடத்துக்குத் தேவையானதைச் சேர்த்து வைத்துக் கொள்வோம்.

''பிறகு மண்ணை நைசாகப் பிசைந்து, கையால் உருவம் செய்ய வேண்டும். இந்தக் கைத்திறன் நூற்றுக்கு ஒருவருக்கே உண்டு.

''பிறகு அதை வைத்துக் கொண்டு 'மோல்ட்' செய்து கொள்ள வேண்டும். களிமண் உருவத்தில் நடுவில் வெள்ளைக் கோடு கட்டி வரம்பு கட்ட வேண்டும், அளவுக்காக. இப்படிக் கோடு கட்டி வரம்பு கட்டியதும் கல்நார் மாவைத் தண்ணீரில் கரைத்துக் கொண்டு அதன் மேல் ஊற்ற வேண்டும். கல்நார் என்பது டால்மியாபுரத்தில் கிடைக்கிறது. அதை உடைத்துச் சூடாக வறுத்து மாவாகக் கரைக்க வேண்டும். அதை உருவத்தின் பேரில் ஊற்றியதும் கல்நார் மாவு இறுகிக் கெட்டியாகும். பிறகு அதே போல் மறுபக்கம் கல்நார் மாவு கரைத்து உருவத்தின் மேல் கொட்ட வேண்டும்.

''இப்போது மோல்டு தயாராகி விட்டது. அதன் பின் களிமண்ணைக் கொண்டு டக் டக் என்று மோல்டில் வைத்து அழுத்தி உருவங்களைச் செய்துவிடலாம்.

''அப்படித் தயாரான உருவங்கள் ஒரு வாரம் நிழலில் உலர வேணும். பிறகு ஒரு நாள் வெய்யிலில் வைத்து மறுநாள் சூளையில் வைக்க வேண்டும்.

''ஒரு சுற்று வரட்டி, அதன் மேல் விறகு, அதன் மேல் தேவையான உருவங்கள் நூறு, இருநூறு என்று அடுக்க வேண்டும். அதன் பேரில் வைக்கோலைப் பரப்ப வேண்டும். பிறகு சேறினால் மெழுகிக் கீழ்ப் பக்கத்தில் நெருப்பு மூட்டிவிட வேண்டும். மேல் வைக்கோல் சாம்பல் பூத்துவிட்டால் பொம்மைகள் வெந்து விட்டதாய் அர்த்தம். இப்படி வேக 120 டிகிரி உஷ்ணம் தேவை. அதாவது இரண்டரை மணி அவகாசம். சாம்பலான எருமுட்டைகள் சரியும்போது சில பொம்மைகள் சேதம் ஆகும். அவைகளை எடுத்து மக்குப் பூசிச் சரிப்படுத்த வேண்டும். அவைகளைக் காய வைத்துப் பிறகு சீனக் களிமண் எனப்படும் (நெய்வேலியில் கிடைக்கிறது) நாமக்கட்டி வெள்ளையை நீரில் கலந்து அவைகளைத் தோய்த்து எடுக்க வேண்டும்.

''அப்புறம் தேவையானபோது 50, 100 பொம்மைகளாய் எடுத்து வர்ணம் பூச வேண்டும். அப்போதுதான் எல்லாப் பொம்மைகளும் ஒரே மாதிரி இருக்க முடியும்.

''காகித மாதிரி: அச்சாபீஸ்களில் இருக்கும் கட்பேப்பரை இரண்டு மணங்கு மூட்டை ரூபாய் ஐந்து கொடுத்து வாங்கிச் சீயக்காய் மிஷினில் அரைத்துப் பவுடர் செய்துகொள்ள வேண்டும். பேப்பர் பவுடர் ஒரு பாகம், பிளாஸ்டர் மாவு இரண்டு பாகம் கலந்து, மைதா மாவு பசை செய்து எல்லாவற்றையும் பிசைந்து அப்பளம் மாதிரி இட்டுக் கொள்ள வேண்டும். பிறகு அதை எடுத்து மோல்டில் அழுத்தி உள்ளே பேப்பர் வைத்து ஒட்டி வெளிவராதபடி செய்ய வேண்டும். இப்படிச் செய்து மோல்டில் அழுத்தி எடுத்து, வஜ்ரத்தால் இரண்டு பாகங்களையும் ஒட்டிக் காயவைத்துப் பிறகு வர்ணம் பூசவேண்டும். இப்படி பேப்பரால் செய்யும் பொம்மைகள் உடையமாட்டா. ஆனால் தயாரிப்புக்குக் களிமண் பொம்மையைவிடச் செலவு அதிகம்.

''சிமெண்ட் மாதிரியும் செலவு அதிகமாகக்கூடியதுதான். ஒரு பாகம் சிமெண்ட், இரண்டு பாகம் சலித்த மணல், ஒரு பாகம் ஜல்லி கலந்து அந்தக் கலவையைத்தான் மோல்டில் வைத்துப் பாகம் பாகமாக எடுத்து அவைகளை ஒட்டிக் காயவைத்துப் பிறகு பெயிண்ட் கொடுக்க வேண்டும்.''

''கடைசியாக உங்கள் சொஸைட்டியைப் பற்றிச் சொல்லுங்கள்.''

''1941ல் சொஸைட்டி ஆரம்பம். பங்கு ரூ.10.25. முப்பத்திரண்டு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். எல்லோரும் உறவுக்காரர்கள். சர்க்கார் நீண்ட காலக் கடன் கொடுத்து உதவுகிறார்கள். அங்கத்தினர்கள் செய்யும் பொம்மைகளை சொஸைட்டியில் கொடுப்பார்கள். கொண்டு வந்து கொடுத்ததும் பாதிக் கிரயம் கொடுத்து விடுவோம். மறு பாதிக் கிரயம் விற்பனையானதும் கொடுக்கிறோம். நம் நாட்டின் வருங்கால வீரர்கள் என நாம் நம்பிக்கையுடன் எதிர் நோக்கும் நம் சிறுவர் சிறுமியர் அறிவுக் களஞ்சியமாகத் திகழ எங்களால்முடிந்ததைச் செய்யத் தயாராக இருக்கிறோம்.''

பொம்மைகள் மூலம் கல்வி வளர்ச்சிக்கு அவர்கள் படும் பாடு வார்த்தைகளால் அளவிட்டுக் கூறிவிட முடியாது. —பிர்மா

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**பொடுகு**

இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.





**கேசம் உதிருதல்**

உங்கள் ரோமம் உதிருகிறது. ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**

இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினோ ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்கு அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமக்கால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹெயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினால் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மென்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

**ப்யூர் சில்விக்ரீன்**



கேசம் சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

**சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்**

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.



# Silvikrin

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி

SP/1/P/6/63


சண்முகம், நான் சொன்னபடி உன் இலாக்காவுக்குப் பெரியசாமி விஷயத்தை அறிவித்து விட்டேன். இனி உன் முறை.
சரி நான் அந்தத் தனி அறையில் போய் போன் செய்து விட்டு வருகிறேன்.


போலீஸ் உடைக்கே தனியாக ஒரு ஜபர்தஸ்து வந்து விடுகிறது. நம்முன்னால் அவன் செய்ததை பார்த்தாயா?
சேகர், அவன் அழைத்துப்போவது நீதியின் பிரதிநிதியை. அவன் போட்டிருக்கும் வேஷத்துக்கு ஏற்றவகையில் அவனுக்கு மதிப்புத் தந்தாக வேண்டியிருக்கிறது - நண்பா.


ஹலோ.. ஐயா இல்லையா? எப்போது போனாரு... ஓஹோ! அப்படியா?
பாதிராத்திரி ரெண்டு மணி இருக்குமுங்க... ஆமாங்க.. நல்லாத் தூங்கிக்கிட்டிருந்த ஐயாவை ஒரு டெலிபோன் கால் வந்து எழுப்பிடிச்சு.


ஐயா அவசர அவசரமா உடை மாத்திக்கிட்டுக் காரிலே கிளம்பிட்டாரு. எங்கிட்ட ஏதுவுமே பேசல்லே. அப்படி போனவரு தான் இன்னமும் வரல்லே...


தர்மராஜன் வீட்டிலில்லை. அவருக்கு நேற்றிரவு ஏதோ போன் வந்ததாம். உடனே காரில் வெளியே சென்றாராம்.
போன் காலா? ஒரு வேளை ... இருக்குமோ?
ஏன் பெரியசாமியாக இருந்திருக்கக் கூடாது?


அவர் போகக்கூடிய எனக்குத் தெரிந்த இரண்டொரு இடங்களுக்கும் போன் செய்து பார்த்தேன். தகவலில்லை. இதுவே இனி, துப்பறியும் சந்துரு அவர்கள் திறமைக்கு வேலை இங்கிருந்து தான் ஆரம்பமாகிறது...

தொடரும்..

# ஆல்போ-ஸாங்

## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இளை யோர் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.






ஜே. அன் ஜே. டிஷேன்
ஹைதராபாத் (டெக்கான்)



உங்கள் மகன்
அவனது வருங்காலத்திற்கு
உரியதைப்
பெறவேண்டும்!

அதனை

**பணச் சேமிப்பு**

மூலம் அவனுக்கென்று
உறுதிப் படுத்துங்கள்




சேவிங்ஸ் பாங்க் அக்கௌண்டை எங்கள் பாங்கில் ஆரம்பியுங்கள்

ஜி. பி. கோயங்கா — சேர்மன்
ஆர். பி. ஷா — ஜெனரல் மானேஜர்
தலைமை ஆபீஸ்: கல்கத்தா

UCO-2/61 TH

## 47. மன்னுன மாவீரன்

தருமகோபன் இறந்த செய்தியைக் கேட்ட சூரபன்மன் அறிவிழந்து ஓவியம் போல் கிடந்தான்.

மன்னன் சூரபன்மன் மயங்கியிருந்த போது தூதர் சிலர் இளவரசன் பானு கோபனை அடைந்தனர். "அரச குமார! முன்பு நீங்கள் விடுவித்த மாயப் படைக் கலத்தால் நன்னீர்க் கடலில் வீழ்த்தப் பெற்ற வீரவாகு தேவர் முதலியோரை முருகன் பாசறையிலிருந்து கொண்டே வேலால் மீட்டார். அக்கினிமுகன், மூவாயிரவர், தருமகோபன் ஆகியோரும் ஒருவர் பின் ஒருவராகப் போரில் மடிந்தாயிற்று. இரணியனும் மீளுகி ஒளிந்தான். இவற்றை யெல்லாம் கேட்டுத் தங்கள் தந்தையாரும் வெந்துயர் கொண்டுள்ளார்" என்று கூறினார்கள்.

பானுகோபனுக்கு அவமானமும் ஆத்திரமும் ஆறுத் துயரும் ஒருங்கே பொங்கி வந்தன. 'நமது பெரு வாழ்வுக்கு இறுதி வந்து விட்டது போலும்' என்று எண்ணினான். ஒருவாறு தன்னைத் தெளிவித்துக் கொண்டு தந்தையையும் தெளிவிக்க நினைந்தான். அவன் மனத்தில் ஒரு தெளிவு பிறந்தது. முருகனை வெல்வது சாத்தியமல்ல என்று தெளிந்து அதனையே தந்தைக்கும் எடுத்துச் சொல்வதற்காக விரைந்தான்.

"நான் நன்னீர்க் கடலில் மூழ்கடித்தவர்களை நொடியில் மீட்ட முருகனின் சக்தியை இன்னமும் தாழ்த்தி மதிப்பிடலாகாது. அதிகம் சொல்வானேன்? தாங்களே முதல் நாள் அந்தப் பாலகனோடு போர் புரியச் சென்ற போது வில்லம்புகளை இழந்து தோற்று வந்தீர்கள் அன்றோ? இன்னமும் முருகனுக்குக் கோபம் வரவில்லை. அவன் சினமுற்று விட்டால் அதனைத் தாங்குவதற்கு எவரால் முடியும்? மாயோன் சக்கரத்தை மாலையாகத் தரித்த தாரகனையும் கிரௌஞ்ச மலையையும் அழித்த வேற்படையை எதிர்ப்பவர் யாவர்?

"அப்பா! முருகன் முனிந்தால் அண்டங்கள் அனைத்தையும் அழிப்பான். அவனுடைய தூதனுகிய வீரவாகுவை வெல்வதுகூட அரிதுதான். நடக்கக் கூடிய காரியத்துக்குத்தான் பெரியோர்கள் நீண்ட நாட்களாயினும் முயற்சி செய்வார்கள். இயலாத செயலில் அறிவுடையோர் ஈடுபட மாட்டார்கள்.



# கந்தன் கருணை

திருமுருக கிருபானந்தவாரியார்

" நெடிது பற்பகல் செல்லினும்
   நிரம்புவ தொன்றை
இடை விடாமலே முயன்றுபெற்
   றிடுகின்ற தியற்கை;
உடல்வ ருந்தியும் தங்களால்
   முடிவுறு ஒன்றை
முடியு மீதெனக் கொள்வது
   கயவர்தம் முறையே "

"அப்பா! வலிமை மிக்க புதல்வர்களை இழந்து விட்டீர்கள். உங்களுக்கும் எனக்கும் குறி பார்த்து நிற்கிறான் இயமன். போர் என்றால் புறம் கொடுப்பவன் அல்லன் நான். இன்று உங்களிடம் இப்படியெல்லாம் பேசுவதால் போருக்கு அஞ்சினேன் என்று எண்ணிவிடாதீர்கள். நீங்கள் இன்னும் பல்லாண்டு பல்லாண்டு வாழ வேண்டும் என்னும் ஆசையால் இவற்றைச் சொன்னேன். தேவரைச் சிறை விடுத்து உய்வு பெறுவோம்" என்று கூறினான்.

சூரபன்மனுக்கு அழிவு காலம் நெருங்கி விட்டபடியால் அறிவு பிறக்க மறுத்தது. பானுகோபன் கூறியவற்றைக் கேட்டுச் சினமே யடைந்தான் சூரபன்மன். "இந்த உலகில் நிலைத்து நிற்கக் கூடியது புகழ் ஒன்றுதான். இப்பொழுது நான் எதிரிகளுக்குப் பயந்து தேவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தால் என்னை யார் மதிப்பார்கள்? சூரன் என்று பேர் பெற்ற நான் என் சூரத்தனத்தை ஒருபோதும் இழக்க மாட்டேன். பிடித்த சிறையை ஒருபோதும் விடமாட்டேன். நிலையற்ற வாழ்வை எண்ணி அழியாப் புகழை இழந்துவிட மாட்டேன். உயிரை விட்டாலும் விடுவேனே யன்றி அதிகாரத்தை விட மாட்டேன். மகனே! நீ போருக்கு அஞ்சி விட்டாய். நீ உன் வீடு சென்று நிம்மதியாய் உறங்கு. நானே போருக்குச் செல்கிறேன்" என்றான் சூரபன்மன்.

'சரி, இது விதியின் தவிர்க்க முடியாத போக்கு. தந்தையைத் தடுப்பது சாத்தியமல்ல' என்று எண்ணிய பானுகோபன், தந்தையுடன் உறுதுணையாக நின்று போர் புரிய முடிவு செய்து கொண்டான்.

"அப்பா! நான் அறிவில்லாமல், ஏதேதோ கூறி விட்டேன். அந்தப் புன்மொழியை மனத்தில் கொள்ளாமல் பொறுத்தருள வேண்டும். தாங்கள் இப்போது போருக்குச் செல்ல வேண்டாம். நானே சென்று நம் நகரத்தை அழிக்கும் பூத கணங்களையும், வலிமை மிக்க வீரவாகு தேவரையும் வெல்ல முயல்வேன்" என்று கூறிப் புறப்பட்டான்.

பானுகோபன் பொன் தேரில் ஏறிப் போருக்குப் புறப்பட்டான். நால்வகை அவுணச் சேனைகளும் வந்து சூழ்ந்தன. போர்ப் பறைகள் முழங்கின. தேர்களில் ஏற்றியிருந்த கொடிகள் சூரிய மண்டலத்தை மறைத்தன. போர்க்களத்தை யடைந்த பானுகோபன் அங்கே இறந்து கிடந்த தம்பியரைக் கண்டு எல்லையில்லாத துன்பமுற்றான். துயரம் வெஞ்சினமாயிற்று. "பூதர்களையும் வீரவாகுவையும் கொல்வேன்" என்று சபதம் கூறினான்.

அவுண சேனைகளும் பூதசேனைகளும் போர்க் களத்தில் ஒன்றோடொன்று எதிர்த்து அமர் புரிந்தன. அவுணர்கள் அழிவதைக் கண்ட பானுகோபன் சினமுற்றுச் சரமழை பொழிந்து பூதர்களைச் சின்னாபின்னம் செய்தான். பூதர்கள் மனம் பதைபதைத்துத் தோற்று ஓடினார்கள்.

வீரவாகு தேவர் முருகவேளைத் தியானித்து முன்னணிக்கு வந்து சேர்ந்தார். வில்லை வளைத்துக் கணை மழை பொழிந்து அவுணச் சேனைகளை யழித்தார். அதைப் பார்த்த பானுகோபன் வீரவாகு தேவர் திருமுன் வந்து, "தூதனே! உன்னைக் கொல்வதாகச் சபதம் செய்து வந்திருக்கிறேன். நீ இங்கிருந்து உயிருடன் திரும்பிச் செல்ல முடியாது" என்று சூளுரைத்து ஆயிரம் கணைகளை விடுத்து அவர் மார்பைத் துளைத்தான். அதனால் சிறிது கிலேச முற்ற வீரவாகு தேவர், பானுகோபன் புயத்தில் ஆயிரம் கணைகளை விடுத்தார். பானுகோபன் நூறு கணைகளை விடுத்து வீரவாகு தேவரின் வில்லைத் துணித்தான். வீரவாகுதேவர் ஒரு வேலாயுதத்தை எடுத்துப் பானுகோபன் நெற்றியை நோக்கி எறிந்தார். பானுகோபனின் நெற்றியைத் துளைத்தது வேல். ஒரு கணம் பானுகோபன் அறிவிழந்து நின்றான். வீரவாகு தேவர் வாயு, அக்கினி, சூரியன், பிரம்மன், விஷ்ணு அஸ்திரங்களை ஏவினார். பானுகோபனும் அதே தெய்வப் படைக்கலங்களை ஏவி அவற்றின் போக்கை மாற்றினான்! 'மாயையினாலேயே வீரவாகு தேவரை வெல்ல வேண்டும்' என்று கருதி, வீரவாகு தேவருக்கு நாற்புறமும் தேருடன் மாயமாக மறைந்தே சுற்றி வந்து கணை மழை பொழிந்தான். வீரவாகு தேவர் ஞானாஸ்திரத்தை விடுத்தார். ஞானம் வந்தவுடன் மாயை தானே ஒழிந்தது. பானுகோபன் மாயை ஒழிந்து விண்ணில் வெளிப்பட்டு நின்றான்.

அவனை நோக்கிய வீரவாகு தேவர் "வஞ்சகனே! இனி நீ என்னிடமிருந்து தப்ப முடியாது. உன்னை நான் இங்கேயே கொல்வேன்" என்று கூறித் தேருடன் ஆகாயத்தில் சென்று கணைகளைச் சொரிந்தார். நீரும் நெருப்பும் மாறிப் போராடுவது போல் இருவரும் போர் செய்தார்கள். அவர்களுடைய தேர்கள் இரண்டும் ஓர் இமைப் பொழுதினுள் ஆயிரத்து நூறு கோடி சாரிகைகள் திரிந்தன. அவர்கள் விடுத்த பாணங்கள் உலகெங்கும் திரிந்தன. இவர்களுடைய போரால் கடல்கள் வற்றின; மேகங்கள் கரிந்தன; திக்கஜங்கள் எரிந்தன; உடுக்கள் பொரிந்தன; அண்டங்கள் வெடித்தன. அமரரும் ஏனோரும் இறும்பூதுற்று. "இவரைப் போல் போர் செய்தவர் யாவருளர்? இவருக்கிணை யாவருளர்?" என்று புகழ்ந்தார்கள்.

பானுகோபன் கடும் கோபம் கொண்டு பிரம்மன் முன்னாளில் தனக்கு அளித்த வேற் படையை யெடுத்து விடுத்தான். அதனைத் தடுப்பதற்காக



# கேன்சரின் அடையாளம் என்ன?

கடகராசியைக் குறிக்கும் நண்டு. ● ஆனால், நாம் இங்கு கேன்சர் எனும் புற்றுநோய்பற்றிக் கூறப்போகிறோம். இந்தியாவில், ஆண்டு தோறும் 2,00,000க்கும் மேற்பட்ட மக்கள் இந்தப் பயங்கர நோய்க்கு இரையாகின்றனர். இந்த புற்றுநோய்க்கு பல அடையாளங்கள் உண்டு. அவற்றில் பல போலியானவையாகும். உடலிலுள்ள ஒரு வகையான செல்கள், தடுக்க இயலாதபடி மிகப் பெருமளவில் பெருகி, முக்கியமான செல்களை அவை அழித்து விடுகின்றன. இதனால் புற்றுநோய் உண்டாகிறது. இது ஏன் நேரிடுகிறது என்பது யாருக்கும் தெரியாது. முன்னெச்சரிக்கை எடுத்துக்கொள்ளும் அளவிற்கு எந்தவிதமான வலியும் தெரிவதில்லை. ● புற்றுநோய்களைக் கண்டுகொள்ள, அதன் அபாய அறிகுறிகளை விழிப்புடன் கவனிக்கவேண்டும். ஆரம்ப நிலையிலேயே சிகிச்சையை மேற்கொண்டால் புற்றுநோயைக் குணப்படுத்த முடியும். இல்லையெனில் அது உயிருக்கே ஆபத்தை விளைவிக்கும். ● புற்றுநோயினின்றும் உங்களைக் காத்துக்கொள்ள கீழே உள்ளதைக் கற்றறிந்து வைத்துக் கொள்ளுங்கள், உங்களுக்கு உதவும்.

| இந்தியாவில் காணப்படும் புற்று நோயின் பொதுவான வகைகள் | அபாய அறிகுறிகள். |
|---|---|
| 1. கன்னமும் நாக்கும் | சிறு ரணங்கள் அல்லது காலிஃப்ளவர் போன்ற வளர்ச்சி. |
| 2. தொண்டை | தொண்டையில் ஏதோ ஒரு வெளிப்பொருள் சிக்கிக்கொண்டிருப்பது போன்ற ஒரு உணர்வு. விழுங்கவோ, சுவாசிக்கவோ சிரமப்படுதல். குரலில் ஒரு வித மாற்றம். |
| 3. மார்பு | கட்டி இருத்தல். அதனுள் வலியில்லாமலும் இருக்கலாம். |
| 4. கருப்பை | வழக்கத்திற்கு மாறாக இரத்தப்பெருக்கு. குறிப்பாக பெண்களுக்கு மாதவிலக்கு நின்றபின். |
| 5. வயிறு | திடீரென்று பசியாமை அல்லது அடிவயிற்றில் வலியிருத்தல் அல்லது இரத்த வாந்தி எடுத்தல். |
| 6. எலும்புகள் | வழக்கத்திற்கு மாறாக வீக்கம்—வலியில்லாமலும் இருக்கலாம். |
| 7. நுரையீரல் | தொடர்ச்சியான கனைப்பு அல்லது காரணமின்றி இருமுதல். எச்சிலில் இரத்தம் கலந்திருத்தல். |
| 8. பெருங்குடல் | மலம் கழித்தலில் ஏதேனும் மாற்றம் இருத்தல். |
| 9. புரோஸ்ட்ரேட் கிளாண்ட் | சிறுநீரில் இரத்தமிருத்தல். |
| 10. கண் | பார்வை மங்குதல் அல்லது கண்ணிலுள்ள மணியில் பொன்னிறம் அல்லது வெண்ணிறம் தென்படுதல்-குறிப்பாக குழந்தைகளுக்கு. |
| 11. தோல் | மரு அல்லது மருவில் ஏதேனும் மாற்றமிருத்தல் அல்லது ரணம் தொடர்ந்திருத்தல். |

**செய்ய வேண்டியது என்ன?**

1. உடனே மருத்துவரை நாடவும்.
2. 45 வயதிற்குப்பின் எந்த விதமான வலியின் அறிகுறி தோன்றினாலும் உடலை அடிக்கடி பரிசோதித்துக் கொள்ளவும்.
3. புகையிலை பிடிக்க வேண்டாம். புகையிலை எரியும்போது, அது உண்டாக்கும் அதிகச் சூட்டினால், 3,4-பென்ஸைப்ரைன் எனும் ஒரு வித இரசாயனம் உண்டாகிறது. புற்று நோயை உண்டாக்கும் பெரும் சக்தி வாய்ந்த பொருள் இது.
4. சுண்ணாம்பு மற்றும் புகையிலை கலந்துள்ள தாம்பூலத்தைத் தவிர்க்கவும்.



**வாழ்க்கை ஒப்பற்றது. அதனைக் காப்பீர் ஆயுள் இன்சூரன்சு மூலம்**

ASP-LIC-HS-11

# டுவின் டஸ்கர் பாப்ளின்



மேன்மையான தயாரிப்பு - நாள்பட உழைக்கும் - விலையிலும் சிக்கனமானது! டுவின் டஸ்கர் பாப்ளின் பார்வைக்குப் பகட்டானது - உழைப்பில் நீடித்தது. எவ்வளவு சலவை செய்தாலும் அதன் நெசவின் நேர்த்தியை இழக்காதது.

டுவின் டஸ்கர் பாப்ளின் இரண்டு வகைகளில் கிடைக்கிறது.

**மதுரை மில்ஸ் கம்பெனி லிமிடெட்**, மதுரை

உயர்ந்த ரக நூல்களுக்கு உலகப் பிரசித்தி பெற்றது

மானேஜிங் ஏஜண்டுகள் : ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

ஹார்வி



டுவின் டஸ்கர்

பாப்ளின் - டிரில் - கேம்பிரிக்



மதுரையைச் சேர்ந்த ஹார்விஸ்

SHB3/HMC-26A TAM.

வீரவாகு தேவர் ஆயிரங் கோடி பாணங்களை ஏவினார். அந்தப் பாணங் களை அழித்த பிரம்மாஸ்திரம் விண் வழியே விரைந்து வந்தது. வீரவாகு தேவர் கந்தக் கடவுளைத் தியானித்து சிவபெருமான் தந்த வாட் படையை எடுத்து வீசினார். அது பிரம்மாஸ் திரத்தை வீழ்த்தியதைக் கண்டு, தேவர்கள் ஆனந்தக் கூத்தாடினார்கள். வீரவாகு தேவர் வாளை உறையில் இட்டார். பானுகோபன் வாளை உருவிச் சிங்க ஏறுபோல் பாய்ந்து வீரவாகு தேவரின் வில்லைத் துணித் தான்.

வீரவாகு உருத்திரரைப் போல் உத் தண்டமாகச் சினந்தெழுந்தார். தமது வாளை எடுத்து எதிர்த்துப் போராடினார். அக்கினியும் இயமனும் போராடு வதைப் போல் அவர்கள் இருவரும் வாட் போர் செய்தனர். கால் கை களைத் துணிக்கக் குறி வைத்து வாளை வீசினார்கள்: சூறைக் காற்று போல் சுற்றினார்கள். பானுகோபன் தான் கற்ற வாள் வித்தையின் வலியால் வீரவாகு தேவருடைய வாளை விலக்கி அவருடைய தோளில் வெட்டினான். அவருடைய தோளினின்றும் உதிர வெள்ளம் பெருகியது. பானுகோபன் செருக்குடன் நின்றிருந்தான். வீரவாகு தேவர் வேலாயுதக் கடவுளைத் தியானித்து வலிமை முழுவதையும் திரட்டி வாளை வீசி பானுகோப னுடைய வலத் தோளைத் துணித் தார். வெட்டுண்ட வலக்கையோடு சேர்ந்து வீழ்கின்ற வாட் படையை இடக் கையாற் பறித்த பானுகோபன் அடங்காத கோபத்துடன் எதிர்த்துப் போர் செய்ய முயன்றான். வீரவாகு தேவர் அவனது இடத் தோளையும் வெட்டினார். பானுகோபன் மாயப் படையை விட நினைத்தான்.

நினைப்பு நினைப்பாகவே முடிந்ததே யன்றி நடப்பாக மாறவில்லை. வீர வாகு தேவர் பானுகோபனது தலையை அனுயாசமாக அறுத்தெறிந்தார். பானுகோபனுடைய தலையும் புயங் களும் உடம்பும் மண்ணில் வீழ்ந்தன. அளவற்ற ஆற்றல் பொருந்திய மாவீர னின் உடல் ஆற்றலை யெல்லாம் இழந்து வெறும் சவமாக மண்ணில் சாய்ந்தது. மன்னுசை கொண்டவன் மண்ணோடு மண்ணுயினான். கதிரவனை யும் கலங்கச் செய்த அவுண குலச் சிம்மத்தின் அழிவு கண்டு முனிவரும் தேவரும் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினர். வீரவாகு தேவர் மீது பூமழை பொழிந் தனர். அரக்கர் குலச் சூரியன் அஸ்த மித்தவுடன் கதிரவனும் பன்னுட்களாக உள்ளூறக் கொண்டிருந்த கவலை தீர்ந்து கனன்று ஜொலித்தான். (தொடரும்)

# வேட்க்கை ஒரு சாதனை

ஸரோஜா ராமமூர்த்தி

நானும், ராஜியும் மயிலையில் கபாலீசுவரர் கற்பகாம்பாளைத் தரிசனம் செய்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தோம். பன்னிரண்டு ஏ-நம்பர் பஸ்ஸில் குளத்தங்கரையில் ஏறினவர்கள் அபிராமபுரம் தாண்டும் வரை பேசவில்லை. தெருவில் நிகழும் சம்பவங்கள், ஓடும் வாகனங்கள், வரிசை வரிசையாக நிற்கும் பெரிய பங்களாக்கள் எதுவுமே என் கவனத்தை ஈர்க்கவில்லை. இவைகளுக்கெல்லாம் மேலாகக் கற்பகாம்பிகையின் தெய்விக அருள் நோக்கின் நெகிழ்ச்சியில் என் உள்ளத்தில் ஏதோ ஒன்று நிரம்பி வழிந்து கொண்டிருந்தது 'ஆனந்தமா, திருப்தியா?' எது என்று என்னால் விண்டு சொல்ல முடியவில்லை.

ராஜி திடீரென்று பேச ஆரம்பித்தாள்.

''ரொம்ப நேரம் ஆகிவிட்டது. மாம்பலத்தில் பானு வீட்டில் போய்ச் சாப்பிட்டு விடுவோம்... என்ன?'' என்று கேட்டாள் என்னிடம்.

நெற்றியெங்கும் கவிந்திருந்த நரைத்த கூந்தலின் நடுவே பளிச்சென்று குங்குமம் துலங்கியது. வகிட்டில்கூடத்தான். ராஜி என்னைவிட ஐந்தாறு வயது மூத்தவள். வாழ்க்கையின் ஆரம்பத்தில் நானும், அவளும் அரிச்சுவடி பயில ஒன்றாக நடை பயின்றவர்கள். காலேஜ் கிலேஜ் என்று எங்கள் இருவரையுமே எங்கள் பெற்றோர் எட்டிப் பார்க்க விடவில்லை. ஆனால் ராஜி சரளமாக ஆங்கிலம் பேசுவாள். பழக்கம்தான் காரணம். பத்தாவது வரை படித்தவர்கள் நன்றாக ஆங்கிலம் பேச முடியும், பிழையின்றி எழுத முடியும் என இருந்த காலத்தைப் பற்றிச் [illegible]



இருவருக்கும் திருமணம் நடந்தது. அவள் தெற்கேயும், நான் வடக்கேயும் குடித்தனம் நடத்தப் போய் விட்டோம். இருவரும் நான்கைந்து ஆண்டுகள் வரையில் சந்திக்கவே யில்லை. இருந்தாலும், எங்கள் நட்பு மனத்தளவில் வளர்ந்து கொண்டு தான் இருந்தது. நான் அடுத்தடுத்து மூன்று குழந்தைகளுக்குத் தாயான அப்புறம் ஒரு தடவை ராஜியிடமிருந்து கடிதம் ஒன்று வந்தது. மகப் பேற்றுக்காகத் தான் தவம் இருப்பதாகவும், அந்தப் பாக்கியம் தனக்குக் கிட்டவில்லை என்றும் எழுதி யிருந்தாள்.

என்னிடம் வெகு காலமாக வைத்திருந்த பஞ்சலோகத் தாலான சந்தான கோபாலனை (விக்கிரகம்) அவளுக்கு அனுப்பி வைத்தேன்.

பிறகு ராஜி ஐந்தாறு குழந்தைகளுக்குத் தாயாகி விட்டாள். முதல் பிள்ளை தான் மாம்பலத்தில் புதிதாகத் தனிக்குடித் தனம் செய்கிறான் மனைவியுடன்.

தாய்மை அடைந்திருக்கிறோம் என்கிற பெருமையில் திளைத்திருந்தாள் ராஜி. முதல் குழந்தை பிறந்தது. ஆண் குழந்தை. குழந்தை நன்றாகத் தான் இருந்தான். அவள் பிரசவித்த அன்று என் அம்மா ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்த்து விட்டு வந்தாள்.

''ராஜியின்குழந்தை எப்படி யிருக்கிறது?'' என்று விசாரித்தேன் நான். அப்பொழுது பிரசவத்துக்காகத்தான் ஊருக்கு நானும் வந்திருந்தேன்.

''என்னமோ இருக்கிறது. மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் ஒன்றும் தெரியவில்லை. உற்றுக் கவனித்தால் மாங்காய்த்தலை மாதிரி இருக்கிறதடி. குழந்தையின் பார்வையும் ஒன்றரைக் கண் மாதிரி இருக்கு..''

''எல்லாக் குழந்தைகளும் மூனு மாசம்வரை அப்படித்தான் பார்க்கிறதுகள். இந்த உலகத்தின் வாசனை ஏற்பட்டு விட்டால் பார்வையில் என்ன, பேச்சிலே, நடையுடை பாவனைகளில் கூடநேராகவந்து விடும்......'' என்றேன் நான்.

குழந்தைக்குத் தொட்டில் போட்ட அன்று நானும் போயிருந்தேன். அம்மா சொன்னது சரிதான். தலை கொஞ்சம் சிறியது. பார்வையும் ஒன்றரைதான். ராஜியின் பெருமைக்குள், பூரிப்புக்குள் அவை பிடிபடவில்லை. குழந்தையைப் பார்த்துப் பார்த்து மகிழ்ந்



தாள் அவள். பெயர் சந்தான கோபாலன் என்று வைத்துவிட்டு, பாலா, பாலு என்று அவனை அழைக்க ஆரம்பித்தார்கள்.

பிறகு, நானும் அவளும் சந்திக்கவில்லை. என் கணவர் அந்த நாளிலேயே கொஞ்சம் முற்போக்கானவர். எனக்கு நான்காவது பிரசவம் ஆனவுடன் 'திட்டமிட்ட குடும்பம்' என்று இந்த நாளில் கொண்டு வந்திருக்கும் திட்டத்தை அந்த நாளிலேயே மேற்கொண்டு விட்டார். நானும் பிறந்தகம் போவதை நிறுத்திக் கொண்டேன்.

ராஜிக்கு அடுத்தடுத்து ஐந்தாறு பிறந்தனவாம்; அதுவும் சட்டும் சவலையுமாக. அவைகளை வைத்துக் கொண்டு அவள் ரொம்பவும் கஷ்டப்படுகிறாளாம். ''தவமிருந்து பெற்றானே, அந்தப் பிள்ளைக்கு ஒரு சமர்த்தில்லை. சதா வாயில் 'ஜொள்ளு'

கொட்டுகிறது. 'அம்மா, பாத்தி, தாத்தா, வாத்தாம், வோணும்' இவைதான் அவனுடைய பேச்சுக்கள். 'பள்ளிக்கூடமே அனுப்பவில்லையடி. ராஜி எப்படியாகிவிட்டாள் தெரியுமா? தலையெல்லாம் குப்பென்று நரைத்துப் போய்ப் பார்க்கச் சகிக்கவில்லை'' என்றாள் அம்மா, கங்கையில் புடவையை அலசியபடி. நாங்கள் அப்போது வாரணாசியில் இருந்தோம். குபீரென்று கண்ணீர் சூடாகப் பெருகிக் கங்கையுடன் கலக்க நான் பேச்சற்று நின்றேன். தவமென்றால் சாதாரணமாக இல்லை. சர்க்கரை இல்லாமல் காப்பி குடிப்பாள். இனிப்பே சாப்பிடாமல் இருந்தாள். தரையை மெழுகிப் பின்னும் கைகளைக் கட்டிக் கொண்டு வாயால் சாதத்தைக் கௌவி எடுத்துச் சாப்பிடுவாள். எல்லாம் இந்த அழகான பிள்ளை பிறக்க வேண்டுமென்றுதானு?

அன்னபூர்ணேசுவரியின் கோயிலை வலம் வந்து கொண்டே என்னென்னவோ நினைத்துக் கொண்டேன். தேவியின் அருள் ஒழுகும் முகத்தைப் பார்த்தவுடன், அவள் ஏன் இப்படித் தன்னை நம்பிய பேதை ஒருத்தியைச் சோதித்து விட்டாள் என்பது புரியாமல் இல்லை. கடவுளின் தன்மை, அவன் செயல் யாருக்குப் புரிகிறது ?

''அப்புறம் பிறந்த குழந்தைகள் இதைப் போல இல்லை. சமர்த்தாகப் படிக்கின்றன. இருந்தாலும் மூத்தது இப்படியாகிவிட்டதே என்று மாய்ந்து போகிறாள். 'எப்படியாவது அவனும் ஒரு மனுஷன் ஆகிவிட வேண்டும். அவ்வளவுதான் மாமி' என்றாள் என்னிடம். 'கவலைப்படாதேடி. பகவானுடைய அநுக்கிரகத்தால் எல்லாம் நன்றாக இருப்பான்' என்றேன்......' ''

அம்மா வீட்டுக்கு வரும் வழியில் பேசிக் கொண்டே வந்தாள்.

வாரணாசியில் எங்களுடன் இரண்டு மாதங்கள் தங்கிவிட்டுப் போனவள் அப்புறம் வரவில்லை. அவள் காலம் ஆகிவிட்டது. இந்த அவசர யுகத்தில் யாரைப் பற்றி நினைக்கப் பொழுதிருக்கிறது?

என்னுடைய குழந்தைகள் வளர்ந்தார்கள். அவர்களுடைய படிப்பு, கல்யாணம் என்று எங்களைப் பற்றியே கவலைப்பட்டுக் கொண்டோம். எங்கேயாவது ஓர் அசட்டுக் குழந்தையைப் பார்த்தால் ராஜியின் பிள்ளை பாலுவின் நினைவு வரும்.

'இப்படியும் அப்படியும் தலையைச் சாய்த்து வாயில் ஒழுகும் எச்சிலுடன் பேந்தப் பேந்த விழிக்கும் அந்தப் பிள்ளை. 'என்ன பரிதாபம் இது?' என்றுதான் மனத்துக்குள் குமைந்து போவேன்.

ராஜியின் பெண் கல்யாணத்துக்கென்று திருமணப் பத்திரிகை வந்தது. பெரிய பிள்ளையைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை. ''அசடுதான் ! அவள் தலையெழுத்து இப்படி ஒரு பிள்ளையைப் பெற்றாள்!'' என்று என் கணவர் கூறினார் அங்கலாய்ப்புடன்.

என்னதான் வடக்கே பல வருஷங்கள் வேலையாக இருந்தாலும் பென்ஷன் வாங்கிக் கொண்ட பிறகு ஊரோடு போய் இருப்போமே என்று தோன்றியது. கிராமத்திலே அம்மாவுக்குச் சொந்தமான மனையில் அவர் பாணியில் ஒரு சின்ன 'காட்டேஜ்' கட்டிக் கொண்டோம். வீட்டைச் சுற்றிச் செடி கொடிகள் போட்டார். ஏதேதோ விவசாயப் புத்தகங்களை வைத்துக் கொண்டு ஆராய்ந்து செடிகள் வளர்ப்பதில் அவர் பொழுது போய்க் கொண்டிருந்தது.

இந்தச் சந்தர்ப்பத்தில்தான் ராஜி கிராமத்துக்கு வந்தாள். நாங்கள் அந்த ஊரில் இருக்கிறோம் என்று கேள்விப்பட்டுத்தான் வந்தாளாம். அவள் பிறந்தகத்தில் யாரும் இல்லை. அவளுடைய தமையன்கூட வீட்டை விற்று விட்டான். பழைய தலைமுறையின் பாசத்தில் வளர்ந்து ஓலி கூட்டிய வீடு புதிய தலைமுறையினரால் ஒதுக்கப்பட்டுச் சிதிலமாகி இடியும் நிலைக்கு வந்து விடவே விற்கும்படியாயிற்று. யாரோ ஒரு கணக்குப் பிள்ளை வாங்கி ரிப்பேர் செய்து கோயிலுக்குத் தருமமாக எழுதி வைத்திருந்தார்.

நான் அந்தக் கிராமத்துக்கு வந்த மறுதினமே ராஜியின் வீட்டைப் போய்ப் பார்த்தேன். வாசலில் சாய்மானத் திண்ணைகள். அந்தத் திண்ணைகளில் நானும், அவளும், ஊர்ச் சிறுமிகளும் நிலாச் சோறு சின்னச் சின்னக் குடுவைகளில் சமைத்திருக்கிறோம். பொம்மைக் கல்யாணம் பண்ணியிருக்கிறோம். நான் பிள்ளை வீட்டைச் சேர்ந்தவள். சம்பந்திச் சண்டை, நலுங்கு, அது இது எல்லாம் உண்டு.

வாயைப் 'பம்'மென்று வைத்துக் கொண்டு நாயனம் ஊதுவாள் ராஜி. தலை வேகமாக ஆடும்...... அந்தத் திண்ணையை ஒட்டியிருந்த நிலைப்படியின் அருகே ஒரு சாஸனம் காணப்பட்டது. அதை வாங்கிய கணக்கர் தமக்குச் சந்ததியில்லாமையால் ஸ்ரீ ராமலிங்கேசுவரர் தேவஸ்தானத்துக்கு மான்யமாக அளித்து விட்டதாகவும், அதில் வரும் வாடகையைக் கொண்டு எண்ணெய் வாங்கித் திருவிளக்கேற்றும் திருப்பணியைக் கோயிலார் மேற்கொள்ள வேண்டும் என்றும் அறிவித்திருந்தார்.....

வீட்டில் குடியிருந்தவர்கள் நாலு மாத வாடகை பாக்கி. எனவே, ஸ்ரீ ராமலிங்கேசுவரர் அநேகமாக இருளில் மூழ்கியிருந்தார்.

பல வருஷங்களுக்கப்புறம் வந்திருக்கிறவளை 'எங்கே வந்தாய்' என்று கேட்க எனக்கு மனசு வரவில்லை. குடும்பத் தொல்லைகளிலிருந்து விடுபட ஒரு மாறுதலுக்காக வந்திருக்கலாம். வேறு ஏதாவது காரணம் இருக்கலாம். பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகியிருக்கும். பணமுடையாக இருக்கலாம். கடன் கேட்க வந்திருக்கலாம்.

இருவரும் சாப்பிட்டு விட்டு ஊஞ்சலில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தோம். ராஜி அரைக் கவுளி வெற்றிலையைக் காலி செய்து விட்டாள். கண்டினால் ரத்தம் தெறித்து விடும் போல் நல்ல சிவப்பு அவள். ஒரு காலத்தில் உதடுகளும் செம்பவழம் போல் இருந்தன. இப்பொழுதும் அவள் அழகு குலையவில்லை. பாவம், அந்தக் கண்களில்தான் ஏக்கம். அதுதான் தெரிந்த விஷயமாயிற்றே!

இப்படியும் அப்படியும் தலையைச் சாய்த்து வாயில் ஒழுகும் எச்சிலுடன் பேந்தப்

பண்டிட்
டி. கோபாலாச்சார்லுவின்

# ஜீவாம்ருதம்

**ஆரோக்யத்திற்கும் பலத்திற்கும்**

ஆயுர்வேதாஸ்ரமம் லிமிடெட். மதராஸ்-17

---

உற்சாகமளிக்கும் குளுமையான புத்துணர்ச்சியை அனுபவிக்க

## தினமும் கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீமினால் க்ஷவரம் செய்துகொள்ளுங்கள்!




அந்த அதிகாரி போன்ற, எடுப்பான தோற்றம்...அதற்கு உறுதுணையாயிருப்பது கால்கேட் மென்தாலேடெட் ஷேவிங் க்ரீம். ஏனெனில், கால்கேட் மென்தால் சேர்க்கப்பட்டுள்ளதால், அது கூடிய குளுமையான க்ரீம் போன்ற வேதச் சுத்தமான சுகமுள்ள க்ஷவரத்தைப் பெற சருமத்தை பதமாயும் தாடியை மிருதுவாயும் ஆக்குகிறது. நீங்கள் எப்பவும் கண்டிராத, உற்சாகமளிக்கும், குளுமையான புத்துணர்ச்சியுடன் கூடிய க்ஷவரத்தை அளிப்பது கால்கேட் ஒன்றுதான்!




மிக சிக்கனமானது கால்கேட் ஷேவ் ஸ்டிக் க்ஷவரத்தில் சிக்கனத்திற்கு பிரபலமானது

வெள்ளை

# டெட்

சலவையின் மேன்மை
வெண்மையுடன் தூய்மை




வெள்ளை டெட் பவுடரினுல் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பாழாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

***ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட் பம்பாய்***

பேத்த விழிக்கும் அந்தப் பிள்ளே! ராஜி எப்படி உற்சாகமாக இருக்க முடியும்?

வெற்றிலையைச் சுவைத்துக்கொண்டே ராஜி கேட்டாள்: ''எங்கே வந்தேன்னு நீ கேக்கலே இல்லியே ஸரோ!''

''கேக்கலேன்னு உனக்குக் குறையா இருக்கா ராஜி? நீ வந்திருப்பதே என் மனசை நெறஞ்சு இருக்கிறது... எத்தனையோ விஷயங்கள் மனசில் கிடந்து திணறுகிறது. பேசத்தான் தெரியலே. ஆனாலும், உனக்கும் குறை இருக்கப்படாது பார்..... எங்கே வந்தே ராஜி?'' என்று கேட்டு விட்டுச் சிரித்தேன் நான்.







''கிழவியாகியும் குறும்புத்தனம் போகலே போடி உன்னைவிட்டு.....'' என்றவள், ''பாலுவுக்குப் பெண் பார்க்க வந்திருக்கேன்டி. மேலத் தெரு சுப்பண்ணு மாமா பேத்தியின் ஜாதகம் வந்துது..... பொருத்தமா இருந்தது. முதல்லே நான் வந்து பார்த்துட்டு வரேன்னு அவர்கிட்டே சொல்லிண்டு வந்திருக்கேன்...... வாயேன் நீயும்!''

''என்னது? பாலுவுக்குப் பெண் பார்க்க வந்திருக்கியா ?''

''ஆமாண்டி. அவனும் ஒரு மனுஷன் தானே? அசடா இருந்தாலும் ஆசாபாசங்களுக்கு உட்பட்டவன்தானே? பாலு சம்பாதிக்கிறான்டி. எலக்டிரிக் ஒயரிங் பண்ணறான். மாசம் நூறு, நூற்றி இருபது கிடைக்கிறது. பணம் சேர்த்து வைச்சிருக்கான்......''

''ஹூம்.....'' என்றேன் அலுப்புடன். அசட்டுப் பிள்ளைக்கு என்ன கல்யாணம் வேண்டியிருக்கிறது என்பது என் குரலிலிருந்து அவளுக்குப் புரிந்து விட்டது.

''பாலுவுக்கு அடுத்தவன் ஜக்கு. அவனுக்குக் கல்யாணமாகி மூன்று குழந்தைகள் இருக்கு. தியாகுவுக்கும் போன வருஷம் கல்யாணம் ஆச்சு. பார்வதம், காமு எல்லோரும் புக்ககம் போயாச்சு..... இவன் ஒருத்தன்தான் பாக்கி. நாங்க இவனுக்குக் கல்யாணம் பண்ணணும்னு இல்லே. அவனுந்தான் கேட்டான் என்னிடம்.''

நான் அவளையே வியப்புடன் பார்த்தேன்.

''தியாகுவுக்காகப் பெண் பார்த்து விட்டுப் புரசைவாக்கத்திலிருந்து வந்து கொண்டிருந்தோம். வீட்டை விட்டு எங்கு போவதானாலும் பாலுதான் வீட்டைப் பார்த்துக் கொள்வான். அன்று எல்லாவற்றையும் போட்டது போட்டபடி கிளம்பினோம். 'பாலு! வேலைக்காரி தாயி வருவாள். கொஞ்சம் பாத்திரங்களை ஒழித்துப் போட்டுத் தேய்த்து வாங்கி வை. பால்காரன் வந்தால் பாலை வாங்கி வை. முடிஞ்சா இன்னியோட ரேஷன் கடைசித் தேதி. அதையும் சைக்கிளில் போய் வாங்கி வந்துவிடு........' என்று கூறிவிட்டுக் கிளம்பினேன். பாலுவின் முகத்திலிருந்து எனக்கு ஏதும் புரியவில்லை. கற்சிலைபோல் நின்று அமைதியாகக் கேட்டவன், முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே போய் விட்டான். திரும்பும் போது வேலைக்காரி தாயி மட்டும் வீட்டில் இருந்தாள். வீடு திறந்து கிடந்தது. 'பாலு எங்கேயடி' என்று கேட்டால், 'அதையேன் கேட்கறே போ. அந்தப் புள்ளையாண்டான்தான் உங்களுக்கு எல்லா வேலைக்கும் ஆளா அம்மா? தம்பி குடும்பம், தங்கச்சிங்க குடும்பம்னு எல்லாருக்கும் மூட்டை சுமக்க என்னாலே முடியாது தாயி. நானும் ஒரு மனுசன்னு அப்பாவுக்குத் தெரியலே. அம்மாவுக்குத் தெரிய வேணும்?...... நான் சம்பாதிக்கலையா? கல்யாணம் கட்டினால் குடும்பம் நடத்த மாட்டேனா' என்று கத்திப்பிட்டு வெளியே போயிடிச்சி......'' என்றாள் தாயி.

இதயத்தின் ஆழத்தில் பாலு ஓர் அசடு என்று ஏற்பட்டிருந்த புண்ணை — பொருக்கேறிப் போயிருந்த புண்ணை - யாரோ கிளறி விட்டாற்போல் துடித்தேன். ஜக்குவின் மனைவியிடம் பாராமுகமாக வெடுவெடு என்று பாலு விழுந்தானே..... வீட்டுக்கு வரும் மாப்பிள்ளைகளிடம் முகம் கொடுத்துப் பேசாமல் இருந்தானே. அதற்கெல்லாம் பொருள் விளங்கிற்று.

இரவு வெகு நேரம் கழித்துப் பாலு வந்தான். அதற்கும் முன்பாக அவரிடம் அவன் மனத்தைப் பற்றிச் சொன்னேன். 'சுத்தப் பைத்தியமாக இருக்கியே! வாயிலே ஒழுகிற எச்சிலை முழுங்கத் தெரியலே. எவளடி இவனுக்குக் கழுத்தை நீட்டுவாள் இந்தக் காலத்தில்!' என்று கூறிவிட்டுப் படுக்கப் போய் விட்டார்.

பிறகு தியாகுவின் கல்யாணம் நிச்சயமாயிற்று. தஞ்சாவூரில் கல்யாணம். பாலு வீட்டுக்கே வரவில்லை. அவன் வேலை செய்யும் கண்டிராக்டரிடம் சென்று விசாரித்தோம்.

இருநூறு ரூபாய் அட்வான்ஸ் வாங்கிக் கொண்டு பழநி, மதுரை, திருச்செந்தூர் என்று க்ஷேத்ராடனம் போயிருப்பதாகச் சொன்னார். 'வீட்டில் சொல்லவில்லையா? அட கஷ்டமே! பொறுப்பு வரணும்னு அந்தப் பையனுக்கு ஒரு கால் கட்டுக் கட்டிப் போடுங்க' என்றார் அவர்.

வீட்டில் கல்யாணம். முதல் பிள்ளை வீட்டை விட்டுப் போய் விட்டான். எனக்கும் அவருக்கும் அது ஒரு கல்யாணம் மாதிரியே இல்லை. தியாகுவும் பிரமை பிடித்த மாதிரி இருந்தான். பங்காரு காமாக்ஷியிடம் வேண்டினேன். 'தாயே! இப்படி என்னைச் சோதிக்கிறாயே?' என்று....... கல்யாணம் முடிந்து திரும்பவும் நாங்கள் சென்னை வரத் தஞ்சை ரயிலடியில் உட்கார்ந்திருந்த போது திடும் என்று பானு வந்தான். மடமடவென்று திருக்கோயில்களின் பிரசாதங்களை வழங்கினான்.

''என்ன அண்ணா இப்படி?'' என்று ஆரம்பித்த தியாகுவை, ''சரித்தான்டா! இதோ பிரசாதங்களுடன் வந்திருக்கிறேனே.....'' என்று மடக்கி விட்டான்.

சென்னை செல்லும் வண்டியில் நாங்கள் சற்றும் எதிர்பாராத விதமாக நம் ஊர் மேலத் தெரு கப்பண்ணா மாமாவும், அவர் பெண்ணும் மாயவரத்தில் ஏறினார்கள். பரஸ்பரம் யோக க்ஷேம விசாரணைகள் முடிந்த பிறகு பானு கல்யாணமாகாமல் இருப்பதைப் புரிந்து கொண்டார் அவர்.

பெண் அப்படி ஒன்றும் அழகில்லை. ரொம்பச் சாதாரணம். எட்டாவது படித்திருக்கிறதாம். ஊருக்குப் போய் ஜாதகம் அனுப்பினார். ஜாதகம் பொருந்திடுத்து. பெண்ணை ரயிலில் பார்த்தாலும், முறைப்படி வீட்டில் பார்க்க வந்திருக்கேன்...... கிளம்புடி ராகுகாலத்துக்கு முந்திப் போய்ப் பார்த்துவிட்டு வரலாம்.''

யந்திரம்போல் ஏதோ நினைவுடன் அந்தத் திருமணத்தின் அவசியத்தையும், அது நிகழ வேண்டும் என்பது ஒரு நிர்ப்பந்தமாக அமைந்திருப்பதையும் நினைத்துப் பார்த்தேன். எச்சிலைக் கூட்டி விழுங்கத் தெரியாத அந்தப் பிள்ளையையும் கற்பனையில் நினைத்துப் பார்த்தேன். எதுவுமே நம் செயலில் இல்லாத போது வீணே மன உளைச்சலுக்கு ஆளாக விரும்பாமல் பெண்ணைப் பார்க்கச் சென்றோம். பெண் பிடித்து விட்டது. அதற்கென்று ஒரு மனம் இருப்பதாகவே என்னால் ஊகிக்க முடியவில்லை.

''இதோ பாரு குழந்தை! என் பிள்ளை கொஞ்சம் அசடு. முன்னே பின்னே இருந்தாலும் என்னைப் போல நீ சமாளிச்சுண்டு போகணும். அப்புறம் கண்ணைக் கசக்கக் கூடாது. ஆமாம்...'' என்று ராஜி பட்டவர்த்தனமாகப் பேசினாள். அவள் அப்படிப் பேசியது எனக்குப் பிடித்திருந்தது. அந்தப் பெண் தலையைக் குனிந்து கொண்டு மெதுவாக, ''அசடுங்கறது என்னன்னு எனக்குத் தெரிஞ்சாத்தானே? நாம எல்லோருமே ஒவ்வொரு விதத்திலே அசடுகள்தான். அவர் கூடக் கொஞ்சம் அசடாக இருப்பாராக்கும்'' என்றது. எனக்கு அந்தப் பதில் அவள் மனத்தின் ஆழத்தை உணர்த்தி விட்டது.

அடுத்த இருபத்திரண்டாம் நாள் பானு, சுந்தரி திருமணம் நடந்தே விட்டது. எனக்கென்று ராஜி பிரத்தியேகமாகக் கல்யாண பக்ஷணங்கள் அதிகமாகவே கட்டிக் கொடுத்தாள். நான் அவளுடன் வந்த வேளை தானும். ஏதேதோ சொன்னாள். பிறகு நாலு வருஷங்கள் அவர்களைப் பற்றியே ஒன்றும் புரியவில்லை.

* * *

திடும் என்று அன்று காலை ராஜி பெட்டி படுக்கையுடன் என்னை எதிர்பார்த்திருக்க மாட்டாள். சென்னையில் நடந்த ஒரு கல்யாணத்துக்கு வந்த நான் அப்படியே ராஜியின் வீட்டுக்கு வந்திருந்தேன். இருவருமாகப் புறப்பட்டுப் பானுவின் வீட்டுக்குப் போனோம்.

மாம்பலத்தில் பானுவின் வீட்டை அடையும்போது பகல் இரண்டு மணிக்கு மேலாகி விட்டது. மாமியாரைக் கண்டதும் சுந்தரி பரபரப்படைந்து போனாள். என்னையும் அடையாளம் புரிந்து கொண்டாள். அவர்கள் வீட்டு முன்புறம் மின்சாரச் சாமான்கள் அடங்கிய கடை ஒன்று இருந்தது. மேஜை அருகில் பானு உட்கார்ந்திருந்தான். ''பானுதானே இது?'' என்கிற கேள்வி என்னை அறியாமல் சற்று உரக்கவே வந்தது.

''ஆமாம் மாமி! சௌக்கியந்தானே? உள்ளே வாங்கோ...'' என்றபடி மேஜை டிராயரை இழுத்துப் பூட்டிக் கொண்டு எழும்பினான் அவன். சதா எச்சில் வழிய விட்டுக் கொண்டிருந்த அந்த உதடுகளில் ஓர் அழுத்தம், முகத்தில் பிரகாசம் எல்லாமே வந்து விட்டிருந்தன.

''இது யாரென்று தெரிகிறதா சுந்தரி?'' என்று தன் மனைவியிடம் என்னைக் காண்பித்து விசாரித்தான்.

''உக்கும்... எனக்கு எல்லாம் தெரியும். என்னைப் பெண் பார்க்க வரலையா?''

''மறந்துட்டியோன்னு பார்த்தேன்... என் மாமி! நான் இப்போ தனியா 'பிஸினஸ்' பண்றேன். முதலீடு எல்லாம் இவள் மஞ்சள் காணிலேந்துதான். இப்படி மாசம் மூந்நூறு ரூபாய் தேறும்... அம்மாவும் அப்பாவும் தனியா பல்லாவரத்துலே இருக்கா. வேண்டாம்மா எங்களோடே வந்துடுன்னு சொன்னாக் கேக்கலே. அவாளுக்குத் தனிக் குடித்தனத்து மேலே ஆசை...'' என்று தாயை நையாண்டி செய்தான் பானு.

பாங்கும், பதவிசுமான அந்தக் குடும்பத்தின் அழகிலே நான் என்னை மறந்து வைத்திருந்தேன்.

''பூஜை அறை, கூடம், வரவா போறவா உட்கார்ற இடம்...'' என்று பானு ஏதேதோ பேசிக் கொண்டிருந்தான்.

அந்தப் பெண் இன்னும் பதவிசாகத் தன்னால் ஒரு பெரிய விஷயம் சாதிக்கப்பட்டிருப்பதை மறந்து அடக்கவொடுக்கமாக உட்கார்ந்திருந்தாள்.

'இப்படி அவசரமா வந்துட்டுப் போறீயளே! பாயசத்தோடு உங்களுக்குச் சாப்பாடு போடணுமே...' என்று பானுத் தம்பதியினர் என்னைப் பார்த்துக் கூறினர்.

இலட்சிய, இலட்சணத்துடன் கூடிய ஓர் உயர்தரமான இல்லறத்தை விடவா பாயசம் இனிக்கப் போகிறது? ராஜியும் நானும் அதற்கப்புறம் பேசவில்லை.




# அஜந்தா

## டூத் பிரஷ்

அஜந்தா டூத் பிரஷ்கள் பற்களைத் துப்புரவாகச் சுத்தம் செய்வதற்கும், ஈறுகளில் இரத்த ஓட்டத்தைக் கொடுப்பதற்கும் ஏற்றபடி அமைக்கப்பட்டவை.

- மென்மையான நைலானில் செய்யப்பட்ட மழமழப்பான முனையுடைய குஞ்சங்கள்
- கிருமிகளிடமிருந்து பாதுகாப்பதற்கென, தனிப்படத் தயாரிக்கப்பட்ட ப்ளாஸ்டிக் கன்டெயினர்களில் தனித்தனியாக பேக் செய்யப்படுகின்றன

தேர்ந்தெடுப்பதற்குப் பற்பல வகைகள்

- அஜந்தா 41 • அஜந்தா 51, • அஜந்தா 26
- அஜந்தா ஜூனியர் மற்றும் அஜந்தா சைல்ட்.

ஆண்களுக்கு அஜந்தா ஷேவிங் பிரஷ்களும் மற்றும் அஜந்தா ஹேர் பிரஷ்களும் கிடைக்கும்.

நாடு முழுவதும் எல்லா நல்ல ஸ்டோர்களிலும் கிடைக்கின்றன.



தி பாம்பே
பிரஷ் கம்பெனி
பிரைவேட் லிமிடெட்,
பம்பாய்

RS/BB/1AH/02

# சம்ஸ்கிருத இலக்கியத்துக்கு அமெரிக்கரின் பணி

டாக்டர் வே. ராகவன்

தற்போது மேனாடுகளில் பல்கலைக் கழகங்களில் ஸம்ஸ்கிருதமோ, இந்தியப் பண்பாடோ படிக்கப்படாத இடமே கிடையாது. சிறப்பாய் அமெரிக்காவில் பல கல்வி ஸ்தாபனங்களில் இம்மொழிக்குத் தொண்டு ஆற்றப்பட்டு வருகிறது. இப்படிப்பட்ட அமெரிக்க ஸம்ஸ்கிருத கேந்திரங்களில் தலைசிறந்தது ஹார்வர்ட் யூனிவர்ஸிடி. இங்கே உயர்ந்த முறையில் வெளியாகும் ஸம்ஸ்கிருத பிராக்ருத நூல்களும், அவற்றின் ஆங்கில ஆக்கங்களும், ஸம்ஸ்கிருத உலக மனத்திலும் புகழ் பெற்றவை.

இவ்வெளியீடுகளில் 44வதாக நமக்குக் கிடைத்திருப்பது வித்யாகரர் தொகுத்த சுபாஷிதரத்ன கோசம் என்ற தொகை நூலின் ஆங்கிலச் செய்யுள் மொழிபெயர்ப்பு. இதை ஆக்கியவர் அமெரிக்க ஸம்ஸ்கிருத அறிஞரில் முதலணியில் இருக்கும் டேனியல் இங்கல்ஸ் என்பவர். இவர் இந்தியாவில் தங்கி தர்க்கம், வியாகரணம் முதலியவற்றைப் பண்டிதர்களிடம் முறைப்படி படித்தவர். ஹார்வர்ட் பல்கலைக் கழகத்தில் ஸம்ஸ்கிருதப் பேராசிரியர்.

மஹாகவிகளின் காவிய நாடகங்களிலிருந்து சுவை மிக்கதான செய்யுட்களை மனப்பாடம் செய்வது, சுவையாளர் கூடி ஒருவருக்கொருவர் பரிமாறிக் கொண்டும், 'அந்தாதி' முதலிய போட்டா போட்டி முறையில் சொல்லிக் கொண்டும் இன்புறுவது நம் நாட்டில் தொன்று தொட்டு, இன்று வரை நடைமுறையில் இருக்கும் பழக்கமாகும். இப்படிப்பட்ட பழக்கத்தை நூல் முறையில் தொகுத்து எழுதி வைத்தால் அது தொகை நூல் ஆகும். சுமார் பன்னிரண்டாவது நூற்றாண்டிலிருந்து காச்மீரம், வங்காளம், தெற்கே மஹாராஷ்டிரம், தென்னிந்தியா முதலிய இடங்களில் இத்துறையில் நூல்கள் தொகுக்கப்பட்டன.

இத்தொகை நூல்களில் தற்போது அறிய இருப்பவற்றுள் முதன் முதலாய்த் தொகுக்கப்பட்டது வித்யாகரர் செய்த சுபாஷித ரத்னகோசம் (நன்கவிப் பொக்கிஷம்) என்பதாகும். வங்காளத்தில் ஆண்ட பால அரசர்கள் காலத்தில் பன்னிரண்டாவது நூற்றாண்டில் இப்பொக்கிஷம் திரட்டப்பட்டது. இதன் ஏட்டுப் பிரதிகள் நேபாளத்தில் கிடைத்தன. இதைக் கண்டுபிடித்து, இதன் அருமையை உணர்ந்து, சுவடிகளுடன் பல்லாண்டு பாடுபட்டு, இந்நூலை அச்சுக்குக் கொண்டு வந்தவர்கள், த. த. கோஸம்பி, வி.வி. கோகலே என்ற இரு பேராசிரியர்கள். இந்த நூல் தக்க முகவுரை விளக்கங்களுடன் நேர்த்தியான வகையில் 1957ல் அமெரிக்காவில் ஹார்வர்ட் பல்கலைக் கழகம் வாயிலாய் ஸம்ஸ்கிருத வெளியீட்டுத் தொடரில் (Harvard Oriental Series - 42) தரப்பட்டது. வால்மீகி, வியாஸர், காளிதாஸன் முதற்கொண்டு பின்னால் பன்னிரண்டாவது நூற்றாண்டு வரைக்கும் தோன்றிய கவிகளின் காவிய நாடகங்களிலிருந்து, மணி மணியாய்த் திகழும் 1738 செய்யுட்கள் இங்கே காணப்படும். சுமார் இருநூறு கவிகளின் கவிதைகள் இங்கே சுவைக்கப்படும். இயற்கை, ருதுக்கள், துதி, மானிடப் பண்பு, உருவ அழகு, நீதி, நவரஸங்கள் இப்படி ஐம்பது தலைப்புக்களின் கீழ் வகுக்கப்பட்டு, அதனதன் கீழ் பல கவிகளின் ஆக்கங்கள் சேர்க்கப்பட்டிருப்பதால், வர்ணனை, கற்பனைத் திறன், எண்ணம், சொற்சித்திரம் முதலிய சிறப்புக்களைத் தனியாகவும், ஒப்பிட்டும் சுவைக்க இது போன்ற நூல்கள் தனியான வாய்ப்பை அளிக்கின்றன.

தற்போது பல நாடுகளில் இலக்கிய நூல்கள் ஆங்கிலத்தில் வெளி வந்து உலகம் முழுதும் படித்துச் சுவைக்கப்படுகின்றன. அவ்வாறு ஸம்ஸ்கிருதக் கவிதைகளைத் தற்போதைய இலக்கிய அறிவாளிகள் படிப்பதற்கும் அதன் சிறப்புக்களை நுகர்வதற்கும் புதிய வாய்ப்பையளிக்க வேண்டுமென்றே பேராசிரியர் இங்கல்ஸ் இந்த ஆங்கில ஆக்கத்தைப் பத்து ஆண்டுகளாய் உழைத்து உலகத்துக்கு அளித்திருக்கிறார். பொதுவாய், மூலம் செய்யுளாயிருந்தாலும் மொழிபெயர்ப்புக்கள் உரைநடையில் வருவது இயல்பு; ஆனால் ஆசிரியர் செய்யுள் நடையிலேயே மொழிபெயர்த்திருப்பது அவருடைய திறமையைக் காட்டுகிறது.

ஒரு மொழியின் இலக்கியம் மற்ற நாட்டினரால் படிக்கப்படும்போது, உணர்வதற்கும், சுவைப்பதற்கும் இடையூறுகளாய் அந்தந்த நாட்டுக்கேற்ற எண்ணங்களும், கற்பனைகளும், உவமைகளும், அணிகளும், கவிதை வழிகளும் இருக்கும். இவற்றை யெல்லாம் உள்ளபடி தெரிந்து கொண்டால்தான் மூலக் கவிதைகளைப் புரிந்து இன்புறுவது எளிதாகும். ஆகையால் இந்த நூலில் இங்கல்ஸ் அவர்கள் வெறும் மொழிபெயர்ப்பை மட்டும் தராமல் விரிவான முகவுரைகள் வாயிலாக ஸம்ஸ்கிருதக் கவிதை இயல்புகள், உவமை, சிலேடை முதலிய அணிகளின் போக்கு, கவிதை வழக்குகள், சந்தம், ரஸம், த்வனி முதலியவற்றைப் பற்றி வேண்டிய அளவு விளக்கியிருக்கிறார். இப்படிப் பல வகைகளிலும் இந்த நூல் சமீபத்தில் ஸம்ஸ்கிருதத் துறையில் வந்துள்ள வெளியீடுகளுள் தலைசிறந்து விளங்குகிறது.

புத்தக உலகில்...

புகழ் பெற்ற போலிகள்

# இரவும் பகலும்

பல சந்தர்ப்பங்களில் போலி வாழ்க்கையை மேற்கொள்பவர்கள் தொழிலை மாற்றிக் கொண்டாலும் அந்தத் துறையிலேயே நின்று கடைசியில் மாட்டிக் கொள்கிறார்கள். இது சகஜம். ஆனால் ஒரே நாளில் பகல் முழுதும் பெரிய மனிதனாகவும் இரவில் அதற்கு மாறுபட்டவனாகவும் பல ஆண்டுகள் தொடர்ந்து போலியாக வாழ்ந்து புகழ் பெற்ற பெருமையை ஸ்காட்லாந்து நாட்டைச் சேர்ந்த வில்லியம் பிராடிதான் தட்டிக் கொண்டு போகிறான்!

1741ம் ஆண்டில் எடின்பரோ நகரத்தில் வில்லியம் பிராடி பிறந்தான். அவன் தந்தை நல்ல நிலையில் உள்ள ஒரு தச்சு வேலைக்காரர். நகரசபைக்கு இரண்டு தடவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். மாளிகை போன்ற வாசஸ்தலம். பாங்கியில் பணம். வருவாய் மிகுந்த தொழில். இளமையில் சூடிக்கையாகப் படிப்பில் கவனம் செலுத்திய பிராடி நாளடைவில் தன் தந்தையின் தச்சுப் பட்டறையிலேயே தொழில் கற்றுக் கொண்டான். இருபத்தி இரண்டு வயதானதும் தொழிலில் தந்தைக்கு ஒரு பாகஸ்தனுமானான். அவனையும் ஓர் உறுப்பினனாக நகரசபைக்குத் தேர்ந்தெடுத்தார்கள். இதனால் பிராடி நகரத்திலுள்ள பெரிய மனிதர்கள் கலந்துகொள்ளும் சங்கங்களிலெல்லாம் அவனும் உறுப்பினனானான். சீமான்கள், சீமாட்டிகளுடனெல்லாம் அவன் தாராளமாகப் பழக முடிந்தது.

அந்த நாட்களில் ஆடம்பரமாகவும் நேர்த்தியாகவும் ஆடை அணிபவர்களுக்குச் சமூகத்தில் மதிப்பு அதிகம். பிராடி சற்றுக் குட்டையாக இருந்தாலும், உயர்ந்தரக உடுப்புக்களையே அணிந்து வந்தான். இதோடு, நிறுத்தி நிதானமாக, கொஞ்சமாகப் பேசும் சுபாவம் உடையவன். இவைகளெல்லாம் சேர்ந்து அவனை ஒரு கனவானாக்கின. எடின்பரோ நகர மக்களிடையே அவனுக்கு நல்ல செல்வாக்கு இருந்தது.

இரவு எட்டு மணிக்கு வியாபார ஸ்தாபனத்தை மூடிவிட்டு வீட்டுக்கு வந்து தந்தையுடனும், மணமாகாத சகோதரியுடனும் அமர்ந்து சாப்பாட்டை முடித்துக்கொண்டு 'ஆண்டவன் அருளில் இன்றையப் பொழுது கழிந்தது' என்ற நிலையில் படுக்கைக்குப் போவது பிராடியின் வழக்கமாகி விட்டது. எப்போதாவது அபூர்வமாகத் தொழில் சம்பந்தப்பட்ட வெளியூர் நண்பர்கள் வந்தால்தான் அவன் அவர்களுடன் இரவு வேளைகளை ஹோட்டல்களிலோ, பிரமுகர்கள் 'கிளப்பிலோ' கழிப்பதுண்டு. இது சாதாரணமான நிகழ்ச்சியல்ல. தந்தையும் சகோதரியும் பிராடி சாப்பிட்டு விட்டுப் படுக்கைக்குப் போனதும் தத்தம் அறைக்குப் போவார்கள். பிரம்மச்சாரி பிராடி எந்த விதக் கேளிக்கைகளிலும் ஈடுபடாமல் இப்படி உத்தமப்பிள்ளையாக இருப்பது பற்றி அவர்களுக்கு ரொம்பப் பெருமை.

அவர்களுக்குத் தெரியாத முக்கிய விஷயம் ஒன்றும் இருந்தது. 'இன்றையப் பொழுது கழிந்தது' என்று சொல்லிப் படுக்கைக்குப் போகும் பிராடிக்கு, அன்றையப் பொழுது அப்போதுதான் நிஜமாக ஆரம்பித்தது!

வீட்டின் பக்கத்து வாசல் வழியாக வேறு உடை மாற்றிக் கொண்டு பிராடி தன் இரவு



நேர வாழ்க்கையை நோக்கிக் கிளம்பிவிடுவான். சூதாட்டம், பந்தயம் வைத்த கோழிச்சண்டை, அதிக மதுபானம் இவைகளெல்லாம் அவனுக்கு மிகப் பிடித்தவை. இவை தவிர நகரத்தின் இரு பகுதிகளில் அவனுக்கு இரண்டு ஆசைநாயகிகள் வேறு இருந்தார்கள். இந்த விஷயங்கள் குறிப்பிட்ட சில ஆப்த நண்பர்களுக்குத்தான் தெரியுமே தவிர மற்றவர்களுக்குத் தெரியாது. அதிகாலையில் இருள் பிரிவதற்கு முன் அவன் தன் வீட்டுக்குத் திரும்பி வந்து படுத்து விடுவான். பகல் நேரத்தில் பிராடி ஒரு கண்ணியமான கனவான்.

சூது, மது, மங்கை மூன்றிலும் தீவிர நாட்டம் கொண்டிருந்த பிராடி, சீக்கிரமே தன் மிதமிஞ்சிய செலவுகளுக்கேற்ப வருவாய் இல்லை என்பதை உணர்ந்தான். வருவாயை அதிகரித்துக் கொள்ள அவனுக்கு ஒரே வழிதான் தென்பட்டது. திறமை வாய்ந்த ஒரு திருடனாகவும் மாறத் துணிந்து விட்டான்.

இருட்டுக் குற்றத்துக்கு அந்தக் காலத்தில் ஒரே தண்டனை மரண தண்டனைதான்! பிராடிக்கு அது தெரியும். ஆனாலும் துணிந்து விட்டான் அவன்.

அந்த நாளைய எடின்பரோ நகரம் பொது மக்களின் நாணயத்திலும், நன்னடத்தை யிலும் நிறைய நம்பிக்கை வைத்திருந்தது. வியாபார ஸ்தாபனங்களெல்லாம் காலையில் கடைகளைத் திறந்தவுடன் சாவிகளையெல்லாம் கதவுகளிலேயே விட்டு வைத்திருப்பார்கள். இரவில் கதவுகளைப் பூட்டும்போது அவைகளை அகற்றிக்கொண்டு போவார்கள். தச்சு வேலை நிபுணன் என்ற முறையில் வில்லியம் பிராடியை அந்த ஸ்தாபனங்கள் ரிப்பேர் வேலைக்கு அழைப்பது சகஜம். இருடனாக மாற வேண்டும் என்று திட்டமிட்டவுடன் பிராடி தன் சட்டைப் பையில் கொஞ்சம் மெழுகையும் எடுத்து வைத்துக் கொண் டான். ஜான்ஸ்டன் - ஸ்மித் பாங்கியில் தான் அவன் கைவரிசையை முதல் தடவை யாகக் காண்பித்தான். அந்தப் பாங்கிக் கதவுகளை ரிப்பேர் பண்ணப் போனபோது அவன் சட்டைப் பையிலிருந்த மெழுகு, சாவிகளின் அமைப்பைப் பதித்துகொள்ள உதவியது. சில நாட்கள் கழித்து ஒரு நாள் இரவில் அந்தப் பாங்கியில் நுழைந்து எண் ணூறு பவுன்களை அகற்றி வந்து விட்டான்.

அன்று தொடங்கிய இந்த இரவு நேரப் பணியை அவன் தொடர்ந்து நடத்த ஆரம் பித்தான். கறுப்பு அங்கியும் முகமூடியும் இரவில் அவனைக் காட்டிக் கொடுக்காமல் இருக்க உதவின. வெள்ளை உடையும் வெகு ளித்தனமும் பகலில் அவன் மதிப்பை நிறை யக் காட்டின.

ஒன்றிரண்டு நெருக்கடிகளும் நேராம லில்லை. திடீரென்று ஒரு நாள் நள்ளிரவில் நகர ஒதுப் புறத்திலுள்ள ஒரு வீட்டில் நுழைந் தான். எதிர்பாராத விதமாக அந்த வீட்டில் வசித்தவர் பிராடியின் நண்பரான ஒரு நியாயாதிபதி! முகமூடி அணிந்திருந்தாலும் அவருக்குப் பிராடியின் அடையாளம் தெரிந்து விட்டது. ஆனால் நகரத்தில் செல் வாக்குப் பெற்று நகரசபை உறுப்பினராக இருக்கும் பிராடி இந்தத் தொழிலில் இறங்கு வான் என்று நம்ப அவர் மனம் மறுத்தது. கண்களுக்கும் உள்ளத்துக்கும் இந்தப் போராட்டம் நடந்தபோது பிராடி தப்பிப் போய் விட்டான். அந்த நியாயாதிபதியின் உள்ளம்தான் வெற்றி பெற்றது. திருட்டு முயற்சியுடன் அவர் பிராடியின் பெயரைச் சம்பந்தப்படுத்தவே யில்லை!

இன்னொரு சந்தர்ப்பம். முன்னிரவு வேளை. தனக்குத் தெரிந்த வயோதிக மாது ஒருத்தி பிரார்த்தனைக்காக மாதா கோயிலுக்குப் போயிருப்பாள் என்ற நம்பிக்கையில் அவள் வீட்டுக்குள் முகமூடியுடன் நுழைந்து விட் டான் பிராடி. அந்தக் கிழ மாது பணம் படைத்தவள்.

அன்று பார்த்து அக்கிழவி உடல் நலக் குறைவால் மாதா கோவிலுக்குப் போக வில்லை. தன் அறையில் சாய்வு நாற்காலியில் அமர்ந்து எதையோ படித்துக்கொண் டிருந் தாள். திடீரென்று அவள் அறையில் நுழைந்த பிராடி குத்துக்கல்போல் அவள் உட்கார்ந்திருப்பதைக் கண்டு திடுக்கிட்டான். முகமூடித் திருடன் ஒருவன் திடீரென்று நுழைந்தது கண்டு அந்தக் கிழவி பன்மடங்கு திகைப்படைந்தாள். அதைப் பயன்படுத் திக்கொண்ட பிராடி நிதானமாக மேஜை யின் மீதிருந்த சாவிக் கொத்தை எடுத்து பீரோவைத் திறந்து உள்ளிருந்த பணத்தை யெல்லாம் எடுத்துக் கொண்டு தலை குனிந்து வணக்கம் செலுத்திவிட்டு வெளியே ஓடினான். அத்தனை நேரம் தீவிர பிரமையிலிருந்த கிழ விக்கு அப்போதுதான் பளிச்சென்று 'ஆஹா! இந்த ஆசாமி நம் கௌன்சிலர் வில்லியம் பிராடிபோல் இருக்கிறதே!' என்ற நினைவு வந்தது. ஆனாலும் அந்த நியாயாதிபதி போல இவள் மனமும் பிராடி இந்தத் தொழிலில் இறங்குவான் என்று நம்ப மறுத்தது. அவள் வாயை மூடிக்கொண்டு இருந்து விட்டாள். பிராடி கிடைத்த பணத்தைப் பையில் போட்டு மூடிக் கொண்டான்!

இந்த அனுபவங்களுக்குப் பிறகு பிராடி, தனியாக இந்த இரவுத் தொழில் நடத்து வதில் ஆபத்து இருக்கிறது என்பதை உணர்ந் தான். நம்பகமான கூட்டாளிகள் யாராவது இருந்தால் சற்று நிதானித்து ஆபத்துக்களைத் தவிர்க்கலாம் என்று நினைத்தான். அவன் தந்தை தன் மகன்மேல் அபார நம்பிக்கை வைத்துப் பத்தாயிரம் பவுன்களையும் பாங்கி யில் வைத்துவிட்டு, அவனுடைய இரட்டை வாழ்க்கையைப் பற்றிக் கொஞ்சம்கூடத் தெரிந்துகொள்ளாமல் காலமானார். வீட்டி லிருந்த சகோதரிகள் தங்கள் சகோதரனைப் போல் யோக்கியமானவன் யாருமில்லை என்று நம்பினார்கள். அதே நேரத்தில், பிராடியோ தன் பிரதான இரண்டாவது வாழ்க்கைக்குத் துணையாகக் கூட்டாளிகளைத் தேடிக் கொண்டிருந்தான். ஜார்ஜ், ஆண்ட்ரூ, பிரவுன் ஆகிய மூவரும் அவன் கூட்டாளி களானார்கள். ஜார்ஜ் ஒரு காலத்தில் பூட்டு ரிப்பேர்க்காரனாக இருந்து பல சில்லறைக் குற்றங்கள் செய்தவன். ஆண்ட்ரூ ஒரு செருப்பு ரிப்பேர்த் தொழிலாளி. பிரவுன் ஏற்கனவே ஏழு ஆண்டுகள் சிறைத் தண்டனை பெற்று இடையே சிறையிலிருந்து தப்பி வந்தவன். மூவர் துணையுடன் பிராடி தன் தொழிலைத் தீவிரமாக நடத்தத் தொடங்கி னான். எடின்பரோ நகர மக்கள் கொதிப் படைந்தார்கள். ஆனால் அவர்களால் திருடர் களைப் பிடிக்க முடியவில்லை.

எடின்பரோ நகர சர்வ கலாசாலையில் ஆரம்ப நாள் முதல் வைக்கப்பட் டிருந்த பிரும்மாண்ட வெள்ளிச் சின்னம் திருடப் பட்டபோதுதான் ஊரே ஒன்றாகக் கூக்குர லிட்டது. அதை அகற்றிய பிராடியே, நகரசபை உறுப்பினர் என்ற முறையில் திருடர்களைக் கண்டு பிடிப்பவர்களுக்கு நகர சபை வெகுமதி அளித்துக் கௌரவிக்கும் என்று அறிவித்தான்!

இங்லிஸ் — ஹார்னர் பட்டு ஜவுளிக் கடையில் நுழைந்து இந்தக் குழுவினர் ஐந்நூறு பவுன் பெறுமான துணிகளை அப்புறப்படுத்திய பிறகு அந்த ஸ்தாபனம் சும்மா இருக்கவில்லை. திருடர்களைப் பிடித்

# புதுமை! வரி யணிந்த பற்பசை!




# ஸிக்னல்

## கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் தரித்தது!*
## துலக்கிய வாய் முழுதும் தூய்மை நிலவும்!

❶ உங்கள் பற்களைத் துலக்கும் ❷ துலக்கிய வாய் மணக்கும்.

* அந்தச் சிவப்பு வரிகளிலே இருப்பது ஹெக்ஸாக்ளோரபீன்.

பற்களின் துப்புரவுக்கு ஒரு புதிய உறவு: கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் கூடிய ஸிக்னல்: வாய் நிரம்பும் தூய்மைக்கென்றே வாய்த்த ஒரு பற்பசை. பற்களைத் துலக்கும்போதே, உங்கள் மூச்சையும் மணமுடன் தூய்மைப்படுத்துகிறது அவ் வரிகளிலுள்ள ஹெக்ஸாக்ளோரபீன். காரணமா? நாற்றமுண்டாக்கும் கிருமிகளை உடனடியாக ஒழிக்கவல்ல பாதுகாப்புப் பொருளே ஹெக்ஸாக்ளோரபீன். எனவே, ஸிக்னல் தேய்த்த வாய் முழுதும் தூய்மையின் ஆட்சி. கோலச் செவ்வரிகள், கொப்புளிக்கும் நுரைவளம், குளுகுளு பெப்பர்மின்ட் போன்ற சுவை... ஆஹா! ஹா! குடும்பத்திலுள்ள எல்லாருந்தான் சொல்லிக் கொள்ளாதா? வாய் முழுமையும் தூய்மையோ தூய்மை, வாயார உணரலாம். இன்றே பெறுங்கள் ஸிக்னல்.




...உங்கள் பற்களைத் துலக்கும்,
துலக்கிய வாய் மணக்கும்.

லின்டாஸ்-SG. 3A-140 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமானதொரு தயாரிப்பு







துத் தருபவர்களுக்கு நூறு பவுன் அன்பளிப்பும், திருடர்களே ஒப்புக் கொண்டால், அவர்களுக்குச் சன்மானத்துடன் அரசாங்க மன்னிப்பும் கிடைக்கும் என்று அறிவித்திருந்தார்கள்.

பிராடி கோஷ்டியினர் உஷாரானர்கள். ஒரு பெரிய திருட்டை நடத்திவிட்டுத் தாற்காலிக ஓய்வு எடுத்துக் கொள்ளலாம் என்று நினைத்தார்கள். அதற்கு வரி வசூல் செய்யும் காரியாலயத்தைத் தேர்ந்தெடுத்தார்கள். அங்கு நிறையப் பணம் குவிந்திருக்குமல்லவா? இந்தத் திருட்டுக்கு நான்கு வார காலம் ஆராய்ச்சி பூர்வமாகத் திட்டமிட்டான் பிராடி.

குறிப்பிட்ட இரவில் பிராடி முகமூடியுடன் வாசலில் காவல் நிற்க அவன் தோழர்கள் போலிச் சாவிகளுடன் உள்ளே நுழைந்தார்கள். இந்த நேரத்தில் எதிர்பாராமல் அந்தக் காரியாலயச் சிப்பந்தி ஒருவர் தாம் மறந்து விட்டுப்போன ஒரு பொருளை எடுக்க உள்ளே போனர். இதைக் கவனித்த பிராடி உள்ளே இருப்பவர்களுக்கு எச்சரிக்கை கொடுக்க முடியாத நிலையில் தான் நழுவுவது நல்லது என்று நேராக வீட்டுக்குப் போய்விட்டான். உள்ளே போன சிப்பந்தியோ ஆபீஸ் அறையில் அரவம் கேட்டும் ஊழியர்கள்தான் தங்கள் வேலைகளைப் பார்க்கிறார்கள் என்று நினைத்துத் தாம் வந்த வேலையை முடித்துக் கொண்டு கிளம்பி விட்டார். ஜார்ஜ், ஆண்ட்ரு, பிரவுன் கோஷ்டியினருக்கு அவ்வளவு சிரமப்பட்டுக் கிடைத்த தொகை பதினறு பவுன்கள்தான். எரிச்சலுடன் வெளியே வந்தார்கள். தமக்கு எத்தனையோ ஆயிரம் பவுன்கள் பங்கு கிடைக்கும் என்று கனவு கண்டு ஏமாந்தவர்கள் வாசலில் பிராடியைக் காணுமல் எரிச்சல் அடைந்தார்கள். அவனிடம் அவர்களுக்கு மதிப்புக் குறைந்தது; சந்தேகம் ஏற்பட்டது.

இதில் அதிகம் ஏமாற்ற மடைந்தவன் பிரவுன்தான். அவனுக்குப் பணம் உடனடியாகத் தேவைப்பட்டது. பிராடி மீது நம்பிக்கை இழந்து விட்டான். போலீசுக்குப் போனல் மன்னிப்பும் துணிக்கடைக்காரர்களின் நூறு பவுன் சன்மானமும் கிடைக்கும்! நேராகப்போலீசுக்குப் போய்விட்டான். ஆனல் அவன் அங்கு பிராடியின் பெயரையே இழுக்கவில்லை. மற்ற இரு நண்பர்களைத் தான் குறிப்பிட்டான். அந்த இருவரும் பிடிபட்டார்கள்.

மறுநாள் எடின்பரோ நகரம் அல்லோலகல்லோலப்பட்டது. கௌன்சிலர் பிராடி கம்பீரமாக வந்து போலீசைப் பாராட்டிவிட்டு, உடனடியாக கோச் வண்டி ஏறி லண்டன் புறப்பட்டு விட்டான். அங்கிருந்து ஐரோப்பாவுக்குக் கப்பலேறி விட்டான். இந்தக் கலவரத்தின்போது, தான் அங்கு இருப்பது உசிதமில்லை என்பது அவன் எண்ணமாகும்.

தங்களுக்கு பிராடி உதவி செய்வான் என்று நினைத்த ஜார்ஜும், ஆண்ட்ருவும் பிராடி தேசத்தை விட்டே ஓடிப் போனது கேட்டு வெகுண்டார்கள். பிராடிதான் தங்கள் தலைவன் என்று சொல்லிவிட்டார்கள். அவன் வீட்டில் பல வருடங்களாகக் களவு போய்க் கொண்டிருந்த பல சாமான்கள் அகப்பட்டன. எடின்பரோ வாசிகள் திகைப்படைந்தார்கள். யாரைப் பெரிய கனவான் என்று நம்பினர்களோ அவன் பெரும் கொள்ளைக்காரனுகவல்லவா இருந்திருக்கிறன்!

பிராடியை ஆம்ஸ்டர்டாம் நகரத்தில் பிடித்துக் கைது செய்து விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள். ஒரு பிரபல கிரிமினல் வழக்கறிஞர் அவன் நிரபராதி என்று வாதாடி, அவன் ஆசைநாயகி ஒருத்தியைச் சாட்சியாகக் கொண்டு வந்தார். இருபத்தி நான்கு மணி நேரம் தொடர்ந்து அமர்ந்து விசாரித்த நீதிபதியும் ஜூரர்களும் பிராடிக்கு மரண தண்டனையே விதித்தார்கள்!

''இப்போது நான் பகல் வாழ்க்கை பிராடியாகவே மரணத்தை எதிர்பார்க்கிறேன்'' என்று நிதானமாகச் சொல்லிவிட்டே பிராடி ஒரு நாள் பிற்பகல் தூக்கு மேடையில் ஏறினன்.

இந்தப் போலி பிராடிக்கு மேலும் புகழ் தேடித் தந்தவர் பிரபல ஆங்கில எழுத்தாளர் ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன்தான். அவர் தம்முடைய பிரசித்திக் கதையான 'டாக்டர் ஜெக்கில் அன்டு ஹைட்'டுக்கு அஸ்திவாரமாக வில்லியம் பிராடியைத்தான் எடுத்துக் கொண்டார்.

# மகிழ்ந்து விளையாடும் நேரம்— உட்வர்ட்ஸுக்கு நன்றி




மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**

*Aiyars ATC-486-TAM*

# பணக் கணக்கு

## என். புஷ்யநாதன்

''இந்தக் காலத்து அப்ரெண்டிஸ்கள் இருக்கிறார்களே, அவர்கள் நம்மைப் போல் கச்சம் வைத்துக் கட்டிக் கொள்வதில்லை. நீதிபதியை 'யுவர் ஆனர்' என்று குறிப்பிட்டுப் பேசக் கூடாதாம்! 'ஓய், நீதிபதியே! என்னங்காணும்?' என்ற முறையில் பேச வேண்டுமென்கிறார்கள்.......'' என்று வக்கீல் மன்னார் வெளியூரிலிருந்து வந்திருந்த தமது நண்பர் வக்கீல் பசுபதியிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

அப்போது, ''தபால்!'' என்று சொல்லிக் கொண்டே தபால்காரர் வந்து ஒரு கனமான இன்ஷ்யூர் கவரை நீட்டினார். அதன் மேலே உயரத்தில் இரண்டாயிரம் ரூபாய் இரண்டு பைசாவுக்கு இன்ஷ்யூர் செய்யப்பட்டது என்றிருந்தது. அனுப்புதல் 'நீதிநாதன், தர்மபுரி' என்றிருந்தது.

மன்னார், விலாசத்தைப் படித்துச் சற்று யோசனை செய்தவண்ணம் இருந்தார். அவருக்கு அது யார் என்று தெரியவில்லை. எழுத்துக்கள் டைப் அடிக்கப்பட்டிருந்தன. தபால்காரர் நின்று கொண்டிருப்பதைக் கவனித்ததும், அந்த இன்ஷ்யூர் கவரைப் பெற்றுக் கொண்டதற்கான ரசீதுகளில் கையெழுத்துப் போட்டு அவரிடம் கொடுத்தனுப்பினார்.

''இதோ, ஒரு நிமிஷம். இதைப் பார்த்து விடுகிறேன்'' என்று நண்பரிடம் கூறினார்.

''அவசரமில்லை. வெட்டிப் பேச்சுத்தானே பேசிக் கொண்டிருக்கிறோம்'' என்றார் பசுபதி.

மன்னார் ஒரு கத்தியை எடுத்துக் கவரின் ஓர் ஓரத்தை ஜாக்கிரதையாகக் கிழித்தார். பிறகு அதற்குள்ளிருந்ததை எடுத்து மேஜையின் மீது வைத்தார். கரன்ஸி நோட்டுக்கள் இருந்தன. அவர் அவற்றை எண்ணிப் பார்த்தார். அப்பொழுதெல்லாம் அவர் முகத்தில் திகைப்புத் தோன்றி இருப்பதைக் கண்டு பசுபதி ஆச்சரியம் அடைந்திருந்தார். பெரிய கிரிமினல் வழக்கு வக்கீலான தமது நண்பரை இப்படித் திகைக்கச் செய்யும் விஷயம் பெரியதாகவே இருக்க வேண்டுமென்று நினைத்தார். வக்கீல் மன்னார் கவருக்குள் கையை விட்டுப் பிறகு அதை மேஜை மீது ஒப்புறத் தட்டினார். இரண்டு பைசா நாணயங்கள் கீழே விழுந்தன. ஒரு சிறிய துண்டுக் காகிதமும் விழுந்தது. அந்தக் காகிதத்தில் சில வார்த்தைகளே டைப் செய்யப்பட்டிருந்தன. கையெழுத்திடப்படவில்லை. மன்னார் அதைப் பார்த்து ஒன்றும் தோன்றாதவராய் நெற்றியைத் தடவிக் கொண்டு யோசனை செய்து பார்த்தார்.

அவர் கரன்ஸி நோட்டையும், நாணயங்களையும் துண்டுக் காகிதத்தையும் திருப்ப அந்தப் பைக்குள்ளே போட்டுவிட்டு, கவரைத் தமது மேஜை டிராயருக்குள் வைத்தார். பிறகுதான் தமது நண்பரைக் கவனித்தார். ''இந்தப் பணத்தை அனுப்பியிருப்பது யார் என்று எனக்குத் தெரியவில்லை. கவரின் மீது 'நீதி நாதன், அரக்கோணம்' என்று விலாசம் இருக்கிறது. அந்தப் பெயருள்ள ஆசாமி யாரென்று எனக்குத் தெரியாது. ஆனால் ஒரு சந்தேகம்'' என்றார்.

''நீங்கள் சொல்வது எனக்குப் புரியவில்லை'' என்றார் பசுபதி.

''புரிவதற்கு நான் ஒரு கதை சொல்லியாக வேண்டும். கதை என்றால் ஒரு கட்டெக்காரரைப் பற்றிய விவரங்கள். சாமியப்பாவைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே!''

''கடும் வட்டி வாங்கிப் பணம் சேர்த்தாரே, அவர்தானே! நீங்கள் அவர் குடும்ப வக்கீலாயிற்றே!''

''ஆமாம்! அவரேதான். அவர் பிள்ளை ராஜப்பா விஷயம்தான் சொல்லப் போகிறேன்'' என்றார் மன்னார்.

ராஜப்பா தன் அப்பாவைப் போல் வட்டித் தொழில் நடத்தவில்லை. இருக்கும் பணத்தை வைத்துக் கொண்டு சுகவாசியாகக் காலம் கழித்தான். 'மைனர் விளையாட்டு' என்று சொல்வார்களே அந்த விளையாட்டு விளையாடினான். ஆனால், அதற்கெல்லாம் செலவழித்தாலும், அதிலும் அப்பனைப் போல் ஒரு கணக்கு. பிறரால் ஏதாவது



நன்மை உண்டு, அல்லது செலவழித்துத்தான் ஆக வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டாலன்றி அவன் ஒரு பைசா அநாவசியமாக யாருக்கும் கடன் கொடுக்க மாட்டான். ஒரு நண்பனை ஒரு நாளைக்கு ஹோட்டலுக்கு அழைத்துக் கொண்டு போய்க் காப்பி வாங்கிக் கொடுத்தால் அதற்குப் பதில் அவனிடம் என்ன வேலை வாங்கலாம் என்று யோசனை செய்வான்.

ஆனால், தன் விஷயத்தில் இந்தக் கணக்கு, சிக்கனம் எதுவும் பார்த்த தில்லை. ஒவ்வொரு கோடைக்கும் வெளியூர் சென்று வருவான். வருடத் துக்கு ஒரு புதிய மோட்டார் வண்டியாக மாற்றிக் கொண்டிருப்பான். ஏன், மனைவியைக்கூட மாற்றினான். அவன் தந்தை அவனுக்கு ஒரு கர் நாடகமான, அழகற்ற பெண்ணைக் கல்யாணம் செய்து வைத்திருந்தார். அவர் இறந்த பிறகு அவன் அவளுக்கு ஜீவனாம்சப் பணம் கொடுத்து விட்டு வேறு ஒரு பெண்ணை மணக்க ஏற்பாடு செய்து கொண்டிருந்தான்.

பணத்தால் எதையும் சாதித்துக் கொள்ள முடியும் என்ற நம்பிக்கை அவனுக்கு ஏற்பட்டிருந்தது. ரேஷன், கண்ட்ரோல் முதலியவற்றால் கிடைக்காத பல அருமை யான சாமான்களை வாங்கி வைத்திருப்பான். அவன் அடிக்கடி மோட்டார் விபத்துக்குள்ளாவதும் உண்டு. ஆனால், அதை யெல்லாம் எப்படியோ சரிப்படுத்தி விடுவான். பணம்தான் காரணம். மற்றவர்கள் ஒரு புது மோட்டார் வண்டிக்காக வருஷக்கணக்காகக் காத்துக் கொண்டிருப்பார்கள். ஆனால், அவன் விரும்பிய மாத் திரத்தில் அது அவனுக்குக் கிடைத்துவிடும். ''பணமே! உன்னால் என்ன குணமே!' என்ற எந்த அஷ்டதரித்திர பக்தனோ பாடினான். ஆனால் 'பணத்தால் செய்ய முடியாத காரியம் எதுவுமே இல்லை' என்று அவன் அடிக்கடி கூறுவது வழக்கம்.

சமுத்திரத்தில் அலைகளுடன் நீந்தி விளையாடி ஸ்நானம் செய்வதில் அவனுக்கு அதிக ஆசை. ஒரு நாள் அவன் அடையாறு சாலை ஒன்றின் வழியாக எலியட்ஸ் பீச்சுக்குத் தன் வண்டியில் சென்று கொண் டிருந்தான்; வண்டியைத் தொண்ணூறு மைல் வேகத்தில் ஓட்டிப் போய்க் கொண்டிருந்தான். அப்போது



வழியில் ஒரு பாலத்தின் பக்கத்திலிருந்த ஒரு சிறு தெருவிலிருந்து ஒரு பையன் குறுக்கே வரவே, வண்டி அவன் மீது ஏறிவிட்டது.

மறு கணம் அந்த இடத்தில் ஒரே கூட்டம் கூடி விட்டது. பக்கத்திலிருந்த குடிசைகளிலிருந்து வந்தவர்கள் அவன் தோலை உரித்து விடத் துடித்தார்கள். அப்போது அங்கே தற்செயலாக ஒரு டிராபிக் போலீஸ்காரர் வரவே அவன் உயிர் தப்பினான்.

சாதாரணமாக இது போன்ற சந்தர்ப்பங்களில் அவன் பணத்தைக் கொடுத்துச் சரிப்படுத்திவிட முயல்வது வழக்கம். ஆனால் அந்தச் சம்பவத்தின்போது அப்படிச் செய்யச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை. அவனைக் கைது செய்து போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துக் கொண்டு போக இருந்த போது அவன் எனக்கு டெலிபோன் செய்தான்.

நான் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அவனைப் பார்த்தேன். அவனை ஜாமீனில்விட ஏற்பாடு செய்து அவனை வெளியே அழைத்துக் கொண்டு வந்தேன்.

அவன் வண்டியை வேகமாக ஓட்டிக் கொண்டு வந்ததையும், ஹாரன் அடிக்காததையும் பார்த்த பலர் அவனுக்கு விரோதமாகச் சாட்சி சொல்லத் தயாராக இருந்தனர். அவர்கள் எல்லாருக்கும் பணத்தைக் கொடுத்துச் சரிப்படுத்திவிடப் போவதாகக் கூறினான். ஆனால் அது நடக்காத காரியம் என்று தெரிவித்தேன். ஏனென்றால், இறந்த சிறுவனின் தந்தை பீதாம்பரம் ஓர் ராணுவ வீரன்; சிப்பாய். அவன் வசித்திருந்த பகுதியில் இருந்தவர்கள் அவனிடம் பெரும் மதிப்பு வைத்திருந்தார்கள். அவன் இருந்த படை தென் கொரியாவிலேயோ, காங்கோவிலோ இருந்தது. அவன் மனைவி கோமளம் ஒரு சமூக சேவகி. தன் பேட்டையிலிருந்தவர்களால் கௌரவிக்கப்பட்டு வந்தவள். ஆகையால், சாட்சிகளுக்குப் பணம் கொடுக்க முயன்றால், அவர்கள் அவனை லஞ்சம் கொடுக்க முயன்றதற்காகப் பிடித்துக் கொடுத்து விடுவார்கள் என்று எச்சரித்தேன்.

வழக்கில் அவனுக்கு மிகவும் கடுமையான தண்டனை கிடைக்குமென்று எனக்குப் பயம். அது விசாரணைக்கு வராமல் இருக்கப் பல காரணங்களைக் கூறி ஒத்திப் போடச் செய்து வந்தேன். கிட்டத்தட்ட ஆறு மாத காலம் இழுக்க அடித்தேன்.

இதற்கிடையே இந்த விபத்து சம்பந்தமாகச் சாட்சிகளிடையே ஏற்பட்டிருந்த கோபம் ஒருவாறு தணிந்திருந்தது. சம்பந்தப்பட்ட போலீஸ் அதிகாரிகள் சிலரும், வழக்கை விசாரிக்கவிருந்த மாஜிஸ்திரேட்டும் வேறு ஊர்களுக்கு மாற்றப்பட்டு விட்டிருந்தார்கள். இதெல்லாம் ராஜப்பாவின் முயற்சியால்தான் நடந்திருக்கக் கூடும். அவன் அதற்காக ஏராளமான பணம் செலவழித்திருக்கக் கூடும் என்று எனக்குச் சந்தேகம். அவன் முறை தவறி, சட்ட விரோதமாகச் செய்யும் காரியங்களைப் பற்றி என்னிடம் தெரிவிப்பதில்லை. வக்கீல், பீஸ் பெற்றுக் கொண்டு வேலை செய்யும் ஒரு தொழிலாளி. அவ்வளவுதான் என்னைப் பற்றிய மதிப்பு அவனுக்கு. எல்லாவற்றையும் தான் பணத்தினால் சாதிக்க முடியும் என்ற கொள்கையுடையவனாயிற்றே.

பீதாம்பரம் ஊரில் இல்லாததால் அவன் மனைவி கோமளமே வக்கீல் வேணுகோபாலை வைத்து வழக்கு நடத்தினாள். அந்த வேணு, ராஜப்பாவுக்கு வேண்டியவன். அவன் பிள்ளை இறந்து விட்டதற்காக இருபத்தையாயிரம் ரூபாய் நஷ்டஈடு கொடுப்பதாகச் சொல்லி, அந்தத் தொகையை ஏற்றுக் கொள்ளச் செய்து விட்டான்.

வழக்கு விசாரணைக்கு வந்தது. முடிவு அவனுக்குச் சாதகமானதுதான். மாஜிஸ்டிரேட் அவனுக்கு ஆயிரம் ரூபாய் அபராதம் விதித்தார். அவனது வண்டி ஓட்டும் லைசென்ஸை ஆறு மாத காலத்துக்கு ஸஸ்பெண்டு செய்தார்.

ஆறுமாத காலத்துக்குப் பிறகு ஒருநாள் அவன் ஒரு புது வண்டியில் என் வீட்டுக்கு வந்தான். ''வாருங்கள், பீச்சுக்குப் போகலாம். திரும்ப லைசென்ஸ் கிடைத்துவிட்டது. அதைக் கொண்டாடப் போகிறேன்'' என்றான். அவனுக்கு மிகவும் பிடித்த எலியட்ஸ் பீச்சுக்குச் சென்றோம். அவன் நீந்துவதற்காகத் தண்ணீரில் இறங்கிச் சென்ற போது நான் மணலில் உட்கார்ந்து கொண்டிருந்தேன். என் மனம் அந்த மனிதன் திரும்ப லைசென்ஸ் பெற்றதைக் கொண்டாடப் போகிறேன் என்று சொன்னதைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தது. இறந்து போன பையனைப் பற்றி அல்லது அவன் பெற்றோர்களைப் பற்றி ஒரு வார்த்தை கூறவில்லை. நஷ்டஈடாகப் பணம் கொடுத்ததுடன் எல்லாம் சரியாகப் போய் விட்டது என்பது அவன் கணக்கு.

என் பக்கமாகச் சென்று கொண்டிருந்த ஒருவர் என்னைக் கண்டதும், ''உங்களை எங்கேயோ பார்த்திருக்கிறேன்'' என்றார். பிறகு அவர் தாமாகவே, ''ஞாபகம் வருகிறது. பீதாம்பரத்தின் பிள்ளையின் மீது மோட்டார் வண்டி ஏற்றியவரின் வக்கீல் அல்லவா நீங்கள்?'' என்று கூறிக் கொண்டே என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார்.

நாங்கள் அந்த வழக்கைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த போது இன்னொருவர் அங்கே வந்தார்.

''இவர்தான் பீதாம்பரம்!'' என்று என்னை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்து விட்டு என்னைப் பற்றியும் அவருக்குக் கூறினார்.

''மிஸ்டர், பீதாம்பரம்! அந்த விபத்தைப் பற்றி நினைத்தால் இன்றுகூட எனக்குக் கண் கலங்குகிறது. ஆனால், அது போன்ற நஷ்டத்தை ஈடு செய்ய முடியாது. ஆனால் ராஜப்பா தம்மாலானதைச் செய்தார்!'' என்றேன்.

''செய்தாரா? ஓ, பணம் கொடுத்ததைப் பற்றிச் சொல்கிறீர்களா?'' என்று பீதாம்பரம் நிதானமாகக் கேட்டார்.

''பணம் உங்களுக்கு ஏற்பட்ட பெரிய நஷ்டத்தை ஈடு செய்து விட்டதென்று நான் சொல்லவில்லை. ஆனால், ராஜப்பா மிகவும் தாராள மனத்துடன் நடந்து கொண்டார். உங்கள் வக்கீல் இருபதினாயிரம் ரூபாய்தான் கேட்டார். ஆனால் இவர்கூட ஐயாயிரம் சேர்த்தே கொடுத்தார்!'' என்றேன்.

பீதாம்பரம் உடனே பதில் சொல்லாமல் என்னையே சிறிது நேரம் கவனித்துக் கொண்

ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சிவப்பு லேபில்

சாப்பிடுங்கள்








சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப்படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியையூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.



வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கோழையை வெளியேற்றிச் சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர் - இந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்



## தட்டுங்கள் கேட்கப்படும்!

இலண்டனில் கதவைத் தட்டுவதிலும் பல வகை உண்டு. இதனால் யார் கதவைத் தட்டுகிறார்கள் என்று அவர்கள் எளிதில் அறிந்து கொள்கிறார்கள். அங்குள்ள வியாபாரி ஒரு தட்டு தட்டுவான். தபால்காரன் இரண்டு தட்டுகள் தட்டுவான். தந்திக்காரன் நான்கு தட்டுகள் தட்டுவான். பல தட்டுகள் தட்டுபவன், யார் தெரியுமா? பார்க்க வந்தவன்!

---

டிருந்தார். "அந்த விஷயம் எனக்குத் தெரியாது. அவர் தாராளமாய் நடந்து கொண்டிருக்கிறார்" என்று மெதுவாகக் கூறித் தம் தலையை ஆட்டினார்.

"எனது தயாள குணத்தைப் பற்றி என்ன வம்பளக்கிறீர்கள்?" என்று கேட்டுக்கொண்டு ராஜப்பா வந்தான். அவன் ஈர ஆடைகளைக் களைந்து விட்டுக் காய்ந்த உடை தரித்துக் கொண்டிருந்தான்.

நான் பீதாம்பரத்தை அவனுக்கு அறிமுகம் செய்து வைத்தேன். பீதாம்பரம் இராணுவ வீரன். புத்திரனை இழந்த கோபத்தில் அவர் ராஜப்பாவைத் தாக்குவாரோ என்று பயந்தேன். ஆனால் அந்த வீரர் அப்படி ஒன்றும் செய்யவில்லை. மிகவும் நிதானமாக இருந்தார். "எதிர்பாராத விதத்தில் விபத்து நேர்ந்து விட்டது" என்று கூறி ராஜப்பா அத்துடன் பேச்சை நிறுத்திக் கொண்டிருக்கலாம். ஆனால், "அதற்காகத்தான் நான் அத்தனை ரூபாய் கொடுத்தது" என்றான்.

"உங்களிடம் பணம் இருக்கிறது, கொடுத்திருக்கிறீர்கள் போலிருக்கிறது" என்று பீதாம்பரம் நிதானமாகக் கூறினார்.

"இருக்கிறதா? எனக்கு இந்த இருபத்தையாயிரம் மட்டும்தான் நஷ்டம் என்று நினைத்தீர்களா? வக்கீல் பீஸ், வண்டி ரிப்பேர், மற்றும் பல செலவுகள் சேர்ந்து ஒரு லட்சம் ரூபாய் வரையில் நஷ்டம். என் சொத்தே இருபது லட்சம்தான். அதில் இருபதில் ஒரு பங்கு நஷ்டமாகி விட்டது; இரண்டு மூன்று விநாடிகளில் நடந்த ஒரு சம்பவத்துக்காக!" என்று ராஜப்பா அகம்பாவத்துடனும், வெறுப்புடனும் சொன்னான்.

பீதாம்பரத்தின் கண்களில் கொலைக் குறி தோன்றியது. ஆனால் அவர் சிறிதும் பதற்றப்படவில்லை.

"இருபதில் ஒரு பங்கா?" என்று கூறித் தலையை ஆட்டினார்.

"வக்கீல் ஸார்! வாருங்கள், தீர்ந்துவிட்ட ஒரு விஷயத்தைப் பற்றி ஏன் வீண் பேச்சு?" என்று சொல்லிக் கொண்டே ராஜப்பா தன் வண்டிக்குச் சென்றான். நானும் அங்கிருந்தவர்களிடம் விடைபெற்றுக் கொண்டு போய் வண்டியில் ஏறிக் கொண்டேன்.

இதற்குப் பிறகு எத்தனையோ மாதங்கள் வரை நான் ராஜப்பாவைச் சந்திக்கச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை.

ஒரு நாள் இரவு வக்கீல் வேணுகோபாலன் எனக்கு டெலிபோன் செய்தார். அன்று ராஜப்பா எலியட்ஸ் பீச்சில் ஸ்நானம்செய்யப் போயிருந்தானாம். அவன் வெகுநேரம் நீந்தி விளையாடிவிட்டு, இருட்டிய பிறகே கரை சேர்ந்தானாம். அவன் தன் வண்டியிலேறிக் கால் பர்லாங்கு தூரம் சென்ற போது எஞ்சினிருந்த பகுதி வெடித்து வண்டி நாசமாகிப் போய் விட்டதாம். ராஜப்பாவின் உடல் சிதறுண்டு கிடந்ததாம். நான் உடனே கிளம்பிப் போய்ப் பார்த்தேன். சம்பவம், பீதாம்பரத்தின் மகன் விபத்துக்காளான இடமேயாகும். அந்தப் பகுதியில் இருந்தவர்கள், "ராஜப்பாவுக்குத் தெய்வம் கூலி கொடுத்தது" என்றார்களே தவிர அவனுக்காக யாரும் பரிதாபப்படவில்லை.

அந்த விபத்து எப்படி நேர்ந்தது என்று போலீஸ்காரர்களால் கண்டுபிடிக்க முடியவில்லை. ஏன், அதைப் பற்றி அவர்களால் ஊகிக்கவும் முடியவில்லை.

ஆனால், எனக்கு மட்டும் ஒரு சந்தேகம். பீதாம்பரம் சைன்யத்தில் கண்ணி வெடி வைக்கும் பட்டாளத்தைச் சேர்ந்தவர். அது அவருடைய கைவேலையாயிருக்குமோ? மோட்டார் எஞ்சின் உள்ள பகுதியில் ஏதாவது வெடி மருந்து வைத்திருப்பாரோ? ஆனால், அது நிரூபிக்கக்கூடிய விஷயமல்ல!

அந்த விபத்து நடந்து சில மாதங்களாகின்றன. ஏன், இன்று செப்டம்பர் மாதம் 1ந் தேதி அல்லவா? பீதாம்பரத்தின் மையனுக்குத் திதி இன்றுதான்."

மன்னார் இந்த விவரங்களைக் கூறிவிட்டு, "இந்தக் கடிதத்தைப் பாருங்கள்!" என்று இன்ஷ்யூர் கவருக்குள்ளிருந்த கடிதத்தைப் பகபதியினிடம் கொடுத்தார். அதில் எழுதியிருந்தது:

"என்னுடைய சொத்துக்களின் மதிப்பு, கையில் இன்று ரொக்கமுள்பட ரூ. 40,000 பைசா 40. இதில் இருபதில் ஒரு பங்கு 2,000 ரூபாய் 2 பைசா. இதைத் தங்கள் கட்சிக்காரர் குடும்பத்தாரிடம் கொடுத்து விடவும். கணக்கு சரியாகப் போய் விட்டது.."

பகபதி இதை இரண்டு மூன்று முறைகள் படித்துப் பார்த்தார். பிறகு, "இதைப் பீதாம்பரம்தான் அனுப்பியிருக்கிறார். அவர்தான் மோட்டார் எஞ்சின் வெடிக்கும்படி செய்தது என்று சந்தேகப் படுகிறீர்கள் அல்லவா?"

"சந்தேகமில்லை. அப்படித்தான் நடந்திருக்கிறது என்று நம்புகிறேன். ஆனால் இதை வைத்துக் கொண்டு பீதாம்பரத்தின் மீது வழக்குத் தொடுப்பதற்கில்லை. ராஜப்பா அவரிடம் பணத்துக்குக் கணக்குச் சொல்லாதிருந்திருந்தால் இப்படி நேர்ந்திராது!" என்றார் வக்கீல் மன்னார்.

மன்னாரிடம் இந்தக் கதையைக் கேட்ட சில தினங்களுக்குப் பின்னர் ஒரு நாள் காலை ஈஸிசேரில் சாய்ந்தபடி பத்திரிகை படித்துக் கொண்டிருந்த பகபதி திடுக்கிட்டு நிமிர்ந்து உட்கார்ந்தார். பாகிஸ்தானுடன் நடந்த போரில் உயிர்த் தியாகம் புரிந்த இந்திய வீரர்கள் சிலரின் பெயர்கள் அதில் வெளியாகியிருந்தன. எத்தனையோ பெயர்களுக்கிடையில் பொடி எழுத்துக்களில்தான் வெளியாகியிருந்தது என்றாலும் லெப்டினெண்ட் பீதாம்பரம் என்ற பெயர் மட்டும் பளிச்சென்று அவர் கண்ணில் பட்டால் அவருக்குத் தூக்கி வாரிப் போடாமல் என்ன செய்யும்?

---

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

# உங்கள் செலவினங்கள் இப்பொழுதுதான் ஆரம்பமாகின்றன. சேமிக்கத் துவங்கவும் இதுவே சரியான தருணமல்லவா?



ஞாபகமிருக்கட்டும், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ்தான் உங்கள் குடும்ப பாங்க் !

உங்கள் குழந்தையின் வளர்ச்சியை அனுசரித்து உங்கள் செலவுகளும் பெருகும்.

குழந்தை விரும்பும் விளையாட்டுச் சாமான்கள், அவனுக்கு உணவு வகை, பள்ளிக்கூடச் செலவுகள், துணிமணிகள், புத்தகங்கள்,

பந்துகள், இம்மாதிரி எத்தனையோ !

நிச்சயமாக அவன் ஏமாற்றம் அடைய விடமாட்டீர்கள். அப்படித்தானே ?

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸிற்கு வந்து ஒரு சேவிங்ஸ் பாங்க் கணக்கு ஆரம்பியுங்கள்.

சொற்பமாக, ஐந்தே ரூபாய்கள் இருந்தால் போதும். பிரதி மாதமும் அவனுக்காக ஏதோ இயன்ற அளவு தொகை போட்டு வாருங்கள். உங்கள் சேமிப்பு பாதுகாப்புடன் இருப்பது மட்டுமின்றி பிரதி வருடமும் 4% வட்டியும் பெறுகிறது.

தவிர உங்கள் பணம் எப்பொழுதும் உங்களுக்காகக் காத்திருக்கும். வேண்டியபோது திரும்பப் பெற்றுக் கொள்ளலாம்.

மறவாதீர்கள், நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ்தான் உங்கள் பாங்க். ஏனெனில் நாங்கள் குடும்பத்தினருக்காகவே சேவை புரிகிறோம்.



## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

அஸோஸியேட்ட் பாங்குகள் : லாயிட்ஸ் பாங்க் லிமிடெட், நேஷனல் புரொவின்ஷியல் பாங்க் லிமிடெட்

**கிளைகள் : சென்னை : 3, நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; தூத்துக்குடி : 44, பீச் ரோடு; ஹைதராபாத் : அபித் ரோட்**

